# கல்கி பொருளடக்கம்

மலர் 12 இதழ் 41 | 1953 மே 10 | விஜய ௵ சித்திரை 28உ



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



விரைவில்
வருகிறது!
பிரகாஷ் புரொடக்ஷன்ஸ்
பெற்ற தாய்
ஜி.வரலக்ஷ்மி • நாகேஸ்வர ராவ் • M.N.நம்பியார்
வஸந்தா • K.R.செல்லம்
ஸ்டுடியோ: பிரகாஷ் -- டைரக்ஷன்: பிரகாஷ் ராவ்
ஏவி எம் லிமிடெட் மதராஸ் 2.

கல்கி

மலர் 12 | தமிழ்த் திருநாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 41

# குழந்தைக் குலத்துக்கு விடுதலை!

புதிய விஜய வருடம் தென்னாட்டுக்கு என்ன நலன்களை அளிக்கப் போகிறதோ என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். ஒரு பெரிய நன்மையை ஆண்டின் ஆரம்பத்திலேயே அது கொண்டு வந்திருக்கிறது. குழந்தைக் குலத்துக்கு விடுதலை கொண்டு வந்திருக்கிறது! குழந்தையின் கல்வித் திட்டத்தில் ஒரு புரட்சிகரமான மாறுதலைக் கொண்டு வந்திருக்கிறது. குழந்தைகளின் பிற்கால வாழ்க்கை மகோந்நதம் பெற்று விளங்குவதற்கு ஒரு புதிய வழியை வகுத்துத் தந்திருக்கிறது.

குழந்தைக் குலத்தை வாழ்த்துகிறோம். குழந்தைக் குலத்தின் சார்பாகப் புதிய விஜய வருடத்துக்கு வாழ்த்துக் கூறிப் பாராட்டுகிறோம்.

• • • •

வள்ளுவர் பெருமான் ஒப்புயர்வற்ற 'திருக்குறள்' என்னும் தமிழ் மறையைத் தமிழர்களுக்கு அளித்தவர். அந்த மகா கவியின் திருநாளைக் கொண்டாடுகிறோம். அவருடைய திருக்குறளைப் போற்றுகிறோம்.

நாம் போற்றுகிறதுடன் நின்று விடுவதில்லை. எல்லாப் பள்ளிக்கூடங்களிலும் எல்லா வகுப்புக்களிலும் திருக்குறளைக் கட்டாய பாடமாக வைத்துத் திருக்குறளை எல்லாப் பிள்ளைகளும் நெட்டுருச் செய்யப் பண்ணவேண்டும் என்று பொதுக் கூட்டங்களில் தீர்மானம் போடுகிறோம்.

இது போதாது என்று, வள்ளுவர் திருநாளைச் சர்க்கார் விடுமுறை நாளாகச் செய்ய வேண்டும் என்று கிளர்ச்சி செய்கிறோம்.

ஆனால் வள்ளுவர் பெருமான் எதனால் அத்தகைய அற்புதமான அமரத்வம் வாய்ந்த நூலை இயற்ற முடிந்தது என்று மட்டும் எண்ணிப் பார்ப்பதில்லை.

முதற் சங்கம், இடைச் சங்கம், கடைச் சங்கம் ஆகிய சங்கங்களில் வீற்றிருந்து தமிழ் ஆராய்ச்சி செய்த புலவர் சிகாமணிகளும், இவர்களைத் தவிர்த்த இன்னும் எத்தனை எத்தனையோ முத்தமிழ் வித்வான்களும் இயற்ற முடியாத அற்புதத்தை வள்ளுவர் எதனால் இயற்ற முடிந்தது என்று சிந்தனை செய்வதில்லை.

மற்றப் புலவர்கள் ஏட்டுக் கல்வி பயில்வதுடனே நின்றவர்கள். பாடல்கள் பாடியும் விரிவுரைகள் நிகழ்த்தியும் வள்ளல்களிடம் பரிசுகள் பெற்று வாழ்க்கை நடத்தியவர்கள்; அல்லது பரிசு கொடுக்காதவர்களைப் பற்றி வசைபாடி விட்டு அடுத்த ஊரில் பரிசு கொடுக்கக் கூடிய வள்ளலைத் தேடிச் சென்றவர்கள்.

ஆனால் வள்ளுவரோ தமது ஜீவனத்துக்குப் பிறர் கையை எதிர்பார்க்கவில்லை. கைத்தறியில் நெசவுத் தொழில் செய்து தமது வாழ்க்கையை நடத்திக் கொண்டார். கைத்தொழில் செய்து பாடுபட்ட நேரம் போக ஒழிந்த சிறிது நேரத்தில் மட்டுமே ஏட்டுக் கல்வியில் கவனம் செலுத்தினார்.

மற்றப் புலவர்களைப்போல் வழக்கில்லாத கரடுமுரடான சொற்களைக் கண்டு பிடித்து அவற்றைக் கொண்டு அவர் பாடல்கள் இயற்றவில்லை. அம்மாதிரி தமிழ்ப் பணிக்கு அவருக்கு அவகாசமே இருக்கவில்லை.

தம் காலத்தில் வழக்கில் இருந்த எளிய சிறிய சொற்களைக் கொண்டே திருவள்ளுவர் தமிழ்மறையை இயற்றினார்.

அதனாலேயே திருக்குறள்,

"ஓதற் கெளிதாய் உணர்தற் கரிதாய்
வேதப் பொருளாய் மிகவிளங்கி"

என்று சங்கப் புலவர்கள் போற்றுவதற்குரிய நூலாக அமைந்தது. இன்றைக்கும் உலகமெங்குமுள்ள அறிஞர்கள் வியந்து பாராட்டும் தமிழ் மறையாக விளங்கி வருகிறது. உலக முள்ளளவும் விளங்கப் போகிறது.

பழைய வரலாற்றிலிருந்து புதிய சரித்திரத்துக்கு வந்து ஓர் உதாரணத்தைப் பார்க்கலாம்.

அமெரிக்காவின் பிரசித்தி பெற்ற ஜனாதிபதிகளிலே ஆப்ரஹாம் லிங்கன் தலைசிறந்த புகழ் அடைந்தவர். அமெரிக்கக் குடியரசை ஸ்தாபித்த ஜார்ஜ் வாஷிங்டனைக் காட்டிலும் மேன்மை பொருந்தியவர் ஆப்ரஹாம் லிங்கன் என்று கருதுவோர் உண்டு. அவருடைய ஆட்சியின் போது தான் உலகத்தில் நடந்துள்ள யுத்தங்களுக்குள்ளே மிக அதிசயமான யுத்தம் அமெரிக்காவில் நடந்தது. அடிமை நீக்ரோவர்களின் விடுதலைப் பிரச்னை காரணமாக அந்த உள் நாட்டு யுத்தம் எழுந்தது. விடுதலைக் கட்சியின் தலைவராக லிங்கன் உறுதியுடனிருந்து போரில் வெற்றி கண்டார்; நீக்ரோவர்களை விடுதலையும் செய்தார். அந்தச் செயலினால் உலக சரித்திரத்தில் அசோகருக்கு இணையான புகழை அடைந்தார்.

அப்படிப்பட்ட ஆப்ரஹாம் லிங்கனின் இளம் பருவ வரலாறு என்ன! பதினாறு வயது வரையில் அவர் பள்ளிக்கூடம் போகவில்லை. விவசாயப் பண்ணைகளிலும் வீடு கட்டும் இடங்களிலும் சிற்றாள் வேலை செய்து கொண்டிருந்தார். பதினாறு வயதுக்குப் பிறகு கல்வி கற்கத் தொடங்கி, வக்கீல் தொழில் செய்து, பொது ஜீவியத்தில் இறங்கி, ஜனப் பிரதிநிதியாகி, ஜனாதிபதியாகி, சரித்திரத்திலும் இடம் பெற்றார்!

ஆப்ரஹாம்லிங்கனின் சரித்திரம் நம் நாட்டில் ஆங்கிலம் படித்தவர்களுக்கெல்லாம் தெரியும்; அரசியல் வாதிகளுக்கெல்லாம் தெரியும்; கல்வி இலாகாவைச் சேர்ந்த நிபுணர்கள் அத்தனை பேருக்கும் நன்றாகத் தெரியும்.

தெரிந்திருந்து என்ன பயன்!

நூற்றைம்பது வருஷங்களுக்கு முன்னர், பிரிட்டிஷ் ஆட்சி முறையை நடத்தி வைப்பதற்கென்று ஒரு புதிய குமாஸ்தா ஜாதியைச் சிருஷ்டிப்பதற்காக மெக்காலே என்பவர் வகுத்த கல்வி முறையிலேயே நம்மவர்கள் அனைவரும் ஊறிப்போயிருந்தார்கள். அந்தக் கல்வி முறையின் கேடுகள் அவர்களுடைய இரத்தத்திலேயே கலந்து போயிருந்தன.

ஆகையால் கல்வி முறைச் சீர்திருத்தத்தைப் பற்றி எல்லாரும் பேசிக் கொண்டிருந்தார்களே தவிர, ஒருவராலும் காரியத்தில் கல்விச் சீர்திருத்தத்தை நடத்தி வைக்க இயலவில்லை.

இந்தியா சுதந்திரம் பெற்றுக் குடியரசு நாடாகி ஐந்து வருஷங்கள் ஆகி விட்டன. இந்த ஐந்து ஆண்டு காலத்தில் ஜனாதிபதியும், உதவி ஜனாதிபதியும், கவர்னர்களும், முதன் மந்திரிகளும், கல்வி மந்திரிகளும், மக்களின் பிரதிநிதிகளும், கல்வி இலாகா நிபுணர்களும் ஆயிரக்கணக்கான பிரசங்கங்கள் கல்விச் சீர்திருத்தம் பற்றி நிகழ்த்தியிருக்கிறார்கள். ஆனால் காரியத்தில் ஒன்றும் நடைபெறவில்லை.

காந்தி மகாத்மாவின் ஆத்மா திருப்தியடைவதற்காக ஆதாரக் கல்வி முறைப் பள்ளிக்கூடங்கள் ஒவ்வொரு இராஜ்யத்திலும் சிற்சில ஏற்படுத்தினார்கள். இவற்றில் படிக்கும் பிள்ளைகள் மிக மிகச் சொற்ப தொகையினர்.

பாரத நாட்டின் சுதந்திர அரசியல் சாஸனத்தில், "பத்து வருஷங்களுக்குள்ளே படிக்கும் வயதுள்ள பிள்ளைகள் எல்லாரும் படிப்பிக்கப் படவேண்டும்" என்று கூறியிருக்கிறது.

சாஸனம் நிறைவேறி மூன்று வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டது. ஆரம்பக் கல்விக்காகச் செலவழிக்கப்படும் தொகை கோடிக்கணக்கில் அதிகமாகி யிருக்கிறது. ஆனால் படிக்கும் குழந்தைகளின் தொகையில் அபிவிருத்தியே யில்லை.

சென்னை இராஜ்யத்தில் ஏறக்குறைய என்பது லட்சம் குழந்தைகள் பள்ளிக்கூடம் போகும் வயதுள்ளவர்கள் உண்டு. இவர்களில் நாற்பது லட்சம் குழந்தைகள்தான் பள்ளிக்கூடம் போகிறார்கள். இதுவும் புள்ளி விவரத்திலே மட்டுந்தான்.

சென்ற வாரத்தில் வெளியான புள்ளிக் கணக்கின்படி இந்தியாவில் எழுத்து வாசனை உள்ளவர்களின் தொகை சராசரி 100க்கு 16½ தான். சுதந்திரம் பெற்றுக் குடியரசு நடைபெறும் நாட்டில், எழுத்து வாசனை அறிந்தவர்கள் 100க்கு 16½ பேர்தான் என்பதைப் போல் மானக்கேடான நிலைமை வேறு என்ன இருக்க முடியும்!

* *

சென்னை இராஜ்யம் பற்பல துறைகளில் பாரத நாட்டுக்கே வழிகாட்டி வந்திருக்கிறது. அது போலவே, கல்வித் துறையில் உண்மையான—புரட்சிகரமான—சீர்திருத்தம் காரியத்திலே நடத்திக் காட்டி, தேசத்துக்கே ஒரு புதிய வழிகாட்டும்படியான பெருமை இப்போது சென்னை இராஜ்யத்துக்குக் கிட்டியிருக்கிறது.

முதலில், ஆரம்பக் கல்வி முறையில் இந்தச் சீர்திருத்தத்தை அமுல் நடத்த ஆரம்பித்திருக்கிறார்கள். கிராமாந்தரப் பிரதேசங்களில் மட்டும் தொடங்கி யிருக்கிறார்கள்.

மெக்காலே துரை வகுத்த குமாஸ்தா உற்பத்திக் கல்வி முறையின் அஸ்திவாரமாகவே நமது ஆரம்பக் கல்வி முறையும் இதுவரையிலும் இயங்கி வந்திருக்கிறது.

இப்போதைய ஆரம்பக் கல்வி முறை நம் குழந்தைகளை அவர்களுடைய பெற்றோர்களிடமிருந்து பிரித்தது; வீட்டு வாழ்க்கையிலிருந்து பிரித்தது; கிராம வாழ்க்கையிலிருந்து பிரித்தது; கைத்தொழிற் பயிற்சியிலிருந்து பிரித்தது.

ஏட்டுக் கல்வியையாவது சரிவரப் போதித்ததா என்றால், அதுவும் இல்லை. ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் படித்த குழந்தைகளில் 100க்கு 10 பேர் தான் உயர்தரப் படிப்புக்குச் சென்றார்கள்.

மற்ற 90 குழந்தைகள் பள்ளிக்கூடங்களில் இரண்டு மூன்று வருஷத்தில் கற்ற எழுத்தறிவை, பள்ளிக்கூடம் போவதை நிறுத்திய இரண்டு மூன்று வருஷங்களுக்குள் மறந்து விட்டார்கள்.

மேற்படிப்புக்குச் சென்ற பத்துப் பேரில் ஒருவர் வீதம் பெரிய பரீட்சையில் தேறிப் பெரிய உத்தியோகங்கள் பெற்றார்கள்.

மற்ற ஒன்பது பேர் விஷயத்தில் அந்தக் கல்வி பலவிதங்களில் கேட்டையே விளைத்தது. அவர்களைத் தன்னம்பிக்கை இழந்தவர்களாகச் செய்தது; பிறரை அண்டிப் பிழைப்பவர்களாகச் செய்தது. அவர்களையும் அவர்களுடைய சந்ததிகளையும் கையை உபயோகித்து எந்தவிதத் தொழிலும் செய்யத் தகுதியற்றவர்களாக்கியது. நாளுக்கு நாள், தலைமுறைக்குத் தலைமுறை, உடல் வலிமை குன்றி, ஜாதியே க்ஷீணித்துப் போகும்படியும் செய்து வந்தது.

இவ்வாறு, நூற்றில் ஒருவர் ஏதோ பெரிய உத்தியோகம் பெற்று டாம்பீக வாழ்க்கை நடத்தும் வசதி ஏற்படும் பொருட்டு மற்ற 99 பேருக்கு நன்மையளிக்காமல் தீமையே தரும் ஆரம்பக் கல்வி முறை அமுலில் இருந்து வந்தது.

நம்மவர்களில் தீர்க்க திருஷ்டியுள்ள அறிவாளிகள் அனைவரும் இந்த நிலைமையைக் கண்டு வருந்தினார்கள். ஆனால் பரிகாரம் எதுவும் செய்ய முடியாமல் நிராசை அடைந்திருந்தார்கள்.

இத்தகைய நிராசை நிலைமையை மாற்றி, நமது ஆரம்பக் கல்வி முறையை உண்மையிலேயே

சீர்திருத்தச் சென்னை சர்க்கார் முன் வந்திருக்கிறார்கள். நமது குழந்தைகள் அனைவரும் சுதந்திர பாரத நாட்டின் தன்னம்பிக்கை கொண்ட சுதந்திரப் பிரஜைகளாக வளருவதற்குரிய வழியை வகுத்திருக்கிறார்கள். இந்தப் புதிய புரட்சிகரமான ஆரம்பக் கல்வி முறை விஜய வருடத்தில் அமுலுக்கு வரப் போகிறது.

புதிய முறையின்படி, கிராமாந்தரங்களில் வசிக்கும் குழந்தைகள் இனி காலையோ, மாலையோ, ஒரு வேளை மட்டும் பள்ளிக்கூடம் போவார்கள். மூன்று மணி நேரம் மட்டும் பள்ளிக்கூடத்தில் இருந்து கல்வி கற்பார்கள். இப்போது ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் கற்பிக்கப்படும் முக்கியமான பாடங்கள் எல்லாவற்றையும் இந்த மூன்று மணி நேரத்திலேயே கற்றுக் கொள்வார்கள்.

மற்றொரு வேளையில், கிராமாந்தரக் குழந்தைகள் ஏதேனும் உபயோகமான கைத் தொழில் கற்றுக் கொள்வார்கள். விவசாயம், நெசவுத் தொழில், தச்சு வேலை, கன்னார் வேலை, மண்பாண்டம் செய்தல், இப்படி ஏதேனும் ஒரு வேலையில் ஈடுபடுவார்கள். பெற்றோர்களிடமே தொழிற் பயிற்சி பெறக்கூடிய அதிர்ஷ்டசாலிகள் அந்த வகைப் பயிற்சியைப் பெறுவார்கள். மற்றக் குழந்தைகளும் தொழிற் பயிற்சி பெறுவதற்குத் தக்க வசதிகள் செய்து கொடுக்கப்படும்.

புதிய முறையின்படி, கிராமங்களில் வசிக்கும் மிராசுதார்களின் பிள்ளைகள், உழவர்களின் பிள்ளைகள், உத்தியோகஸ்தர்களின் பிள்ளைகள், உபாத்தியாயர்களின் பிள்ளைகள், கைத் தொழிலாளிகளின் பிள்ளைகள், வியாபாரிகளின் பிள்ளைகள் எல்லாரும் ஒரு வேளை பள்ளிக்கூடத்தில் ஏட்டுக் கல்வி பயிலுவார்கள்; மற்றொரு வேளை ஏதேனும் ஒரு கைத்தொழில் பயிலுவார்கள்.

இத்தகைய புதிய கல்வித் திட்டத்தைப் பற்றி, "இது பழைய சாதிப் பிரிவினையை நிலை நாட்டும் முறை" என்று சிலர் ஆட்சேபம் கூறும் விந்தையைக் காண்கிறோம். இப்படிக் கூறுகிறவர்கள் ஒன்று, மெக்காலே கல்வி முறையினால் அடியோடு மூளை மழுங்கிப் போனவர்களாயிருக்க வேண்டும். அல்லது நல்லது கெட்டது அறிய முடியாத சர்வ சூனியங்களாயிருக்க வேண்டும்.

உண்மையில், புதிய கல்வி முறை பழைய சாதிப் பிரிவினையை அடியோடு ஒழிப்பதற்கு வகை செய்கிறது. வேளாளக் குழந்தைகள், பிராமணக் குழந்தைகள், ஹரிஜனக் குழந்தைகள், வன்னிய குலக் குழந்தைகள் எல்லாரும் புதிய முறையின்படி ஒரு வேளை ஏட்டுக் கல்வி கற்க வேண்டும்; இன்னொரு வேளை ஏதேனும் ஒரு தொழிற் பயிற்சி பெறவேண்டும். ஆதலின்,

"தொண்டர் என்றோர் வகுப்பு இல்லை—தொழில்
சோம்பலைப்போல் இழிவில்லை!"

என்னும் பாரதியாரின் வாக்கு நமது குழந்தைக் குலத்தைப் பற்றிய வரையில் உண்மையாகும்.

புதிய முறையின்படி கன்னாரத் தொழிலாளியின் மகன் கன்னாரத் தொழிலாளியாகத்தான் இருக்க வேண்டுமென்பதில்லை. கன்னாரத் தொழிலாளியின் மகன் ஹைகோர்ட் ஜட்ஜு ஆகலாம்; ஆனால் இப்போதைக் காட்டிலும் திறமையுள்ள ஹைகோர்ட் ஜட்ஜாக இருப்பான். அவனே என்ஜினியரிங் கலாசாலையில் சேர்ந்து பயிற்சி பெற்றால், இப்போது போல் வெறும் பிளான் போடும் என்ஜினியராக இராமல், புதிய புதிய அற்புத நுட்பம் வாய்ந்த கருவிகளைக் கண்டு பிடிக்கக் கூடிய என்ஜினியரா யிருப்பான்.

இது போலவே ஏழை உழவனின் மகன் இராஜ்யத்தின் பிரதம மந்திரி யாகலாம். சில்லறைக் கடை வியாபாரியின் மகன் பாங்கி டைரக்டர் ஆகலாம். தச்சு வேலைத் தொழிலாளியின் மகன் பெரிய தொழிற்சாலையின் டைரக்டர் ஆகலாம்.

ஏட்டுக் கல்வியும் தொழிற் கல்வியும் சேர்ந்து பயில்வதினாலேதான் மேனாடுகள் சமீப காலத்தில் புதிய விஞ்ஞான வசதிகளைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொண்டு மகோந்நதமான தொழில் வளர்ச்சியை அடைந்திருக்கின்றன.

அத்தகைய மகோந்நதத்தை நமது சுதந்திர பாரத நாடும் அடைவதற்கு நம் சந்ததிகளைத் தயார் செய்யும் திட்டம் புதிய கல்வித் திட்டம். இதை அறிந்து கொள்ள முடியாதவர்களைப் பற்றி நாம் பரிதாபப்படுவதைத் தவிர வேறொன்றும் செய்வதற்கில்லை.

## தமிழ்த் தாயின் துயரம்

●

இந்த இதழ் அச்சுக்குப் போகும் தறுவாயில், கோவையிலிருந்து திடுக்கிடச் செய்யும் துயரகரமான செய்தி வந்தது. தமிழையும் தமிழ் நாட்டையும் பரிதவிக்க விட்டு விட்டு ஸ்ரீ ஆர். கே. சண்முகம் செட்டியார் வானுலகம் எய்தி விட்டார். அவருடைய பிரிவினால் தேசம் அடைந்த நஷ்டம் கற்பனைக்கு எட்டாதது. தமிழ்த் தாயின் துயரம் நிறைந்த ஓலக் குரல் அதோ கேட்கிறது. செல்வப் புதல்வனைப் பிரிந்த அன்னைக்கு யாரால் ஆறுதல் சொல்ல முடியும்?



புதிய கல்வித் திட்டத்தினால் விளையக் கூடிய நலன்களை மீண்டு மொருமுறை சுருக்கமாகக் குறிப்பிட விரும்புகிறோம் :—

1. இந்த இராஜ்யத்தில் நாற்பது லட்சம் குழந்தைகள் இன்னும் பள்ளிக்கூடம் போகாமல் இருந்து வருகிறார்கள். இவர்களைப் படிக்க வைப்பதற்கு மூன்று "இல்லை"கள் முட்டுக் கட்டையாயிருந்து வருகின்றன. பள்ளிக்கூடக் கட்டிடங்கள் இல்லை; பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் இல்லை; ஆசிரியர்களுக்குப் போதிய அளவு நியாயமான சம்பளம் கொடுக்கப் பணம் இல்லை.

இந்த மூன்று "இல்லை"களையும் புதிய முறையின்படி ஓரளவேனும் சமாளிக்கலாம்.

இப்போதுள்ள கிராமப் பள்ளிக்கூடங்களில் இன்னொரு மடங்கு அதிக பிள்ளைகள் படிக்கலாம். இப்போதுள்ள ஆசிரியர்களைக் கொண்டே அவர்களைப் படிப்பிக்கலாம்.

அதாவது இப்போது ஓர் ஆசிரியர் முப்பது பிள்ளைகளுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுத்தால், புதிய முறையின்படி காலையில் முப்பது பிள்ளைகளுக்கும் மாலையில் முப்பது பிள்ளைகளுக்கும் படிப்புச் சொல்லித் தரலாம்.

2. ஒரே ஆசிரியரைக் கொண்டு இப்போதைப் போல் இரண்டத்தனை பிள்ளைகள் கல்வி பெறக் கூடுமாதலால், ஆசிரியர்களின் சம்பளத்தையும் ஓரளவு உயர்த்துவது சாத்தியமாகலாம்.

3. தற்சமயம் கிராமங்களில் ஆரம்பப் பள்ளிக்கூடம் போகும் பிள்ளைகளில் 100-க்கு 60 பேர் வீதம் இரண்டொரு வருஷம் படித்து விட்டு, நின்று விடுகிறார்கள். குடும்பத் தொழிலுக்கோ, வீட்டு வேலைக்கோ அவர்களுடைய உதவி அவசியமாயிருப்பதால் இது நேரிடுகிறது. அரசாங்கப் பொதுப் பணம் இவ்விதம் விரயமாகிறது.

புதிய முறையின் படி அரை நாள் குழந்தைகள் குடும்ப வேலைக்கு உதவக் கூடுமாதலால், நீடித்து அவர்களைப் பள்ளிக்கூடத்துக்கு அனுப்புவது சாத்தியமாயிருக்கும். ஆகையால், குழந்தைகளுக்கு அளிக்கும் கல்வி உண்மையில் பயன்படும். ஐந்தாறு வருஷம் விடாமல் படித்தவர்கள் எழுத்தறிவை மறக்க மாட்டார்கள்.

4. பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்படுத்திய கல்வி முறையின்படி இந்த நாட்டில் ஏட்டுக் கல்வி மட்டும் பெற்றுக் கைத் திறனை இழந்த ஒரு புதிய சாதி தோன்றி வளர்ந்து வந்தது. 'படித்த வகுப்பாரின் வேலையில்லாத் திண்டாட்டம்' என்னும் பிரச்னை ஏற்பட்டு நாளுக்கு நாள் பூதாகாரமாக வளர்ந்து வந்தது. பதினாயிரக் கணக்கான பி. ஏ.க்களும் லட்சக்கணக்கான எஸ். எஸ். எல். ஸி.க்களும் உத்தியோகம் தேடி அலையும் நிலைமை இப்போதே ஏற்பட்டிருக்கிறது. இந்தக் கல்வி முறை இப்படியே நீடித்திருந்தால், சுதந்திர அரசாங்கத்தினால் சமாளிக்க முடியாத பயங்கரப் பிரச்னையாகிவிடும் என்பதில் சந்தேகமில்லை.

புதிய ஆரம்பக் கல்வி முறையை யொட்டி உயர்தரக் கல்வியும் அமையுங் காலத்தில் மேற்கூறிய பிரச்னையே இல்லாமற் போகும். எல்லாரும் ஏட்டுக் கல்வியுடன் கைத்திறனும் படைத்திருப்பார்கள். உத்தியோகத்துக்காக ஏங்கி அலைந்து உயிரைவிட மாட்டார்கள். தன்னம்பிக்கையுடன் ஏதேனும் உபயோகமான கைத்தொழில் செய்து வாழக்கூடியவர்களா யிருப்பார்கள். பாரத சமுதாயமே முன்னேற்ற மடைவதற்கு ஏதுவாகும்.

* * *

ராஜாஜி மந்திரி சபை எத்தனை காலம் நீடித்திருக்கு மென்று சொல்ல முடியாது. இந்த மந்திரி சபையின் ஆட்சி நடக்கும் காலத்தில் ஒவ்வொரு மந்திரியும் ஏதேனும் ஒரு சிறந்த பணி செய்து பெயர் பெற்று வருவதைக் காண்கிறோம். உணவு மந்திரியும், தொழில் மந்திரியும், ரெவின்யூ மந்திரியும் செய்துள்ள சிறந்த காரியங்களைப் பாராட்டி யிருக்கிறோம்.

எல்லாரையும் மிஞ்சக்கூடிய அரும் பெரும் காரியம் ஒன்றைக் கல்வித் துறையில் டாக்டர் எம். வி. கிருஷ்ணராவ் செய்துவிட்டார். நாளைக்கே அவர் பதவியை விட்டு விலக நேர்ந்தாலும், சென்னை இராஜ்யத்துக்கு ஒரு மிகச் சிறந்த நன்மையைச் செய்து விட்டோம் என்ற திருப்தியுடன் விலகிக் கொள்ளலாம். விரைவிலேயே இந்தப் புதிய ஆரம்பக் கல்வித் திட்டத்தை மற்ற இராஜ்யங்களும் பின்பற்றும்படி நேரிடும். அப்படிப் பின்பற்றி விட்டால், "பத்து ஆண்டுகளுக்குள் நாட்டிலுள்ள எல்லாக் குழந்தைகளையும் படிப்பிக்க வேண்டும்" என்னும் அரசியல் சாஸனத்தின் ஆக்ஞையை வேறு எந்த வழியிலும் நிறைவேற்ற முடியாது.

அரசியல் சாஸனத்தின் மேற்படி ஆக்ஞையை நிறைவேற்றுவதற்குப் புதிய கல்வித் திட்டம் வழி வகுத்துத் தந்திருக்கிறது. அத் திட்டத்தை நடத்தி வைப்பதற்குச் சென்னை அரசாங்கக் கல்வி இலாகா டைரக்டர் ஸ்ரீ கோவிந்தராஜுலு அவர்கள் உற்சாகமாக முன் வந்திருக்கிறார். அவருடன் ஒத்துழைக்கும்படி கல்வி இலாகாவின் எல்லா உத்தியோகஸ்தர்களையும் ஆரம்ப ஆசிரியர் சமூகத்தையும் சமூக சேவைத் தொண்டர்களையும் பொது மக்களையும் கேட்டுக் கொள்கிறோம்.

# பரத நாட்டியம் செய்த பாக்கியம்

நமது செந்தமிழ் நாட்டில் இரண்டு அற்புதங்கள் உண்டு. அவை உலகில் வேறு எங்கும் காணமுடியாத அற்புதங்கள். ஒன்று, மாமல்லபுரத்து அழியாப் பாறைச் சிற்பங்கள். இன்னொன்று, பரத நாட்டியக் கலை.

பண்டைக் காலத்தில் பரத நாட்டியம் பாரத தேசம் முழுவதற்கும் உரிய கலையாக இருந்திருக்கக் கூடும். ஆயினும் தற்காலத்தில் அந்தக் கலையை அறிந்தவர்கள் தென்னாட்டிலேதான் உண்டு. அவர்களில் தலைசிறந்தவர் ஸ்ரீமதி பால சரஸ்வதி என்பதைப் பற்றி மாறுபட்ட அபிப்பிராயம் இருப்பதற்கே இடமில்லை.

சுமார் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் புராதன பரத நாட்டியக்கலை தமிழ் நாட்டில் மறுமலர்ச்சி பெற்றது. அதற்கு முக்கிய காரணமாயிருந்தவர் ஸ்ரீமதி பாலஸரஸ்வதி அவர்கள்.

சென்ற வாரத்தில் நடந்த பரதநாட்டியப் பள்ளிக்கூடத் திறப்பு விழாவில் நீதிபதி டி. எல். வெங்கட்ராமய்யர் அவர்கள் பேசும்போது, "பரத நாட்டியம் என்றால் காதைப் பொத்திக் கொள்ளும் அளவுக்கு ஒரு காலத்தில் அதைப் பற்றி எனக்குத் தவறான அபிப்பிராயம் இருந்தது. ஸ்ரீமதி பால ஸரஸ்வதியின் நாட்டியத்தைப் பார்த்த பிறகுதான் அக் கலையின் பெருமையைத் தெரிந்து கொண்டேன்" என்றார்.

இவரைப் போலவே படித்தவர்கள், அறிவாளிகள், கலா ரஸிகர்கள் பலரும் பரத நாட்டியத்தைப் பற்றித் தவறான அபிப்பிராயம் கொண்



● ஏப்ரல் 23-ந் தேதி சென்னை வித்வத் சபை (மியூஸிக் அகாடமி) யின் ஆதரவின் கீழ் ஸ்ரீமதி பாலசரஸ்வதி அவர்களின் பரத நாட்டியப் பள்ளிக்கூடம் ஆரம்பமாயிற்று. சங்கீத கலாநிதி காரைக்குடி சாம்பசிவ ஐயர் அவர்களும் கனம் நீதிபதி டி. எல். வெங்கட்ராமய்யர் அவர்களும் பள்ளிக்கூடத்துக்கு ஆசி கூறினார்கள்.

● ஸ்ரீமதி பாலசரஸ்வதியிடம் பரதநாட்டியக்கலை பயின்ற இரு சிஷ்யைகள் ஆடுவதையும் ஸ்ரீமதி ஜயம்மாளும் பாலசரஸ்வதியும் பாடுவதையும் படத்தில் காணலாம்.

டிருந்து, ஸ்ரீமதி பாலஸரஸ்வதியின் நாட்டியத்தைப் பார்த்த பிறகு அது எப்படிப்பட்ட அற்புதமான கலை, நமது தென்னாட்டுக்கு எவ்வளவு பெருமையளிக்கும் கலை என்பதை உணர்ந்தார்கள்.

ஆம்; வீணை தனம்மாளின் குடும்பத்தைச் சேர்ந்த ஸ்ரீமதி பாலஸரஸ்வதி பரதநாட்டியம் பயின்றது அந்தக் கலை செய்த பாக்யம் ஆயிற்று. நாளுக்கு நாள் அதன் வியாபகம் வளர்ந்தோங்கியது. வடநாட்டிலும் அதன் பெருமை பிரபலமடைந்தது. டாக்டர் ரவீந்திர நாத டாகூரைப் போன்ற மகான்கள் "பரத நாட்டியத்துக்கு ஒப்பான கலை வேறில்லை" என்றார்கள். தமிழ் நாட்டிலும் வட நாட்டிலும் உயர்ந்த குடும்பங்களைச் சேர்ந்த பெண்கள் நூற்றுக் கணக்கானவர்கள் பரதநாட்டியம் பயிலத் தொடங்கினார்கள்.

பரத நாட்டியக் கலை சென்ற பதினைந்து ஆண்டு காலத்தில் இவ்வளவு வியாபகம் அடைந்ததற்குக் காரணமாயிருந்த ஸ்ரீமதி பாலசரஸ்வதி சில காலமாகச் சொந்தக் காரணங்களினால் கச்சேரிகள் அதிகம் செய்வதில்லை.

இதைக் குறித்துப் பரத சாஸ்திரத்தை இயற்றியவரான பரத மாமுனிவரே வருத்தப்பட்டிருப்பார் என்றால், இந்தக் காலத்தில் புதிதாகப் பரத நாட்டியத்தில் பற்றுக் கொண்ட ரஸிகர்களின் ஏமாற்றத்துக்குக் கேட்க வேண்டுமா!

ஆனால் இப்போது ஸ்ரீமதி பாலசரஸ்வதி தாமே கச்சேரி செய்வதைக் காட்டிலும் சிறந்த தொண்டைப் பரத நாட்டியத்துக்குச் செய்ய முன் வந்திருக்கிறார். சிறுமிகளுக்குப் பரத நாட்டியக் கலையைக் கற்பிப்பதற்கு ஒரு பள்ளிக்கூடத்தையே ஸ்தாபித்திருக்கிறார்.

சென்ற ஏப்ரல் மாதம் 23உ. யன்று சங்கீத கலாநிதி காரைக்குடி சாம்பசிவய்யர், நீதிபதி கனம் டி. எல். வெங்கட்ராமய்யர் முதலியவர்களின் ஆசியுடன் பள்ளிக்கூடம் ஆரம்பமாயிற்று. ராயப்பேட்டை மோப்ரேஸ் சாலையிலுள்ள சங்கீத வித்வத் சபைக் கட்டிடத்தின் மேல் மாடியில் பள்ளிக்கூடம் நடந்து வருகிறது.

* * *

பரதநாட்டியக் கலையில் எத்தனையோ நுட்பமான அம்சங்கள் உண்டு. எவ்வளவோ பகுதிகளும் பிரிவுகளும் உண்டு.

தாண்டவம், லாஸ்யம் என்னும் வேறுபாடுகளையும், — நிருத்தம், நிருத்யம், அபிநயம் என்னும் பகுதிகளையும், — அலாரிப்பு, ஜதிஸ்வரம், சப்தம், வர்ணம், தில்லானா என்னும் கச்சேரி பாணி வரிசையையும் நன்கு அறிந்து அனுபவிப்பவர்கள் அக் கலையின் ஆனந்தத்தை நன்கு அனுபவிப்பார்கள். வெவ்வேறு அஸ்தங்கள் — முத்திரைகளின் பொருளை அறிந்து பார்க்கிறவர்கள் இன்னும் பூரணமாக அக் கலையின் அற்புதச் சிறப்பை உணர்ந்து அனுபவிப்பார்கள்.

இந்த நுட்பங்கள் எல்லாம் ஒன்றும் தெரியாவிடினும், சிறந்த பரதநாட்டியக் கச்சேரியைப் பார்ப்பவர்களுக்கு வேறு எந்தக் கலையிலும் ஏற்படாத உற்சாகம் உண்டாகத்தான் செய்கிறது.

முக்கியமாக, கேட்பவர்களுக்குத் தெரிந்த மொழியில் பதங்கள் பாடி அபிநயம் செய்யும் போது, யாரும் அதை அறிந்து அனுபவிக்க முடியும். அதிலும் ஸ்ரீமதி பால சரஸ்வதியின் அபிநயத்தின்போது, ரஸிகர் என்று சொல்லிக் கொள்ளும் எவரும் பரவசமடையாமலிருக்க முடியாது. "நித்திரையில் சொப்பனத்தில்" என்ற பாடலுக்குப் பால சரஸ்வதி அபிநயம் பிடிக்கும்போது, சொப்பனத்தை அவர் எத்தனை விதமாகக் குறிப்பிட்டுக் காட்டுகிறார் என்பதைக் கண்டால், நாமும் ஒரு சொப்பன லோகத்துக்கே போய் விடுவோம். "வேலவரே, உமைத் தேடி ஒரு மடந்தை" என்று பாடி அபிநயம் பிடித்தால் வேலவரும் நம் மனக் கண் முன் நிற்பார்; அவரைத் தேடும் மடந்தையும் நம் கண் முன்னால் நிற்பார். வேலவரைப் பிடித்து அந்த மடந்தையின் வசத்தில் ஒப்புவிக்க முடியவில்லையே என்று தான் நாம் கவலையுறுவோம். அபிநயக் கலையில் இன்று ஸ்ரீமதி பால சரஸ்வதிக்கு இணையானவர் வேறு யாரும் இல்லை என்று சொன்னால், அது சிறிதும் மிகைப்படுத்துவது ஆகாது.

* * *

இலங்கையில் திரிகோண மலையிலிருந்து இமய மலை அடிவாரம் வரையில், தமிழர்கள் எத்தனையோ பேர் தங்கள் பெண்களுக்குப் பரத நாட்டியம் கற்றுக் கொடுக்க வேண்டும் என்று ஆர்வம் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் தங்கள் குழந்தைகளை எங்கே அனுப்புவது என்பது பற்றி இனிமேல் யோசிக்க வேண்டியதில்லை. மியூஸிக் அகாடமியின் ஆதரவில் ஸ்ரீமதி பால சரஸ்வதி நடத்தும் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பி விட்டு அவர்கள் நிம்மதியா யிருக்கலாம்.

இந்த நாளில் பரத நாட்டியத்தின் பேரில் ஜனங்களுக்கு ஏற்பட்டிருக்கும் பிரேமை காரணமாக ஒரு விசித்திர நிலைமையும் ஏற்பட்டிருக்கிறது. பரதநாட்டியம் கற்பிப்போர் பற்பலர் முன் வந்திருக்கிறார்கள். இவர்களில் சிலர் பிராயம் ஆகாத இளைஞர்கள். பரத நாட்டிய ஆசிரியர் ஒருவரிடம் சில நாள் இருந்து பாடம் கற்று வருகிறார்கள்; பிறகு தாங்களே கற்பிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். ஆறு மாதத்திலும் மூன்று மாதத்திலும் பரதநாட்டியக் கலையைக் கற்பித்து விட்டதாகச் சொல்லி, அரங்கேற்றமும் நடத்தி விடுகிறார்கள். ஆறு மாதத்திலும் மூன்று மாதத்திலும் கற்றுக் கொள்ளக்கூடிய கலை அல்ல பரத நாட்டியம். அவ்விதம் கற்பிக்க முன்வருவோர் அதற்கு லாயக்கானவர்களும் அல்ல.

ஸ்ரீமதி பால சரஸ்வதியின் பரத நாட்டியப் பள்ளிக்கூடத்தில் சேரும் பெண் குழந்தைகள் பாக்யசாலிகள். அவர்கள் கற்கும் பரதநாட்டியம் அவர்களுடைய வாழ்க்கையையே ஆனந்த மயமாக்குவதற்கு ஓர் அரிய சாதனமாயிருக்கும். அதுமட்டுமல்ல. வீணை தனம்மாளின் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் தனம்மாளின் சங்கீத பொக்கிஷத்தையும் பகிர்ந்து பெற்றிருக்கிறார்கள். ஆகலின் ஸ்ரீமதி பால சரஸ்வதியின் மூலமாகவும் அவருடைய தாயார் ஸ்ரீமதி ஜயம்மாளின் மூலமாகவும் உண்மையான கர்நாடக சங்கீதத்தின் உருவங்களை அறிந்து பயன் அடையக் கூடும்.

நமது இந்த இதழ் அட்டையில் ஸ்ரீமதி பால சரஸ்வதியின் மலர்ந்த முகத் தோற்றத்தை மகிழ்ச்சியுடன் வெளியிட்டிருக்கிறோம். அத்துடன் அவர் அபிநயத்தின்போது பிடித்த அஸ்த முத்திரைகள் சிலவற்றையும் வெளியிட்டிருக்கிறோம். ஒவ்வொரு அஸ்த முத்திரைக்கும் விசேஷ பொருள் உண்டு. அவற்றை அறிய விரும்புவோர் "நித்திரையில் சொப்பனத்தில்" என்னும் பாடலுக்கு ஸ்ரீமதி பால சரஸ்வதி அபிநயம் பிடிக்கும்போது கவனமாகப் பார்த்துத் தெரிந்து கொள்ளலாம்.

பரத நாட்டியக் கலையைப் பிறருக்குக் கற்பித்து அக்கலையை வளர்ப்பதற்காக ஸ்ரீமதி பால சரஸ்வதி தொடங்கி யிருக்கும் பள்ளிக்கூடம் சிறந்து வளர்ந்து நீடூழி நீடித்திருக்க வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்!

# பொன்னியின் செல்வன்

கல்கி

## அத்தியாயம் 13

## குந்தவை கேட்ட வரம்

ஜோதிடரின் வீட்டுக்குள் பழுவேட்டரையர் பிரவேசித்தபோது அங்கு உண்மையாகவே குந்தவைப் பிராட்டியும் வானதியும் இருந்தார்கள்.

ஈழத்து ராணியைப் பொழுது விடிந்ததும் காணாததிலிருந்து குந்தவையின் மனம் அமைதியை இழந்து விட்டது. அதே சமயத்தில் பூங்குழலியும் காணாமற் போனது அவளுடைய கலக்கத்தை அதிகமாக்கிற்று. முதன் மந்திரி அநிருத்தரைப் பார்க்கச் சென்றாள். அச்சமயத்தில் அங்கே அருள்மொழிச் சோழனைப் பற்றிச் செய்தி வந்திருந்தது. நாகைப்பட்டினத்தில் அடித்த புயலின் காரணமாக அவன் வெளிப்பட நேர்ந்ததென்றும், திரளான மக்கள் கூடி அவனை வெற்றி முழக்கத்துடன் தஞ்சைக்கு அழைத்து வருகிறார்கள் என்றும் அறிந்தாள். குந்தவையின் பரபரப்பு எல்லையைக் கடந்து விட்டது. இதனால் ஏதோ விபரீதம் வரப்போகிறது என்று கருதினாள். பொன்னியின் செல்வனை வழியில் சந்தித்துப் பேசித் தஞ்சையில் நடந்ததையெல்லாம் தெரிவிக்க வேண்டும் என்று விரும்பினாள். அவன் பெரும் ஜனக் கூட்டம் புடை சூழத் தஞ்சைக் கோட்டையில் பிரவேசிக்க விரும்பினால், பழுவேட்டரையரின் படை வீரர்கள் அவனைத் தடுத்து நிறுத்த முயலுவார்கள். இதற்கிடையில் பூதி விக்கிரம கேசரி தென் பிரதேசத்துப் படைகளுடனே கொடும்பாளூர் வரைக்கும் வந்து விட்டார் என்று தெரிய வந்திருந்தது. இரண்டு படைகளும் தஞ்சைக் கருகில் மோதிக் கொள்ளும்படி நேரிடலாம். அதனால் தந்தையின் உள்ளம் புண்படும் என்பது நிச்சயம். அதனால் அவருடைய உயிருக்கே அபாயம் நேர்ந்து விடலாம். மேலும் என்னென்ன விளையுமோ, யாருக்குத் தெரியும்? புயற் காற்றின் காரணமாகக் குடிமக்களின் உள்ளங்கள் கொந்தளித்துக் கொண்டிருக்கின்றன. ஏதாவது ஒரு வியாஜம் ஏற்பட வேண்டியதுதான். சோழ நாடே அறியும்படியான பெரும் உள் நாட்டுக் கலகம் மூண்டுவிடக் கூடும். பிறகு அதை நிறுத்துவது எப்படி? வந்த பின்னர் நிறுத்த முயலுவதைக் காட்டிலும் முன்னாலேயே தடுக்கப் பார்ப்பது அவசியம் அல்லவா? இல்லாவிடில் இத்தனை காலமும் செய்த முயற்சியெல்லாம் வீணாகி விடுமே? ஆதலின் அருள்மொழிச் சோழனை வழியிலேயே சந்தித்துப் பழையாறையில் சிறிது காலத்துக்கு நிறுத்திக் கொள்ள வேண்டும். கடம்பூரிலிருந்து பெரிய பழுவேட்டரையரையும் தருவிக்க வேண்டும். அருள்மொழிக்கு இராஜ்யம் ஆளும் ஆசை இல்லை என்பதை அவருக்குத் தெரிவித்து, அவருடைய சம்மதம் பெற்ற பிறகுதான், தஞ்சைக்கு அவனை அழைத்துப் போக வேண்டும்......

இவ்விதம் தனக்குள் சிந்தித்து முடிவு செய்துகொண்டு, தந்தையிடம் கூடச் சொல்லிக் கொள்ளாமல் அன்னையிடமும் அநிருத்தரிடமும் மட்டும் சொல்லி விட்டு இணைபிரியாத வானதியையும் அழைத்துக் கொண்டு புறப்பட்டான். பழையாறைக்குப் போகுமுன்பு குடந்தை ஜோதிடரை இன்னொரு தடவை பார்த்து விட விரும்பினாள். கவலை அதிகம் ஏற்படும்போது வருங்காலத்தைப் பற்றி ஜோதிடம் பார்த்து அறிய விரும்புவது மனித இயல்பு அல்லவா?

வழக்கம் போல் அம்மன் கோவிலுக்கு அருகில் ரதத்தை விட்டு விட்டு ஜோதிடர் வீட்டுக்குள் புகுந்தாள். ஜோதிட

ரிடம் அவளுடைய கவலையைத் தெரிவிக்கத் தொடங்கிச் சிறிது நேரம் கூட ஆகவில்லை. அதற்குள் வீட்டு வாசலில் ஏதோ தடபுடல் நடைபெறும் சத்தம் கேட்டது. முக்கியமாக, பழுவேட்டரையரின் ஹுங்காரம் அவளுக்கு ரோமாஞ்சனம் உண்டு பண்ணியது. அந்த மாதிரி கம்பீரமாக ஹுங்காரம் செய்யக் கூடியவர் பெரிய பழுவேட்டரையர் ஒருவர்தான். தடுக்க முயன்ற ஜோதிடரின் சீடனைத் தள்ளி விட்டுப் பழுவேட்டரையர் உள்ளே வருவதாகக் காணப்பட்டது. அவர் எப்படி இங்கே வந்தார்? எதற்காக வருகிறார்? அதுவும் இந்த வேளையில்?...

ஆகா! ஒரு வேளை ஜோதிடம் கேட்கத்தான் வருகிறார் போலும்! அவர் ஜோதிடருடன் பேசுவதைக் கேட்டால் ஒருவேளை அவருடைய மனத்தில் உள்ள எண்ணங்கள் தெரியக்கூடும். இராஜ்யத்துக்கும் இராஜ குலத்துக்கும் பெரிய நெருக்கடி நேர்ந்திருக்கும் இச்சமயத்தில் பெரிய பழுவேட்டரையரின் மனப்போக்குத் தெரிந்தால் எவ்வளவோ சௌகரியமாயிருக்கும். அதைத் தெரிந்து கொள்ள இப்போது ஒரு சந்தர்ப்பம் நேர்ந்திருக்கிறது. மேலும், தானும் வானதியும் அங்கு இருப்பதைப் பார்த்தால், அவர் என்ன எண்ணிக் கொள்வாரோ என்னமோ?...... ஏன்? தவறாகத்தான் எண்ணிக் கொள்வார்! சந்தேகமில்லை. ஆகையால் அவர் கண்ணில் படாமல் மறைந்திருப்பதுதான் நல்லது......

குந்தவை, ஜோதிடரிடம் ஜாடையினால் தனது நோக்கத்தைத் தெரிவித்துவிட்டு வானதியையும் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு அவசரமாக அடுத்த அறைக்குள்ளே சென்றாள்.

அவர்கள் புகுந்த அறையின் கதவு சாத்தப்பட்ட தட்சணமே பழுவேட்டரையர் உள்ளே பிரவேசித்தார். பரபரப்புடன் எழுந்து நின்று கும்பிட்ட ஜோதிடரை உற்றுப் பார்த்துவிட்டுச் சுற்றுமுற்றும் நோக்கினார். அவர் முகத்தில் வியப்புக்கும் ஏமாற்றத்துக்கும் அறிகுறி தென்பட்டது. இது ஒரு கணநேரந்தான். உடனே சமாளித்துக் கொண்டு, "ஜோதிடரே! நான் யார் தெரிகிறதா? தனாதிகாரி பெரிய பழுவேட்டரையனே தான்! ஏன் இவ்வாறு பேந்தப் பேந்த விழிக்கிறீர்? அவ்வளவு உருமாறிப் போயிருக்கிறேனா? உம்மால் எனக்கு ஒரு முக்கியமான காரியம் ஆகவேண்டியிருக்கிறது. ஒரு பெரிய உதவி நீர் எனக்குச் செய்யவேண்டும். முதலில், சாப்பிடுவதற்கு ஏதேனும் இருந்தால் கொண்டு வாரும். ரொம்பப் பசியாயிருக்கிறது. சாப்பிட்டுக் கொண்டே சொல்ல வேண்டியதைச் சொல்கிறேன்" என்றார்.

ஜோதிடர் தட்டுத் தடுமாறி, "ஐயா! இந்த ஏழை எளியவனால் தங்களுக்கு என்ன பெரிய உதவி தேவையாயிருக்க முடியும்? இந்தக் குடிசையைத் தேடித் தாங்கள் வந்தது என் முன்னோர் செய்த பாக்கியம். தங்களுடைய அந்தஸ்துக்குத் தக்கபடி விருந்து அளிக்க என்னால் இயலாது. ஆனாலும் இந்தக் குடிசையில் உள்ளவையெல்லாம் தங்களுடையவை தான். தயவுசெய்து அமருங்கள். நின்று கொண்டிருக்கிறீர்களே? தங்களைப் பார்த்தவுடனே திடுக்கிட்டுப் போனேன். அதனால் தங்களைத் தக்கபடி வரவேற்று உபசரிப்பதற்குத் தவறி விட்டேன். ஆகா! இந்த எளியவனுடைய குடிசையில் தாங்கள் அமருவதற்குத் தகுதியான ஆசனம்கூட இல்லை. பெரிய மனது செய்து அந்தப் பலகையிலே உட்கார வேண்டும்" என்று, சற்று முன் குந்தவையும் வானதியும் உட்கார்ந்திருந்த பலகைகளைச் சுட்டிக் காட்டினார்.

பழுவேட்டரையர் அப்பலகைகளையும் அவற்றின் அருகில் சிந்தியிருந்த மலர்களையும் உற்றுப் பார்த்து விட்டு, "ஜோதிடரே! இல்லை; எனக்கு உட்கார நேரமில்லை. ஏதாவது சாப்பிடுவதற்குக் கொடுக்கக்கூடியது இருந்தால் இலையிலே சுற்றிக் கையிலே கொடுத்து விடுவீர். தஞ்சைக்கு அவசரமாக ஒரு செய்தி அனுப்ப வேண்டும். என் சகோதரன் காலாந்தக கண்டனுக்கு ...... ஓலையும் எழுத்தாணியும் தருகிறீரா?...... வேண்டாம்! ஓலை எழுதிக் கொண்டிருக்க நேரமில்லை. என் முத்திரை மோதிரத்தைக் கொடுக்கிறேன். அதை எடுத்துக் கொண்டு நீர் தஞ்சாவூர் உடனே போக முடியுமா? அல்லது வாசலில் நின்றானே உமது சீடன், நல்ல தடியனாக இருக்கிறான். அவனை அவசரமாக அனுப்ப முடியுமா?" என்று கேட்டார்.

"தங்கள் கட்டளை எதுவோ, அப்படியே செய்கிறேன். நானும் என் சீடனும், இரண்டு பேரும் வேணுமானாலும் போகிறோம். ஆனால், தனாதிபதி! பெரிய மனது செய்து சிறிது நேரம் இந்த ஏழையின் குடிசையில் அமர்ந்து, இந்த எளியவன் அளிக்கும் அமுதைத் தாங்கள் அருந்தி விட்டுப் போக வேண்டும்!"

"ஜோதிடரே! எதற்காக உம்மை ஏழை என்றும் எளியவன் என்றும் அடிக்கடி சொல்லிக் கொள்கிறீர்? உம்முடைய வீட்டைத் தேடி அரசர்களும் அரசிளங் குமரிகளும் அடிக்கடி வருவதுண்டு என்று கேள்விப் பட்டிருக்கிறேன். நான் ஒருவனே உம்மிடம் ஜோதிடம் கேட்க வராதவன். அது தவறு என்பதை உணர்ந்துகொண்டேன். ஒரு வேளை உம்மிடம் கேட்டிருந்தால், இம்மாதிரி பயங்கர விபத்துக்கள் ஏற்படாம லிருந்திருக்கலாம்......"

"ஐயா! தங்கள் மொழிகள் எனக்குப் பெரிதும் கவலையைத் தருகின்றன. என்ன விபத்து நேர்ந்தது? யாருக்கு? தங்களை இந்தக் கோலத்தில் பார்த்ததும் நான் திடுக்கிட்டது சரிதான். புயலிலும் வெள்ளத்திலும் சிக்கிக் கொண்டீர்களா? கொள்ளிடம் உடைப்பு எடுத்துக் கொண்டது என்று கேள்விப் பட்டேன். ஒருவேளை, அதனால்......? தனாதிபதி! பழுவூர் இளைய ராணி சௌக்கியமா யிருக்கிறார்கள் அல்லவா?" என்று ஜோதிடர் கேட்டதும்,பழுவேட்டரையர் பயங்கரத் தொனியில் சிரித்தார்.

"இல்லை, இல்லை! பழுவூர் இளைய ராணிக்கு ஒன்றும் நேரவில்லை. அவள் கொள்ளிடத்தில் முழுகிச் செத்துப் போய்விடவில்லை. இதுவரையில் கடம்பூர் அரண்மனையில் சௌக்கியமாகவே இருக்க வேண்டும். ஆனால் அந்தச் சண்டாளி நாளை இந்த நேரம் வரையில் உயிரோடு இருப்பாளா என்று நான் சொல்ல முடியாது. ஜோதிடரே! நீர் சொல்ல முடியுமா? இராஜ குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் எல்லாருடைய ஜாதகங்களும் உம்மிடம் இருப்பதாகக் கேள்விப் பட்டிருக்கிறேன். அது உண்மையா? நந்தினியின் ஜாதகம், நான் கிழ வயதில் அறிவு கெட்டு மணந்து கொண்ட மோகினிப் பேயின் ஜாதகம் இருக்கிறதா?"

ஜோதிடர் மேலும் பதறிப் போனவராய், "தனாதிபதி! இது என்ன சொல்கிறீர்கள்? என்னைச் சோதனை செய்கிறீர்களா? இளைய ராணியின் ஜாதகம் என்னிடம் இல்லை. அவர் பிறந்த நாளும் வேளையும் தாங்கள் தெரிவித்தால் ஜாதகம் கணிக்க முடியும்" என்றார்.

"வேண்டாம்; வேண்டாம். நந்தினியின் ஜாதகத்தை நானே கணித்துக் கொள்வேன். அவளுடைய ஆயுளை நானே, என் கையினாலேயே, முடிவு கட்டத் தீர்மானித்து விட்டேன். மற்றவர்களுடைய ஜாதகத்தைப் பற்றித் தெரிந்தால் சொல்லுங்கள். சக்கரவர்த்தியின் ஆயுர்ப் பாவம் எப்படி யிருக்கிறது? அவருடைய குமாரர்கள் இருவருடைய ஆயுர்ப் பாவமும் எப்படி யிருக்கிறது?... ஆகா! தலையை அசைக்கிறீர்! நீர் சொல்ல மாட்டீர். உம்மை நான் சோதிப்பதாகவே எண்ணுவீர். அல்லது உம்முடைய ஜோதிட சாஸ்திரம் எல்லாமே வெறும் புரட்டோ, என்னமோ, யார் கண்டது?......ஜோதிடரே! ஜாதகம் ஒரு புறம் இருக்கட்டும். சில காலமாக வானத்தில் தோன்றிக் கொண்டிருந்த தூமகேது இன்று காலையில் வானத்திலிருந்து பூமியில் விழுந்து மறைந்ததே. அது உமக்குத் தெரியுமா? தெரிந்தால், அதன் பொருள் என்ன என்று சொல்லக்கூடுமா? அது ஏதேனும் பெரிய உற்பாதத்தைக் குறிப்பிடுகிறதா? சக்கரவர்த்திக்கோ அவருடைய மக்களுக்கோ நேரப் போகிற விபத்தைக் குறிப்பிடுகிறதா? இதைக் கூட நீர் சொல்ல மறுப்பதா யிருந்தால் உம்முடைய ஜோதிடம் வெறும் புரட்டுத்தான்!..."

"தனாதிபதி! அப்படி முடிவு கட்ட வேண்டாம். இராஜாங்க சம்பந்தமான காரியங்களில் ஜோதிடம் பார்க்கக் கூடாது என்பது எங்கள் தொழிலின் பரம்பரை மரபு. இன்று காலையில் தூமகேது விழுந்ததை நான் கண்ணால் பார்க்கவில்லை. ஏதோ ஜகஜ்ஜோதியான வெளிச்சம் தோன்றியதைக் கண்டு ஆச்சரியப்பட்டு உடனே எழுந்து வெளியில் சென்று பார்த்தேன். சில நாளாக வால் குறுகி வந்து கொண்டிருந்த தூமகேதுவைக் காணவில்லை. தூமகேது தோன்றுவதும் விழுவதும் அரச குலத்தினர்க்கு அரிஷ்டத்தைக் குறிப்பிடுவதாகச் சொல்லுவார்கள். ஆனால் அது ஜோதிட சாஸ்திரத்தைச் சேர்ந்ததல்ல. ஜனங்களின் தொன்று தொட்ட நம்பிக்கை. அதில் எனக்கு அவ்வளவாக நம்பிக்கை கிடையாது. இன்று காலையிலே கூடச் சக்கரவர்த்தி சௌக்கியம் என்று தெரிந்து கொண்டிருக்கிறேன்..."

"அது நமது அதிர்ஷ்டந்தான். இன்றிரவு சக்கரவர்த்திக்கு ஒன்றும் நேரிடாமலிருக்க வேண்டும். நாளை வரையில் அவர் சுகமாயிருந்தால், அப்புறம் கவலையில்லை. பொன்னியின் செல்வனைப் பற்றி ஏதேனும் தெரியுமா?..."

"நேற்றிரவு வெகு நேரத்துக்குப் பிறகு இளவரசர் திருவாரூர் வந்து சேர்ந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். தனாதிபதி! பதினாயிரம், லட்சம் மக்கள்

அவரைச் சூழ்ந்து வந்து கொண்டிருக்கிறார்களாம். அவருடைய விருப்பத்துக்கு விரோதமாக அவரைத் தஞ்சைக்கு அழைத்து வருகிறார்களாம்..."

"ஆகா! அவர்கள் மட்டும் இளவரசரைத் தஞ்சையில் கொண்டு போய்ச் சேர்த்து விட்டால் எவ்வளவோ நன்றாயிருக்கும். ஆனால் முடியுமா? லட்சக்கணக்கானவர்கள் சூழ்ந்திருந்தாலும் யமனைத் தடுத்து நிறுத்த முடியுமா? சொல்லும், ஜோதிடரே, சொல்லும்! நீர் ஜோதிடம் சொல்லா விட்டாலும் நான் சொல்லுகிறேன். சக்கரவர்த்திக்கும் அவருடைய குமாரர்கள் இருவருக்கும் இன்றைக்குப் பெரிய கண்டம் காத்திருக்கிறது. யம தர்மன் அவர்களை நெருங்கி நெருங்கி வந்து கொண்டிருக்கிறான். சக்கரவர்த்தியின் யமன் பழுவூர் மாளிகையைச் சேர்ந்த பொக்கிஷ நிலவறையில் மறைந்திருக்கிறான். அருள்மொழியின் யமன் யானைப்பாகனுடைய அங்குசத்திலே ஒளிந்திருக்கிறான். அவர்கள் இருவரையும் தடுத்து நிறுத்திச் சக்கரவர்த்தியையும் பொன்னியின் செல்வனையும் காப்பாற்றுவது உம்முடைய பொறுப்பு. என் முத்திரை மோதிரத்தை எடுத்துக் கொண்டு உம் சீடன் தஞ்சைக்குப் போகட்டும். நீர் திருவாரூர் சென்று இளவரசருக்கு எச்சரிக்க வேண்டும். செய்வீரா! உடனே புறப்படுவீரா?"

ஜோதிடர் தத்தளித்துப் போனார். பழுவேட்டரையருக்குச் சித்தப் பிரமை பிடித்து விட்டதா என்ற சந்தேகம் அவர் மனதில் தோன்றியது. ஆனால் அப்படியும் நிச்சயமாகச் சொல்லுவதற்



இல்லை. கூறுவதெல்லாம் அறிவுக்குப் பொருத்தமாகவே இருக்கிறது. ஆத்திரத்துடனும் பரபரப்புடனும் பேசினாலும், உண்மையைச் சொல்லுகிறவராகவே தோன்றுகிறது. இந்தப் பேச்சையெல்லாம் இளைய பிராட்டியும் கேட்டுக்கொண்டிருப்பார். அவளுடைய கருத்தைத் தெரிந்து கொள்ள வேண்டும். எப்படியாவது இந்தக் கிழவரை இங்கிருந்து உடனே அனுப்பி விடவேண்டும்.

"துர்க்கா பரமேசுவரியின் அருளினால் தங்களுடைய கட்டளையை என்னால் இயன்றவரை நிறைவேற்றிவைப்பேன்!"

இப்படி ஜோதிடர் கூறிய போது உள்ளேயிருந்து பெண்கள் அணியும் பாதச் சிலம்பின் ஒலி கேட்டது.

"ஆகா! துர்க்கா பரமேசுவரி பாதச் சதங்கையை ஒலித்து அருள் புரிகிறாள். இனி, நான் கடம்பூருக்குத் திரும்பலாம். இதோ புறப்படுகிறேன்......"

"தளபதி! பசியாயிருக்கிறது என்றீர்களே? இந்த எளியவன் வீட்டில் அமுது செய்து விட்டு......"

"வேண்டாம், வேண்டாம்! என் பசி தாகம் எல்லாம் பறந்து போய் விட்டன. நானும் கடம்பூருக்குப் பறந்து போக



வேண்டும். ஆலயத்துக்கு அருகில் ரதம் ஒன்று நிற்கிறதே. அது யாருடையது. ஜோதிடரே! அதை நான் எடுத்துச் செல்லப் போகிறேன். கொள்ளிடக் கரை சென்றதும் திருப்பி அனுப்பி விடுகிறேன். ஓடத்தை மட்டும் எடுத்துக் கொண்டு!......"

"ஐயா! அந்த ரதம்... அந்த ரதம்... என் பேரில் கருணை கூர்ந்து அதை எடுத்துப் போக வேண்டாம்......"

"ஜோதிடரே! நீர் வீணாகக் கவலைப் படாதீர். சோழ நாட்டின் பட்டத்து இளவரசருடைய உயிரைக் காப்பாற்றுவதற்காக நான் அந்த ரதத்தை எடுத்துப் போகிறேன். துர்க்கா தேவியே அதற்குச் சம்மதம் தருவாள். மறுபடியும் பாதச் சிலம்பை ஒலிக்கச் செய்து தேவி அருள் புரிந்தால், சம்மதம் கிடைத்ததாக அறிந்து கொள்வேன்...அதோ, கேளும்."

இவ்விதம் பெரிய பழுவேட்டரையர் கூறிக் கொண்டிருக்கையில், இளைய பிராட்டி குந்தவை பக்கத்து அறையின் கதவைத் திறந்து கொண்டு இலேசாகப் பாதச் சிலம்பு ஒலிக்க நடந்து வந்தாள்.

பெரிய பழுவேட்டரையர் அவளைப் பார்த்து வியப்படைய வில்லை; திடுக்குறவும் இல்லை.

"தாயே! நான் ஊகித்தது சரிதான். அடுத்த அறையில் நீ இருக்க வேண்டும் என்று கருதினேன். உன் முகத்தைப் பார்த்துப் பேசுவதற்கு எனக்குத் தைரியம் இல்லை. ஆகையினாலேயே உன் காதில் விழட்டும் என்று இவ்வளவு சத்தம் போட்டுப் பேசினேன். ஜோதிடரிடம் நான் சொன்னதை யெல்லாம் கேட்டுக் கொண்டாய் அல்லவா?"

"ஐயா! மன்னிக்க வேண்டும். நான் செய்த பிழையை மன்னிக்க வேண்டும். இந்த வீட்டில் தாங்கள் திடீரென்று பிரவேசித்தபோது, தாங்கள்தான் என்பதை என்னால் நிச்சயமாக அறிய முடிய வில்லை. அதனால் தங்களுடைய பேச்சை ஒட்டுக் கேட்கும்படி நேர்ந்தது. மன்னிக்க வேண்டும்!" என்றாள் குந்தவை.

"தாயே! நான் உன்னை மன்னிப்பதற்கு ஒரு காரணமும் ஏற்படவில்லை. உன்னிடந்தான் நான் மன்னிப்புக் கேட்க வேண்டும். மன்னிப்புக் கோரத் தகுதியுடையவனா என்பதே எனக்குச் சந்தேகமாயிருக்கிறது. இன்றிரவுக்குள் கடம்பூர் சென்று, பட்டத்து இளவரசருக்கு ஏதுவும் நேராமல் தடுத்தேனானால், உன்னிடம் மன்னிப்புக் கோருவதற்கு நான் தகுதி பெறுவேன். மூன்று வருஷங்களாக இந்தக் கிழவனின் கண்கள், மோகாந்தகாரத்தினால் மூடியிருந்தன. என் கண்களைத் திறப்பதற்கு நீ எவ்வளவோ பிரயத்தனம் செய்தாய். எத்தனையோ குறிப்புக்கள் சொன்னாய். ஒன்றும் என் காதில் ஏறவில்லை. என் சகோதரன் காலாந்தக கண்டனும் என் கண்களைத் திறக்க முயன்றான். அவன் முயற்சியும் பலிக்கவில்லை. நேற்றிரவு துர்க்கா பரமேசுவரியின் கருணையினால் பாண்டிய நாட்டுச் சதிகாரர்கள் இருவரின் சம்பாஷணையை ஒட்டுக் கேட்க நேர்ந்தது. அதன் பலனாகவே உண்மையை அறிந்தேன். அந்தச் சண்டாளியை, சதிகாரியை, விஷ நாகத்தை, என் அரண்மனையிலேயே வைத்திருந்து பாலூட்டிச் சீராட்டி வளர்த்தேன். அவள் என்னைக் குலத் துரோகியாக்கினாள்; இராஜத் துரோகியாக்கினாள். சோழ நாட்டுப் பொக்கிஷத்திலிருந்து பொருளை எடுத்துப் பாண்டிய நாட்டுச் சதிகாரர்களுக்குக் கொடுத்தாள். அந்தப் பாதகி நந்தினியை இன்று இரவு கழிவதற்குள் என் கையினாலேயே கொன்றொழிய என் நெஞ்சில் கொழுந்துவிடும் நெருப்பு அணையாது..."

இவ்வாறு பழுவேட்டரையர் கூறி வந்தபோது அவர் சற்றும் எதிர்பாராத ஒரு காரியத்தைக் குந்தவை செய்தாள். திடீரென்று அவர் காலடியில் விழுந்து வணங்கினாள். பழுவேட்டரையர் இன்னது செய்வதென்று தெரியாமல் திகைத்து நின்றபோது, இளைய பிராட்டி எழுந்து நின்று, "ஐயா! எனக்கு ஒரு வரம் கொடுத்து அருள வேண்டும்!" என்றாள்.

"இளவரசி! என்னைச் சோதிக்கிறாய் போலத் தோன்றுகிறது. வேண்டாம்! என்னுடைய பாவச் செயல்கள் எவ்வளவு பயங்கரமானவை என்பதை நன்கு உணர்ந்து கொண்டேன். அவற்றுக்கு என்ன பிராயச்சித்தம் செய்து கொள்வது என்றுதான் யோசித்துக் கொண்டிருக்கிறேன். அதற்கு முன்னால், இன்றையக் கண்டத்திலிருந்து சோழ குலத்தைச் சேர்ந்த மூன்று பேரையும் தப்புவித்தாக வேண்டும். உன் தந்தைக்கும் சகோதரர்களுக்கும் இன்று தீங்கு ஒன்றும் நேரிடாமலிருக்க வேண்டும். அதற்கு எனக்கு உதவி செய். இன்று ஒருநாள் போகட்டும். நாளைக்கு நானே உன்னிடம் வந்து 'எனக்குத் தண்டனை என்ன?' 'பிராயச் சித்தம் என்ன?' என்று கேட்பேன்!" என்றார்.

"ஐயா! தங்களுக்குத் தண்டனை கொடுக்கவோ, பிராயச் சித்தம் சொல்லவோ, நான் முற்பட மாட்டேன். தாங்கள் என் பாட்டனாரின் ஸ்தானத்தில் உள்ளவர். என் தந்தையின் போற்றுதலுக்கு உரியவர். உண்மையாகவே, தங்களிடம் ஒரு வரம் கேட்கிறேன்......"

"அப்படியானால், உடனே கேள் அம்மா! வெறும் பேச்சுப் பேசுவதற்கு இப்பொழுது நேரமில்லை."

"கொடுப்பதாக வாக்கு அளியுங்கள்!"

"உனக்கும் உன் குடும்பத்துக்கும் நான் செய்து விட்ட துரோகத்துக்கு நான் கொடுக்கக் கூடியது எதுவும் ஈடாகாது. நீ எது கேட்டாலும் கொடுக்கிறேன். சீக்கிரம் கேள்!"

"இளைய ராணி நந்தினி தேவியைத் தாங்கள் ஒன்றும் செய்வதில்லை என்று வாக்கு அளிக்க வேண்டும். அதுதான் நான் கோரும் வரம்!"

"அம்மா! இதுஎன்ன விளையாட்டா? விளையாட இதுதானா சமயம்? என் முதுமைப் பிராயத்தில் நான் புத்தி கெட்டுப் போனது உண்மைதான். அதற்காக என்னை முழுப் பைத்தியக்காரனாக்கி விடப் பார்க்கிறாயா? அந்தச் சதிகாரிக்கு நான் தக்க தண்டனை கொடுக்காவிட்டால், மற்றச் சதிகாரர்களை எப்படித் தண்டிக்க முடியும்? என் கையினால் அவளைக் கொன்று விட்டுத் தான் மறுகாரியம் பார்ப்பேன். என் மனத்திலுள்ளதை யெல்லாம் சொல்லிவிட்டு, இந்தக் கிழவனை அவளால் கடைசி வரையில் ஏமாற்ற முடியவில்லை யென்பதை எடுத்துக் காட்டிவிட்டு, அவளை என் வாளினாலேயே வெட்டிக் கொல்லுவேன். அதற்குக் குறைந்த தண்டனை எதுவும் அவளுக்குக் கொடுத்தால் நியாயம் செய்தவனாக மாட்டேன். அதற்குப் பிறகு, எனக்கு என்ன நியாயமான தண்டனை என்பதையும் யோசிப்பேன். போ! அம்மா! போ! உன் தந்தையையும் தம்பியையும் இன்று வரப்போகும் கண்டத்திலிருந்து காப்பாற்றுவதற்கு வேண்டிய பிரயத்தனம் செய்!......"

"செய்கிறேன், ஐயா! ஆனால் என் சகோதரியைப் பாதுகாக்கவும் முயற்சி செய்ய வேண்டாமா? இளைய ராணி நந்தினி என் சகோதரி. அவளுக்குத் தாங்கள் என்ன தீங்கு செய்தாலும், அதுவும் சோழ குலத்துக்குச் செய்த துரோகமாகும்!"

பழுவேட்டரையர் எல்லை கடந்த திகைப்பில் ஆழ்ந்தார். "நான் இன்ன

மும் கனவு கண்டு கொண்டிருக்கிறேனா?" என்று அவர் உதடுகள் முணுமுணுத்தன.

"இல்லை, இல்லை! தாங்கள் கனவு காணவில்லை. தாங்கள் காண்பதும் கேட்பதும் உண்மைதான். சிறிது யோசித்துப் பாருங்கள். பழைய சம்பவங்களை நினைத்துப் பாருங்கள். என் சகோதரன் அருள்மொழி வர்மனைக் காவேரியில் முழுகிப் போகாமல் ஒரு மாதரசி காப்பாற்றியது நினைவிருக்கிறதா? அவள் தான் இளைய ராணி நந்தினியின் தாயார். இளைய ராணியைத் தாங்கள் மணம் புரிந்து அரண்மனைக்கு அழைத்துக் கொண்டு வந்த நாளில், என் தந்தை நினைவிழுந்து விழுந்தது நினைவிருக்கிறதா? இளைய ராணியின் அன்னையைக் காண்பதாக நினைத்தே சக்கரவர்த்தி மூர்ச்சை அடைந்தார். அவள் இறந்து விட்டதாக வெகு காலம் எண்ணிக்கொண்டிருந்தார். ஆகையால் திடீரென்று இளைய ராணியைப் பார்த்ததும் ஞாபகத்தை இழந்தார்......"

பழுவேட்டரையருக்கு வேறு சில சம்பவங்களும் நினைவுக்கு வந்தன. நள்ளிரவில் நந்தினியை அவர் சுந்தர சோழ சக்கரவர்த்தியின் முன்னால் கொண்டு போய் நிறுத்தியதும், அவளைக் கண்டு சக்கரவர்த்தி அலறியதும், அதற்கு நந்தினி கற்பித்துக்கூறிய காரணங்களும் அவருக்கு அப்பொழுது நினைவு வந்தன.

"தாயே! நீ பேசுவது விளையாட்டு அல்ல என்பதை உணர்கிறேன். விதியின் விளையாட்டுத்தான் மிக விசித்திரமாயிருக்கிறது. இளையராணி உன் தமக்கை என்றால், ஆதித்த கரிகாலனுக்கும் அவள் சகோதரியாகிறாள். இந்த உறவு உனக்கு மட்டுந்தான் தெரியுமா? இன்னும் யார் யாருக்கெல்லாம் தெரியும்? சக்கரவர்த்திக்குத் தெரியுமா?"

"சக்கரவர்த்தி இரண்டு நாளைக்கு முன்பு வரையில் என்னுடைய பெரியன்னை இறந்துவிட்டதாகவே எண்ணிக் கொண்டிருந்தார். மூன்றா நாள் அந்த மூதாட்டி நேரில் வந்த போது கூட பேய் என்று எண்ணி விளக்கை விட்டு எறிந்தார். பிறகு தான் நம்பினார்......"

"அதைப் பற்றிக் கேட்கவில்லை, அம்மா! இளைய ராணி தன் சகோதரி என்பது கரிகாலனுக்குத் தெரியுமா?"

"அவனுக்கு இதற்குள் தெரிந்திருக்க வேண்டும். எனக்கு அவன் வாணர் குலத்து வீரர் ஒருவரிடம் ஓலை கொடுத்து அனுப்பி யிருந்தான். அவரிடம் நான் சொல்லி அனுப்பினேன்......"

"ஆகா! வந்தியத்தேவனை வல்லவரையனைச் சொல்கிறாயாக்கும்!"

"ஆம், ஐயா!"

"அவன் கரிகாலனிடம் சொல்லியிருப்பான் என்று தோன்றவில்லை. சொல்லியிருந்தாலும் கரிகாலன் நம்பியிருக்க மாட்டான். எனக்கே நம்பிக்கை உண்டாக வில்லையே? அவன் எப்படி நம்புவான்? இளைய ராணிக்கு இச் செய்தி தெரிந்திருக்க முடியாது. தெரிந்திருந்தாலும் பயனில்லை. சதிகாரர்கள் வேறு விதத்தில் தங்கள் நோக்கத்தை நிறைவேற்றிக் கொள்ளப் பார்ப்பார்கள். இன்றிரவு அதற்குக் கட்டாயம் முயற்சி செய்வார்கள். அம்மா! நீ தெரிவித்த செய்தி என்னுடைய பொறுப்பை இன்னும் பயங்கரமாக்குகிறது. இளைய ராணி நந்தினி சகோதர ஹத்தி செய்யாமல் பாதுகாக்கும் கடமை எனக்கு ஏற்படுகிறது. நான் உடனே கடம்பூர் போகிறேன். நீங்கள் வந்த ரதத்தை எடுத்துக் கொண்டு போகிறேன். சக்கரவர்த்திக்கும் பொன்னியின் செல்வனுக்கும் ஒன்றும் நேராமல் பாதுகாப்பது உன்னுடைய பொறுப்பு!" என்றார்.

"ஐயா! தாங்கள் கவலைப்பட வேண்டாம். நான் இதோ தஞ்சைக்குப் புறப்படுகிறேன். பழையாறையிலிருந்து வாகனம் தருவித்துக் கொண்டு போகிறேன். பொன்னியின் செல்வனைப்பற்றிச் சிறிதும் கவலைப்படத் தேவையில்லை. அவன் பிறந்த நாளும் வேளையும் அவனைப் பாதுகாக்கும்!" என்றாள்.

"பெண்ணே! ஜோதிடத்தை நம்பி அஜாக்கிரதையாக இருந்து விடாதே! ஜோதிடர்கள் மனத்திற்குள் உண்மை தெரிந்திருந்தாலும் வெளிப்படையாகச் சொல்ல மாட்டார்கள்! இரண்டு பொருள் தொனிக்கும்படி ஏதேனும் கூறி வைப்பார்கள். காரியம் நடந்த பிறகு 'முன்னமே சொல்லவில்லையா?' என்பார்கள். ஜோதிடத்தை நம்பினாலும் ஜோதிடக்காரர்களை நம்ப வேண்டாம்!" என்று போகிற போக்கில் ஒரு சொல்லம்பைப் போட்டு விட்டுப் பழுவேட்டரையர் வெளியேறினார்.

அவர் அப்பால் சென்று சில வினாடி நேரத்துக்கெல்லாம் ஆழ்வார்க்கடியான் உள்ளே பிரவேசித்தான்.

"ஆம், ஆம்! தனாதிகாரி கூறியதை நான் ஆமோதிக்கிறேன். ஜோதிடத்தை நம்பினாலும் ஜோதிடக் காரர்களை நம்பவே கூடாது!" என்றான். (தொடரும்)



பருவங்களுடனும் பகல் - இரவின் குறிப்பிட்ட நாழிகைகளுடனும் இசைந்து வருவது இந்திய ராகங்களின் தனிச் சிறப்பு. ஒவ்வொரு ராகமும் அந்தந்த வேளையின் ரஸம் அல்லது பாவத்தை வெளியிடும் சாதனமாகும்.

தினசரி இரவிலும் பகலிலும் அந்தந்த நாழிகைக்கு ஏற்ப ராகங்கள் உருவகப்படுத்தப்படுகின்றன. அகாலத்தில் பாடும் ராகங்களுக்கு ஜீவன் போய்விடுமாம்.

# தேனீர்

இரவு பகல் எந்த வேளையிலும், எந்த நிலையிலும் தேனீர் உற்சாகம் அளிக்கிறது.

# மால்கோஷ்

மேலே காணுவது சந்திர வேளையில் பாடுவதும், கம்பீர புருஷனின் தோற்றமுடையதென்று பாவிக்கப்படுவதுமான 'மால்கோஷ்' ராகத்தின் உருவகப் படம். இந்த பிரபல மனிதனின் சுபாவ குணமான வீரம் சங்கீதப் பிரேமையினால் சாந்தமடைந்திருக்கிறது. இந்த ராகத்தின் முக்கிய ரகசியம் மகிழ்ச்சியில் காதலை எடுத்துக்காட்டுவதேயாகும்.

இந்திய 'டீ' போர்டால் வெளியிடப்பட்டது ITB 164

# சோஷலிஸம் வரவேண்டும்! இன்றேல், கம்யூனிஸம் வந்தே தீரும்!

சில காலத்துக்கு முன்பு பண்டித ஜவாஹர்லால் நேரு, சோஷலிஸ்ட் தலைவரான ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயண் அவர்களைக் காங்கிரஸ் அரசாங்கத்தில் சேர்ந்து ஒத்துழைக்கும்படி அழைத்தார். சோஷலிஸ்டுகள் பொதுத் தேர்தலில் தோல்வி அடைந்தவர்களாயிருந்தும், அவர்களில் சிலரை மந்திரி சபையில் சேர்த்துக் கொள்வதாகக் கூறினர். கடிதங்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டன; ஆனால் காரியம் நடைபெறவில்லை.

நேருஜி ஏன் இத்தகைய பிரயத்தனத்தில் தலையிட்டார் என்பது, பிற்பாடு மத்திய சர்க்காரின் நிதி மந்திரி தேசமுக் வெளியிட்ட ஒரு மணியான அபிப்பிராயத்திலிருந்து ஒருவாறு ஊகிக்கக் கூடியதா யிருந்தது.

"இந்தியா தேசத்துக்குச் சோஷலிஸமும் கம்யூனிஸமும் பொருத்தமல்ல; அவை அமுலுக்கு வர முடியாது!" என்று நிதி மந்திரி தேசமுக் திருவாய் மலர்ந்தார்.

இப்படிப்பட்ட பிற்போக்காளர்களைக் கட்டிக் கொண்டு சதா சர்வகாலமும் அழ வேண்டியிருக்கிறதே என்று நேருஜிக்கு அலுத்துப் போயிருக்க வேண்டும். ஆகையினால் தான் ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயணனை அழைத்தார் போலும்!

சைனாவுக்குச் சோஷலிஸமும் கம்யூனிஸமும் பொருத்தமல்ல என்றுதான் அந்த நாட்டுப் பிற்போக்காளர் வெகு காலம் சொல்லிக் கொண்டிருந்தார்கள். ஆனால் இன்று ருஷியாவுக்கு அடுத்தபடி சீனாதான் பெரிய கம்யூனிஸ்ட் வல்லரசாக இருந்து வருகிறது.

கம்யூனிஸம் வரும்போது "பொருத்தமா, இல்லையா?" என்று பார்த்துக் கொண்டு வருவதில்லை. அது பாட்டுக்குப் புயலும் பூகம்பமும் வருவது போல்வந்து விடுகிறது!

சோஷலிஸத்தின் தத்துவமும் கம்யூனிஸத்தின் தத்துவமும் அவற்றின் முடிவான சமதர்ம சமுதாய நோக்கம் பற்றிய வரையில் ஏறக் குறைய ஒன்றுதான்.

கம்யூனிஸம் குழப்பத்தினாலும் பலாத்காரத்தினாலும் சாதிக்கப் பார்ப்பதைச் சோஷலிஸம் அமைதியாகவும் சட்ட ரீதியாகவும் சாதிக்கப் பார்க்கிறது.

சமதர்ம சமுதாய நிலையை நோக்கி உலகமே போய்க் கொண்டிருக்கிறது. அதைத் தடுத்து நிறுத்தப் பார்ப்பது சுழற்காற்றைத் தடுக்க முயல்வது போன்ற மடமையாகும்.

பாரத நாட்டில் சோலிஷலம் கூடிய விரைவில் அமைதியான சட்டரீதியான முறைகளில் அமுலுக்கு வரவேண்டும். அதற்காக, இந்த நாட்டின் நலத்தில் பற்றுக் கொண்டவர்கள் அனைவரும் பிரார்த்தனை செய்ய வேண்டும்; பிரயத்தனமும் செய்ய வேண்டும்.

சோஷலிஸம் அமுலுக்கு வராவிடில், யார் தடுத்தும் கேளாமல் ஒருநாள் கம்யூனிஸம் வந்தே தீரும்! தேசமுக் போன்றவர்களின் 'பொருத்தமில்லை'ப் பல்லவியை அது சிறிதும் பொருட்படுத்தாது. ஆயிரம் பதினாயிரம் தேசமுக்குகளை அதல பாதாளத்தில் அழுத்தி இருந்த இடம் தெரியாமல் செய்து விட்டுக் கம்யூனிஸம் வந்து சேரும்! அப்படி அது வரும்போது செய்யும் குழப்பத் தொண்டுகளின் பலன்களையும் இந் நாட்டின் மக்கள் அனுபவித்தே தீரும்படி யிருக்கும்.

நம்மில் பலர் காங்கிரஸ் மூலமாகவே ஸோஷலிஸம் இந்நாட்டில் அமுலுக்கு வரும் என்று நம்பி யிருக்கிறோம். காங்கிரஸ் சர்க்கார்கள் படிப்படியாக அதற்கு வேண்டிய தீவிர நடவடிக்கைகளை எடுப்பார்கள் என்றும் நம்பிக் கொண்டிருக்கிறோம்.

தேசமுக் போன்றவர்களின் அறிவீனமான பேச்சுக்கள் மேற்கண்ட நமது நம்பிக்கை ஆடிப் போகும்படி செய்கின்றன.

அதுமட்டுமல்ல; பம்பாயில் ஒரு கறுப்பு மார்க்கெட் கடோத்கஜ முதலாளிக்குக் கோர்ட்டார் விதித்த முப்பது லட்சம் அபராதத்தை ஸ்ரீ தேசமுக் தம் சொந்தப் பொறுப்பில் பத்து லட்சமாகக் குறைத்து விட்டார் என்பது போன்ற செய்திகள் பொது மக்களுக்குப் பெருங் கவலையையும் உண்டு பண்ணுகின்றன.

தேசமுக் பொருளாதாரத் துறையில் பெரிய நிபுணராயிருக்கலாம். ஆனால் பாரத நாட்டின் அரசாங்கக் கொள்கைகளை வகுப்பதற்கும் நடத்தி வைப்பதற்கும் அவர் லாயக்கற்றவர் என்பது நன்கு தெளிவாகிறது.

ஏற்கெனவே கொஞ்சம் தகுதியிருந்தாலும், காலங்கடந்து கலியாணம் செய்து கொண்ட பிறகு, அந்தச் சொற்ப தகுதியையும் அவர் இழந்து விட்டார் என்று தோன்றுகிறது.

* * *

நேருஜி சோஷலிஸ்ட் தலைவர்களைத் தம் அரசாங்கத்தில் சேர்ந்து ஒத்துழைக்கும்படி வலிய அழைத்தது ஏன் என்பதை இப்போது நாம் எளிதில் ஊகித்தறியலாம் அல்லவா?

நேருஜியின் அழைப்புக்கு ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயண் இணங்கியிருந்தால் மிக்க நன்றாயிருந்திருக்கும். காங்கிரஸ் அரசாங்கக் கொள்கைகளை சோஷலிஸ்ட் பாதையில் மேலும் மேலும் திருப்புவதற்கு உதவியாயிருந்திருக்கும். நேருஜியின் கைகளுக்கு வலிவு அளித்திருக்கும்.

"சோஷலிஸ்டுகள் வெறும் தத்துவவாதிகள், காரியம் எதுவும் சாதிக்க முடியாத

வர்கள்" என்று ஒரு சாரார் கொண்டுள்ள அபிப்பிராயம் அடிபட்டுப் போயிருக்கும்.

பின்னால், பொதுத் தேர்தல் வரும்போது சோஷலிஸ்டுகள் தனித்து நின்று போட்டியிட்டால் இப்போதைக் காட்டிலும் அதிக பலம் பெறக்கூடும்.

துரதிர்ஷ்டவசமாக, நேருஜியின் முயற்சி வெற்றி பெறவில்லை. ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயண் மந்திரி சபையில் சேரவில்லை. அவர் ஒரு வேளை சேரலாம் என்று எண்ணியிருந்தாலும், சமீபத்தில் சோஷலிஸ்ட் கட்சியுடன் இணைந்த பிரஜா கட்சியாளர்கள், ஆசாரிய கிருபளானி போன்ற உருப்படாத வாய்ப்பந்தல் வீரர்கள், — அவரை நேருஜியுடன் சேர விட்டிருக்க மாட்டார்கள்.

எப்படியோ ஒரு நல்ல சந்தர்ப்பம் தவறிப் போய்விட்டது. போனது போகட்டும். ஸ்ரீ ஜயப்பிரகாச் நாராயண் முதலிய சோஷலிஸ்ட் தலைவர்கள் வெளியிலேயாவது தங்கள் கட்சியை நல்ல முறையில் புனர் நிர்மாணம் செய்து பலப்படுத்த முயல வேண்டும். ஆசாரிய கிருபளானி போன்று மனங் கசந்து போன வெறும் விவகார வாதிகளை நம்பியிருப்பதில் சிறிதும் பயன் இல்லை. கிருபளானியைப் போன்றவர்களால் சோஷலிஸ்டு கட்சிக்குப் பலக் குறைவு தானே தவிர, நன்மை ஒன்றும் கிடையாது.

பாரத நாட்டு மக்களிடையே சோஷலிஸக் கொள்கைக்குக் கணிசமான ஆதரவு இருந்தும், சென்ற பொதுத் தேர்தலில் சோஷலிஸ்டுகள் தோல்வி யடைந்ததற்குக் காரணங்களை ஆராய வேண்டும். மாகாணங்களில் அவர்களுடைய கட்சியைப் பலப்படுத்துவதற்குத் தக்க ஏற்பாடுகள் செய்யாதது ஒரு முக்கிய காரணமாகும்.

தமிழ் நாட்டைப் பொறுத்தவரையில், உருப்படாதவர்களிலே பொறுக்கி எடுத்த உருப்படாதவர்களும், உபயோகமற்றவர்களிலே பொறுக்கி எடுத்த உபயோகமற்றவர்களும் இங்கே சோஷலிஸ்ட் கட்சியை நடத்துவதாகப் பெயர் பண்ணிக் கொண்டிருக்கிறார்கள். இதனாலேயே, மற்ற இராஜ்யங்களில் சோஷலிஸ்டு அபேட்சகர்கள் காங்கிரஸுக்கு அடுத்தபடி மொத்த வோட்டுகள் பெற்றிருக்க, இங்கே மட்டும் மிகக் குறைவான வோட்டுகள் பெற்றார்கள்.

தமிழ் நாட்டில் நல்ல முறையில் சோஷலிஸ்ட் கட்சியை அமைத்து வேலை செய்வதற்கு இடம் உண்டு; அதற்கான வசதியும் வேண்டிய அளவு உண்டு.

தற்போதைய காங்கிரஸ் நிர்வாகத்தில் அதிருப்தி கொண்ட காங்கிரஸ் வாதிகள் பலர் தமிழ்நாட்டில் இருக்கிறார்கள். இவர்கள் ஒன்று சேர்ந்து புதிதாகச் சோஷலிஸ்ட் கட்சியை அமைக்கலாம். மற்றும், சோஷலிஸத்தில் நம்பிக்கை கொண்ட அறிவாளிகளையும் நிர்வாகத் திறமையுள்ள வர்களையும் சேர்த்துக் கொள்ளலாம்.

இப்படி நல்ல முறையில் புதிதாக அமைக்கப்படும் சோஷலிஸ்ட் கட்சி வருங்காலத்தில் (அதாவது ஐந்தாறு வருஷ காலத்தில்) சிறந்த செல்வாக்கு அடைய முடியும்; தமிழ் இராஜ்யத்தில் மந்திரி சபையை அமைக்கும் அளவுக்குக்கூடப் பலம் பெற முடியும்.

* * *

சோஷலிஸ்ட் அரசியல் — சமுதாயக் கொள்கைகள் நம் நாட்டில் ஜனநாயக சட்ட ரீதியான முறையில் துரித காலத்தில் அமுலுக்கு வரவேண்டியது மிக்க அவசியம்.

இன்றேல், கம்யூனிஸம் தனக்கு இயல்பான பலாத்காரக் குழப்பத் திருவிளையாடல்களைப் புரிந்து கொண்டு ஜாம் ஜாம் என்று வந்தே தீரும்!

ஒரு வேளை, கம்யூனிஸ்டுகளே சமீப கால நிகழ்ச்சிகளினால் மனம் மாறிக் குழப்பத் தொண்டைக் கைவிட்டுச் சட்ட ரீதியான முறைகளைக் கையாள உறுதி கொண்டு முன் வந்தாலும் வரலாம். யார் கண்டார்கள்?

கம்யூனிஸ்டுகளின் குரு பீடமான ருஷியாவிலேயே ஸ்டாலின் மரணத்துக்குப் பின்னர் மகத்தான மாறுதலைக் காண்கிறோமே? இந்தியக் கம்யூனிஸ்டுகள் மாற மாட்டார்கள் என்று யார் சொல்ல முடியும்?

*வட்ட மேஜை*

# வள்ளுவர் திருநாளில் அன்னதானம்

*வைகாசி அனுடத்தில் வள்ளுவர் திருநாளைக் கொண்டாடும்படியும் அன்று முக்கியமாக ஏழைகளுக்கு உணவு அளித்தலை ஒரு நிகழ்ச்சியாகச் சேர்த்துக் கொள்ளும்படியும் தாங்கள் எழுதியுள்ளதை மிகவும் மகிழ்ச்சியுடன் வரவேற்கிறேன். நாட்டில் சில இடங்களில் பஞ்ச நிலைமை நிலவியுள்ள இச் சமயத்தில் பொறுப்பற்ற பத்திரிகைகள் "பிணந்தின்னிக் கழுகும் பட்டினிச் சாவு" போன்ற திரித்துக் கூறப்படும் பொய்ச் செய்திகளினால் மக்களின் மனத்தைக் கலக்க முயன்று வருகின்றன. இந்த நிலையில், இலக்கியம், கலை, மதம் சம்பந்தமான விழாக்களில் ஏழைகளுக்கு அன்னமளித்தல் என்ற நிகழ்ச்சி இடம் பெறுமானால், பொது மக்கள் தைரியமும் உற்சாகமும் கொண்டு பஞ்சத்தை விரட்ட ஆர்வம் பெறுவார்கள். தான தர்மத்திலும் நம்பிக்கை கொள்வார்கள். தானம் பெருகில் வானம் பெருகுமென்பது தெய்வ வாக்கல்லவா!*

*எங்கள் சங்கத்தின் சார்பில் குடந்தை கஸ்தூரிபா மாதர் சங்கத்தின் ஒத்துழைப்புடன் வள்ளுவர் திருநாளன்று கும்பகோணத்தில் நூம்பது ஏழைக் குழந்தைகளுக்குத் தினசரி பால் விநியோகம் செய்யும் நிதி ஒன்று ஆரம்பிக்கப் போகிறோம் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*சென்னை* டி. எஸ். இராமநாதன்
*15—4—1953* காரியதரிசி, அன்னதான சேவக சங்கம்

துறையூர் ஜமீன்தார் அவர்களின் அருந்தவப் புதல்வியாய்த் தோன்றி, காட்டுப்புத்தூர் ஜமீன்தார் உயர் திருவாளர் ராவ்பகதூர் கே. வி. சப்தரிஷி ரெட்டியார் அவர்களின் வாழ்க்கைத் துணைவியாய் அமைந்து, நல்லறத் துறையில் இல்லற வாழ்க்கையை இனிதே நடத்தி, வள்ளுவர் வகுத்தவாறு வாழ்க்கை வாழ்ந்து வந்த திருவாட்டியார் மஹாசம்பத் கௌரி, அம்மையார் தம் 57-வது வயதில் 24-4-53 வெள்ளிக்கிழமை திருமாலின் திருவடித் தாமரை சேர்ந்தார். தமது பெயர்க் கேற்பப் பொருளும் அருளும் உடன் சேரப் பூத்துப் பொலிந்தனர். இவ்வம்மையார் இல்லறத்தின் நல்லுருவம். பெண்மையின் பிறப்பிடம், பெருமையின் இருப்பிடம், தாய்மையும் தூய்மையும் தங்குமிடம். அன்பில் இணைந்த இவர் தம் பேருள்ளமும், புன்னகைத் தவழும் முகமலர்ச்சியும், இனிமை கலந்த இன்சொல்லும், அருள்பழுத்த அறச் செயலும், பெண்மையின் பண்பனைத்தும் ஒருங்கே நன்கு புலப்படுத்துவன. தெய்வ வழிபாடும், நோன்பு நோற்றலும் விருந்தினர் பேணுதலும் அற்றார்க்குதவலுமே, தம் வாழ்க்கையின் உயரிய குறிக்கோளாகக் கொண்டு நல்வாழ்வு வாழ்ந்த இப்பெருமாட்டியின் நலத்தை மண்ணவர் கண்டு இன்புற்றனர். விண்ணவரும் விருந்தினராய் வரவேற்றனர். பிரிந்த ஆத்மா அமரர் நாட்டில் அமைதி பெறுக. இவர்தம் கணவரும் இரு ஆண் பெண் மக்களும் பேரன் பேத்திகளும் பிரிவாற்றாமை தணிக.



# சம்பூர்ண ராமாயணம்

சென்னை தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் நவாப் டி. எஸ். ராஜமாணிக்கத்தின் இணையற்ற சம்பூர்ண ராமாயண நாடகம் 90 நாட்களாக வெகு சிறப்புடன் நடந்து வருகிறது.

வாலி வதக் காட்சியையும், அதற்கு அடுத்த சுக்ரீவ பட்டாபிஷேக வைபவத்தில் கிஷ்கிந்தா வாசிகளின் குதூகல நடனத் தோற்றங்களையும் படத்தில் காணலாம்.

# கல்லின் கவலை

ரா. வீ.

சின்னங்கரேல் என்று கண்ணைப் பறிக்கும் பிரகாசத்துடன் இருந்த அந்தச் சலவைக் கல் துண்டு மிகப் பிரசித்தி வாய்ந்த ஒரு கோயிலின் வழி நடைக் கல்லாக அமைக்கப் பட்டிருந்தது. பக்தர்கள் கூட்டம் கூட்டமாகத் தினமும் அந்தக் கல்லின் மேல் காலை வைத்துக் கடவுளைத் தரிசனம் செய்யப் போய் வந்தனர். ஒருநாள் அவ்வழியே சென்ற நான், அந்தக் கல்லைப் பார்த்து, "உனக்கு உன்னுடைய தற்போதைய நிலையில் திருப்தி தானா? உன் உள்ளக் கடலில் ஆசை அலைகள் உயர்ந் தெழும்புவ தில்லையா? காலடியில் கிடந்து தவிக்கும் இந்த நிலையிலிருந்து விடுதலை பெற வேண்டும் என்ற எண்ணம் உன் உள்ளத்தில் உதிப்பதே இல்லையா?" என்று கேட்டேன்.

அந்தக் கல் என்னை வெகு அவமரியாதை தோய்ந்த கண்களுடன் பார்த்தது. பிறகு ஒரு நீண்ட பெருமூச்சைக் கக்கிவிட்டு, "நீ ஒரு பெரிய முட்டாள். சுதந்திரம் யாருக்குத் தான் பிரியம் இல்லை? முன்னேற்றப் பாதையில் முன்னேறிச் செல்ல யார்தான் விரும்ப மாட்டார்கள்? அப்படியிருக்க, நான் மட்டும் என்ன விதிவிலக்கா?" என்று கேட்டது.

நான் பிரமித்துக் கல்லாய்ச் சமைந்து நின்று விட்டேன். அந்தக் கல்லின் சொல்லில் தான் எவ்வளவு உண்மை பொதிந்திருக்கிறது? அது அவ்வாறு சொல்லவே, என் உள்ளத்தில் அதன் நிலைமையைப் பற்றி அறிந்து கொள்ள வேண்டும் என்னும் ஆவல் இன்னும் அதிகரித்து விட்டது. "நீ இதற்காக ஏதாவது முயற்சி செய்து வருகிறாயா?" என்று கேட்டேன்.

"இந்தக் கோவில் அழிந்தால் தான் எனக்கு விடுதலை. கோவிலில் தெய்வம் என்று கூறப் படும் அந்தக் கல் இருக்கிறதே, அது என் அருகில் உருண்டு வந்து கிடக்க வேண்டும். அந்த நன்னாளைத்தான் நான் ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருக்கிறேன். அப்பொழுது தான் என் எண்ணம் ஈடேறும். எனவே, நான் பரம் பொருளான பரமாத்மாவிடம் இந்தக் கோயிலைக் கூடிய சீக்கிரம் அழித்துவிட வேண்டும் என்று வேண்டிய வண்ணமாக இருக்கிறேன்" என்று கூறியது அந்தக்கல்.

*　　　*　　　*

கடவுள் அந்தக் கல்லின் வேண்டுகோளைக் கேட்டு விட்டார். அந்த மாபெரும் கோயில் ஒரு நாள் உண்மையாகவே இடிந்து விழுந்து விட்டது; தரையோடு தரையாகி விட்டது. ஏனெனில் அக்கோயிலின் மீது இடி விழுந்து விட்டது. கோயிலில் தெய்வமாக வைக்கப் பட்டிருந்த கல் துண்டு, வழி நடைத் துண்டு வேண்டிக் கொண்டது போலவே, அதன் அருகில் வந்து விழுந்து கிடந்தது.

அந்தப் பக்கம் போன நான், வழி நடைக் கல்லைப் பார்த்து, "இப்பொழுது உனக்குத் திருப்தி தானே? பரமாத்மா உன் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்துவிட்டார் அல்லவா?" என்று கேட்டேன்.

அந்தக் கல் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு விட்டு, "இல்லை, நண்பா! நான் இந்தக் கோயில் இப்படி அழிந்துவிட வேண்டும் என்று நினைக்கவில்லை. அங்கே தெய்வமாக மக்களால் வழிபடப் பட்டு வந்த இந்தக் கல் மீதுதான் என் கோபம் எல்லாம்!" என்றது.

கல்லின் சொல் எனக்கு வேடிக்கையாக இருந்தது. "அப்படியானால் பரமாத்மாவிடம் நீ இப்பொழுது என்ன ஆக வேண்டும் என்று வேண்டிக் கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டேன்.

"இந்தக் கோயில் மறுபடியும் பழைய மாதிரியே எழும்ப வேண்டும். அதில் நான்..." என்று சொல்லாமலே சொல்லித் தன் விருப்பத்தை அழகாக விளங்க வைத்தது அந்தக் கல்.

பரமாத்மா கல்லின் இந்தப் பிரார்த்தனைக்கும் கூடச் செவி சாய்த்து விட்டார். அந்த இடத்தில்



மக்கள் மனத்தைக் கவரும் மாபெரும் ஆலயம் ஒன்று நிறுவப்பட்டது. பக்தர்கள் குழாம் பழையபடியே பகவானைத் தரிசிக்கக் கூடலாயிற்று. ஆனால் அந்த வழி நடைக் கல்லுக்குப் பதிலாக வேறு கல் ஒன்று வழி நடைக் கல்லாக இருந்தது முன்னிருந்த வழி நடைக் கல் தெய்வமாகி யிருந்தது.

நான் கோயிலுக்குள் தெய்வமாகக் குடிகொண்டிருந்த அந்தக் கல்லிடம் சென்று, "இப்பொழுது உனக்குச் சந்தோஷம் தானே? இப்பொழுது நீ கோயிலின் வழிபடும் தெய்வமாக ஆகி விட்டாயே!" என்று என் மகிழ்ச்சியைத் தெரிவித்தேன்.

அந்தக் கல் கம்மிய குரலில், "நண்பா! நீ சொல்வது மெய்தான். இருந்தாலும் எனக்கு நிம்மதி இல்லை. என்னை எப்பொழுதும் ஒரு கவலை அரித்துக் கொண்டிருக்கிறது. பயம் பிடுங்கித்தின்றுகொண்டிருக்கிறது!" என்றது. எனக்கு ஏற்பட்ட வியப்பைச் சொல்லி முடியாது. அதைக் கண்ணுற்ற கல் என் கருத்தைப் புரிந்துகொண்டு பதில் கூறியது. "நண்பா! என் பிரார்த்தனைக்குச் செவி சாய்த்தது போலவே, பரமாத்மா இப்பொழுது வழி நடைக் கல்லாகக் கிடக்கும் அந்தக் கல்லின் வேண்டுகோளுக்கும் செவி சாய்த்து விட்டால் என்ன செய்வது என்று எனக்குப் பெருத்த கவலையாக இருக்கிறது. இந்தக் கவலை என்னை விட்டொழிய மாட்டேன் என்கிறதே, நான் என்ன செய்வது?"

இதே கவலை இந்தக் காலத்து அரசியல் தலைவர்களையும் வாட்டி வரும்பொழுது, கல்லின் இந்தக் கவலை உசிதமானது என்றே தோன்றுகிறதல்லவா?

ஆதாரம்: 'குஸுமாக்ரஜ'ரின் மராட்டிக் கதை

## திருவனந்தபுரத்தில் செம்மங்குடிக்குப் பாராட்டு



விஜய வருஷப் பிறப்பன்று திருவனந்தபுரம் சங்கீத வித்வத் சபை சார்பிலும், அவருடைய சிஷ்யர்கள் சார்பிலும் ராஜப் பிரமுகரின் அந்தரங்கக் காரியதரிசி ஸ்ரீ வைத்தியநாத அய்யர் அவர்கள் தலைமையில் ஆனந்தா லாட்ஜில் பாராட்டு விழாக் கூட்டம் நடைபெற்றது. தலைவர் செம்மங்குடியின் கலைத் திறனைப் பற்றிப் பாராட்டிப் பேசிய பிறகு சிஷ்யர்கள் அன்புக் காணிக்கையாகத் தங்கக் கடிகாரமும், முத்துமாலையும் குருபிரானுக்கு அளித்தனர். சங்கீத வித்வத் சபை சார்பில் தந்தப்பேழை ஒன்றும் பரிசளிக்கப்பட்டது. ஆங்கிலம், தமிழ், சமஸ்கிருதம் முதலிய பாஷைகளில் உபசாரப் பத்திரங்களும் வழங்கப்பட்டன. பின் மலையாளத்தில் ஆர். எஸ். குருப் பேசினார். சிஷ்யர்கள் சார்பில் மன்னார்குடி எம். கே. கோவிந்தசாமி தமிழில் பேசினார். பாராட்டுதலுக்கு ஸ்ரீ செம்மங்குடி அவர்கள் பதிலளிக்கையில், சிஷ்யர்களுக்குப் புத்திமதி கூறியதோடு, ரசிகர்களுக்கும் நல்லுரை கூறிப் பிறகு தமது இன்னிசையால் எல்லோரையும் இன்ப வெள்ளத்தில் ஆழ்த்தினர்.


இந்தியாவில் புகழ் பெற்ற பேனா
ஜனங்கள் அதை விரும்புவதின் சில காரணங்கள்
● உறுதியான பிளாஸ்டிக் உடலமைப்பு: நிரந்தர நிறம்.
● காற்றுப் புகாத கோர்வைகள். ஒழுகாமலிருக்க உத்திரவாதம்.
● இருபுயம் தோய்த்த நிப், வழவழப்பாக எழுதும். உறுதியாக இருப்பது.
● தங்க முலாம் பூசிய கிளிப்பின் உறுதியான பிடிப்பு.
● சீக்கிரத்தில் பொருந்தும் மூடி.
● தங்க முலாம் பூசிய பூணின் ஆகர்ஷிக்கும் சக்தி.
● எழுதும்பொழுது பேனா தானாக அழகாக அமைந்து கொள்வது.
● பொருத்தமாக செய்யப்பட்ட மை கொடுக்கும் பீடர் அடி சீக்கிரமாகவும் சீராகவும் மை கொடுக்கச் செய்வது.
● சிரான விலை 4 ரூபாய்.
ஜனங்கள் விரும்புவது
பிளேடோ-66
உழைப்பிற்கும் மதிப்பிற்கும்
மாத்ரே பேனாவின் தயாரிப்பு
PLATO
REGD.
FOUNTAIN PEN
வியாபார விவரங்களுக்கு:—
BEST FOUNTAIN PEN DEPOT, PRINCESS STREET, BOMBAY 2.
TAMIL

சூடான அல்லது
குளிர்ந்த 'ஓவல்டின்'
எல்லா காலங்களுக்கும்
உகந்த பானம்!






ஒரு டின் 'ஓவல்டின்' வீட்டில் எப்பொழுதும் தயாராக வைத்திருந்தால் வருஷத்தில் எந்த சமயத்திலும் உங்களுக்கு புஷ்டி தரும் பானத்தைப் பற்றிய கவலையேயிருக்காது. குளிர் காலத்தில் சுடச்சுட ஒரு கப் ஓவல்டின் பருகினால் குளிர் மறைந்து போகும்; கடும் வெயில் காலத்தில் குளிர்ந்த ஓவல்டின் பருகினால் சோர்வு நீங்கி புத்துணர்வு ஏற்படும். கவனியுங்கள்—ஆரோக்கியம் ததும்பும் ஓவல்டினில் ஆடைநிரம்பிய சுத்தமான பசும்பால், பழுத்த பார்லி மால்ட், சிறந்த கோக்கோ, பி & டி விடமின்கள் இருக்கின்றன. ஆகவே ஓவல்டின் உங்களுக்கு இன்றியமையாதது.



இந்த ருசி மிகுந்த உணவு பானம் வருஷம் முழுவதற்கும் உங்கள் ஆரோக்கியத்தைப் பாதுகாத்து சக்தியை அளிக்கும். உங்கள் கடையில் 'ஓவல்டின்' கேளுங்கள்.

விநியோகஸ்தர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா) லிட்.

# ஓ வ ல் டி ன்

சூடாகவோ, குளிர்ந்த பானமாகவோ பருகலாம்

OV.338

# வண்டிக்கார குருசாமி

ஆர். பார்த்தசாரதி

“அரிசி ஒரு மணிகூட இல்லை. உப்பு, பருப்பு, மிளகாய், ஒன்றுமே இல்லை.”

“உஸ், போதும் உன் இல்லைப் பாட்டு. வேறு என்ன தான் இருக்கிறது?”

“வேறு என்ன இருக்கிறது. எல்லாம் காலியாகத்தான் இருக்கிறது.”

“ஹூம்! எல்லாம் காலி! என்றுதான் நிறைந்திருக்குமோ?” என்று தன் மனைவியிடம் சொல்லிக் கொண்டே வண்டியைப் பூட்டினான் குருசாமி.

குருசாமி ஒரு ஏழை ஜட்காவாலா. அவனுடைய வண்டியின் கோலத்தையும் குதிரையின் நிலையையும் பார்த்த ஜனங்கள் அதை மறுமுறை திரும்பிப் பார்க்காமல் போய் விடுவார்கள். தினம் கிடைக்கும் ஒரு ரூபாயையோ அதற்குக் குறைவான வருமானத்தையோ எடுத்துச் சென்று தன் மனைவியினிடம் கொடுப்பான். அவள் அதை அடுத்த நாள் அவர்களுடைய ஆறு வயிறுகளைக் கழுவப் பத்திரப்படுத்தி வைப்பாள்.

இப்படியே அவன் கஞ்சி குடித்தும் குடிக்காமலும் தன் மூன்று குழந்தைகள், மனைவி, அவர்களுக்காக உழைக்கும் கிழட்டுக் குதிரை இத்தனை பேரை ஆதரித்து வந்தான்.

தன் வண்டியை ‘ரிப்பேர்’ செய்தால் சுமாரான வரும்படி கிடைக்கும் என்ற நம்பிக்கை அவனுக்கு இருந்தது. ஆனால் அதற்கு வேண்டிய பணம் யாரும் அவனுக்குக் கொடுக்க முன் வரவில்லை.

அன்றைக்கு அவன் ‘ரிப்பேர் செய்து விடுவோம்’ என்ற நம்பிக்கையில் வண்டியைப் பூட்டினான். ஆனால் தன் மனைவியின் ‘இல்லைப் பாட்டு’ அவனுடைய நம்பிக்கையை இடித்துத் தள்ளிவிட்டது. ‘உன்னிடம் போரிட்டு விட்டுப் போனால் உருப்படியாகுமே’ என்று சொல்லிக் கொண்டே புறப்பட்டான்.

அவனுடைய மனைவிக்குத் ‘திக்’ என்றது. “காலங் காத்தாலே அவருடைய மனசை முறிச்சுட்டோமே” என்று கலவர மடைந்தாள். ‘என்ன நேருமோ’ என்று பயந்து விட்டாள். “கண்ணா! எங்களைக் காப்பாற்று, பிரபு. இன்றைக்கு ஒரு இடைஞ்சலும் வராமல் இனிமேலாவது எங்களுக்குச் சந்தோஷமான வாழ்வைக் கொடுத்திடு, ஐயனே” என்று வாய் விட்டுப் புலம்பினாள் அவன் மனைவி.

* * *

குருசாமி அன்று பூராவும் அலைந்தான். அன்றைக்கு ஒரு பைசா வரும்படிகூட இல்லை. எங்கெங்கோ வண்டியைச் செலுத்தினான், நிறுத்தினான். ஒன்றும் பயனில்லை. ஏற்கெனவே இலேச மடைந்திருந்த மனம் இப்பொழுது பெரும் துயரமுற்றது. அவன் தன்னையும் மறந்து வண்டியை நிறுத்தி விட்டுத் தெரு வோரமாக நின்று கொண்டிருந்தான்.

திடீரென ‘கிரீச்’ என்ற சப்தத்துடன் அங்கு வந்த டவுன் பஸ், வண்டியின் பின் புறம் வந்து இடித்து நின்றது. ஏற்கெனவே நைந்திருந்த வார் பட்டை ஒன்று ‘டக்’ என அறுந்து விழவே, குதிரை விலகி, ஏர்க்கால் மேலே தூக்கி, வண்டி விகாரமாய்க் காட்சி அளித்துக் கொண்டு நின்றது.

பஸ்ஸிலிருந்து டிரைவர், கண்டக்டர் ஒரு சில பிரயாணிகள் வந்து, “ஏண்டாப்பா, வண்டியை நிறுத்திட்டு ராஜா கணக்கா நிக்கிறியே. புத்தி இல்லை? இப்போ யாரு சொத்துக்கடா நஷ்டம்?” என்று பலவாறு ஏசவே குருசாமிக்கு நிலைகொள்ள வில்லை. வண்டியை அப்படியே விட்டு விட்டு ‘விடு’ ‘விடு’ என்று வேகமாய் வீட்டை நோக்கி நடையைக் கட்டினான்.

அவனுடைய அந்தகைய வருகை அவனுடைய மனைவிக்குத் திகிலை யுண்டாக்கிற்று. என்ன நேர்ந்ததென்று கேட்கவும் பயம். அவள் மனம் வேதனையால் தத்தளித்தது.

“இன்றைக்கு வண்டியும் காலிதான்!” என்றான் கரகரத்த குரலில்.

அவள் “ஐயோ! என்ன நேர்ந்திடுச்சி?” என்றாள். நடந்த விஷயத்தை அவன் சொல்ல எல்லோரும் சேர்ந்து அழ ஆரம்பித்தனர்.

வண்டிக்கார குருசாமிக்கு வாழ்க்கையில் எத்தனையோ குறைபாடுகள் உண்டு. நல்ல உணவு கிடையாது; நல்ல உடை கிடையாது. எந்த நேரமும் கவலைதான். ஒன்றில்லாவிட்டால் ஒன்றுக்காகக் கவலைப்பட்டுக் கழிப்பதே தொழிலாகி விட்டது. இந்தக் கஷ்ட



ஜீவனத்தில் அவனுக்குக் கொஞ்சத்துக்குக் கொஞ்சம் ஆதரவு அளித்தது ஜட்கா வண்டி தான். அதன் நிலையும் இப்படியாகி விட்ட தென்றால், அவன் வாழ்க்கையில் படர்ந்துள்ள இருளில், கொஞ்ச நஞ்சம் தெரிந்து வந்த ஒளிக் கிரணமும் அஸ்தமித்து விட்டது என்றல்லவா ஆகிறது! பாவம், குருசாமி!

ஆயினும் அவன் ஒரு விதத்தில் அதிர்ஷ்டசாலி. அவனுக்கு ஒரு உயிர் நண்பன் இருந்தான். 'உடுக்கை இழந்தவன் கை போலே, ஆங்கே இடுக்கண் களைவதாம் நட்பு' என்று குறளாசிரியர் கூறினர் அல்லவா! அந்த கைய குணம் படைத்த நண்பன் அவன்!

★

"டேய் குருசாமி, வாடா வெளியே" என்ற மிரட்டலைக் கேட்டுத்தான் வெளியே வந்தான் குருசாமி. வெளியே பஸ் டிரைவரையும் தன் நண்பன் ஜயாசாமியையும் கண்டதும் அவனுக்குப் பயம் பிடித்து உலுக்கி விட்டது.

"என்டா ஒப்பாரியா வைக்கிறே?" என்று குருசாமியைப் பார்த்துச் சொல்லி விட்டு பிறகு டிரைவர் பக்கம் திரும்பி "நீங்க போங்க! நான் சரி செய்துடுறேன்" என்று கூறி டிரைவரை அனுப்பியவுடன்தான் குருசாமிக்குக் கொஞ்சம் உயிர் வந்தது.

"என்டா, சோமாரி முழிக்கிறே? உக்காரடா, விசயத்தைச் சொல்றேன். அந்தத் தடி டிரைவர் வண்டியைக் கொண்டு வந்து 'ராங் சைட்'லேதான் நிறுத்தினன். அதைக் கூட நீ கவனியாமே அவனுடைய மிரட்டலுக்குப் பயந்து ஓடியாந்துட்டாயே! உம்.

"கண்டக்டர் உன் வண்டியைச் சரியாக நிமிர்த்தப் போனன். எனக்குக் கோபம் வந்திடுச்சி. 'டேய் வண்டியை எவனாவது தொட்டீங்க, அப்புறம் சாட்டை அடி தாங்க மாட்டீங்க. பிரேக் இன்ஸ்பெக்டரையாவது சப் இன்ஸ்பெக்டரையாவது கூட்டிக் கிட்டு இதோ ஓடியாந்துடுறே'ன்னு உருட்டினேன், பாரு. எல்லாம் அசந்துட்டாங்க. அப்புறம் அவுங்க இவுங்க சொல்லி டிரைவர் பதினைந்து ரூபாயைத் தூக்கிக் கொடுத்தான், 'ரிப்பேர் செலவுக்கு' இன்னு. வண்டி பட்டறையிலே இருக்குது; செலவு இரண்டு மூன்னுக்குமேல் ஆகாது. போய்ச் சொந்த வண்டியை எடு, போ. இந்தா ரூபாயை வைச்சுக்கோ" என்று சொல்லிப் பதினைந்து ரூபாயைக் குருசாமியின் கையில் திணித்தான்.

குருசாமியும் அவன் மனைவியும் ஆயிரம் தடவை எண்ணிப் பார்த்தனர். அவன் மனைவி தன் பிரார்த்தனையைக் 'கிருஷ்ண பரமாத்மா' நிறைவேற்றி விட்டார் என்று பெருமிதம் கொண்டாள். அவன் தன் வேலையைக் குதூகலத்துடன் செய்தான்.

அடுத்த நாள்முதல் குருசாமி நிறையச் சம்பாதித்து வந்து மனைவியின் கையிலேயே கொடுத்தான். 'இல்லை' பாட்டும் பறந்தது!

# தேகம் சிலிர்த்தது!

"கள்வனின் காதலி" தொடர் கதையாய்ப் பத்திரிகையில் வெளியான காட்சிகளிலேயே மிகவும் என் மனத்தைக் கவர்ந்தது. பல வருடங்களுக்கு முன் படித்த அந்த காவியில் உள்ள வர்ணனைகளும், கதா பாத்திரங்களும், அத்தியாயங்களின் பெயர்களும் என்றும் என் மனத்தை விட்டு அகலாது. இப்பொழுதும் அந்த காவியை வாசிக்க எனக்கு சலிப்பு ஏற்படுவதில்லை.

முரட்டு முத்தையன், அபலைஅபிராமி, குதுகார சங்குப் பிள்ளை, போக்கிரி புலிப்பட்டி ரத்தினம், கம்பீரமான கல்யாணி, கருணையே உருவான கமலபதி, ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஸர்வோத்தம சாஸ்திரியார், அவருடைய மனைவி இவர்கள் எல்லோரையும் ஒன்று கூட்டி "கள்வனின் காதலி"யைச் சிருஷ்டித்த கற்பனையை நான் பலமுறை வியந்திருக்கிறேன். கடைசியில் கல்யாணி தன்னுடைய அவசர புத்தியினால் முத்தையனை போலீசாரிடம் காண்பித்துக் கொடுத்ததினால், போலீசார் அவனைச் சுட்டுத் தள்ளி அவன் துடிப்பதையும் கல்யாணி தான் செய்த தவறுக்காக வருந்திக் கதறுவதையும் நான் படித்துக் கண்ணீர் விட்டு இந்த காவியின் ஆசிரியர் இதை இவ்வளவு துக்ககரமாக முடித்து விட்டாரே என்று கோபமும் தாபமும் அடைந்திருக்கிறேன். "கள்வனின் காதலி"யை ஒரு நாடகமாகவோ பேசும் படமாகவோ காண வேண்டுமென்று நான் பல வருடங்களாக ஆவலா யிருந்தேன். ஸ்ரீ டி.கே. சண்முகம் சகோதரர்கள் 'கள்வனின் காதலி'யை நாடகமாகநடிப்பதாகக்கேள்விப் பட்டேன். ஆனால் பல சம்பவங்கள் கொண்ட ஒரு காவியை அதன் சுவை குன்றாமல் நடிக்க முடியுமா என்று எனக்கு ஒரு சந்தேகம் இருந்தது.

தஞ்சைக் கலைக் காட்சியில் "கள்வனின் காதலி"யை டி. கே. சண்முகம் சகோதரர்கள் 14-4-53 ல் நடிக்கின்றனர் என்று அறிக்



"வானம்பாடிகள் போலே பிரேமகீதம் பாடுவோம்."



"உங்களுக்குப் புரிஞ்சுதோ!"

(திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி சுவாமி சபாவின் ஆதரவில் நடந்த "கள்வனின் காதலி" நாடகத்தில் ஒரு குதூகலமான கட்டம்.)

தேன். பல வருடங்களாக நான் ஆவலுடன் எதிர்பார்த்திருந்த நாடகம் ஆதலால் அன்று மாலை கலைக்கண் காட்சிக்குச் சென்று திறந்தவெளி அரங்கில் அமர்ந்தேன். என்னைப் போல நாடகத்தைக் காண ஆவலுடன் காத்துக் கொண்டு அமர்ந்திருக்கும் மாபெரும் ஜனத்திரளைக் கண்டேன்.

மாலை 7-மணிக்கு நாடகம் ஆரம்பமாயிற்று. 'திருடன்' என்ற சொல்லைக்கூடப் பொறுக்காத முத்தையன் சமூகத்தினால் திருடனாக மாறும்படி நேரிட்டதையும், அவனுடைய காதலி கல்யாணியையும், கள்ளங்கபடமற்ற அபிராமியையும், கடமைக்கும் மனிதத் தன்மைக்கே உரிய பாச அன்பிற்கும் இடையில் அகப்பட்டுக் கலங்கும் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் ஸர்வோத்தம சாஸ்திரியாரையும், அவரை அடக்கி அவருக்கு ஒவ்வொரு விஷயத்தையும் புரியவைக்க முற்படும் அவருடைய மனைவியையும் நான் அங்கு கண்டேன். நாடகத்தின் ஆரம்பத்தில் கொள்ளிடக்கரை நாணற் காட்டிலிருந்து புறப்பட்டு பூங்குளம் கிராமம், திருப்பரங்கோயில் மடம், தாமரை ஓடைப் பண்ணை, சாரதா வித்யாலயம் முதலிய இடங்களுக்குச் சென்று கடைசியாகத் திரும்பவும் கொள்ளிடக் கரைக்கு வந்து அதே நாணற்காட்டில் முத்தையனைப் போலீசார் சுட்டு அவன் துடித்துப் புலம்புவதையும், கண்ணீர் விட்டுக் கதறும் கல்யாணியையும், கலங்கி நிற்கும் சர்வோத்தம சாஸ்திரியாரையும், அருமை கண்மணி இழந்த கமலபதியையும் கண்டும், கல்யாணி கடைசியாகப் பாடும் "வானம் பாடிகள் போல" என்ற பாட்டைக் கேட்டும் என் தேகம் சிலிர்த்து விட்டது. சிறிது நேரம் சென்றதும் சந்தடி கேட்டுத் திடுக்கிட்டு, கண்ணை மறைத்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு பார்த்த பின்புதான் நான் தஞ்சைக் கலை விழா, திறந்தவெளி நாடக அரங்கில் "கள்வனின் காதலி" என்னும் நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன் என்றும், நாடகம் முடிந்து விட்டதால் எல்லோரும் எழுந்து வீடு திரும்புகின்றனர் என்றும் அறிந்து என்னுடைய வீட்டிற்குத் திரும்பி வந்தேன்.

நான் முதலில் கூறிய சந்தேகம் நாடகத்தைப் பார்த்தபின்பு என்னை விட்டு அகன்று விட்டது. பொதுவாக நாடகமென்றால் இரண்டு காட்சிகள் ஆனதும் பிறகு பத்து நிமிஷமோ ஐந்து நிமிஷமோ ஆர்மோனியக்காரரும் பின்பாட்டுக்காரரும் நமக்குத் தலைவலி உண்டாக்குவதும், அந்தச் சமயங்களில் ஜனங்கள் வம்பு பேசுவதும், திரும்பவும் அடுத்த காட்சி ஆரம்பமாகும் பொழுது 'சப்தம் செய்யாதே,' 'சப்தம் செய்யாதே' என்று கூச்சல் போட்டு ஜனங்களை அடக்கி நாடகத்தைத் தொடர்ந்து நடத்துவதும் வழக்கம். நான் பல வருடங்களுக்கு முன் பார்த்த காட்சிகள் சில, நடிகர்கள் பேசுவது ஆகியவை, நாம் பார்ப்பது நாடகம், வெறும் நாடகம் தான், உண்மையானதில்லை என்று நமது முதுகில் அறைந்து கூறுவதுபோல இருக்கும்.

டி. கே. சண்முகம் சகோதரர்களும் மற்ற நடிகர்களும் முத்தையனாகவும், சர்வோத்தம சாஸ்திரியாகவும், அவருடைய மனைவியாகவும், கல்யாணியாகவும், அபிராமியாகவும் அவதரித்திருந்தனர் என்றே கூறலாம். வசனத்தின் விறுவிறுப்பும், மளமளவென்று மாறும் காட்சிகளும், நடிகர்களுக்கேற்ற வேஷப் பொருத்தமும் சேர்ந்து ஜனங்களைச் சுமார் நான்கு மணி நேரம் அசையாதிருக்கச் செய்து விட்டன. பசி, தாகத்தை மறந்து கலைக்கூடத்திலுள்ள சிற்பங்களைப் போல் அசையாது நாடகத்தை அனுபவித்து ரசித்தனர்.

டி. கே. சண்முகம் சகோதரர்கள் திரும்பவும் எங்கள் ஊருக்கு வந்து உணர்ச்சி நிரம்பிய நாடகங்களை நடித்து மகிழ்விக்கும்படி கோருகிறேன்.

தஞ்சாவூர்
20—4—53

நீலாயதாக்ஷி கிருஷ்ணசுவாமி

# தமிழ்க் களஞ்சியம்

டி. கே. சி

## 27. செடிதான் உண்டோ அங்கே?

மகள் பாலைவனத்தில் நடந்து போனாள். அதைக் கேட்டுத் தாயின் உள்ளம் நைகிறது என்ற துறைதான்.

தமிழ் பாஷையும் தமிழ் நாட்டு அனுபவங்களும் ஒன்றாய்ச் சேர்ந்து கவியைச் சிருஷ்டித்து விடுகிறது. அற்புதந்தான் அது.

பெண் சின்னஞ்சிறு பசலை. விளையாடிக் கொண்டிருக்கிற பசலை. தாயை விட்டுப் பிரியாது. தாயுடனேயே சதா இருக்கும். அதன் விளையாட்டுக்களைப் பார்த்துப் பார்த்துச் சந்தோஷப் படுகிறவள் தாய்.

இத்தகைய பெண் ஒரு இளைஞனோடு போய் விட்டாள். பாலைவனத்தில் ரொம்ப ரொம்ப கஷ்டப்பட்டுத் தள்ளாடித் தள்ளாடி நடந்து போகிறாள். இந்தச் செய்தியைக் கேட்ட தாய் அப்படியே உருகி விடுகிறாள்.

மைனாப் பக்ஷியை அருமையாய் வளர்த்து அதனோடு கொஞ்சிக் கொஞ்சி விளையாடிக் கொண்டிருப்பாள் பெண். அப்படியே கிளியோடும் கொஞ்சிக் கொண்டிருப்பாள்.

காட்டாறுதான்; புதிதான வெண் மணல் வந்து பரந்து கிடக்கிறது. பெண்ணுக்கு ஒரே சந்தோஷம். மணலைக் கொண்டு பலவிதமான பாவை உருவங்கள் செய்து விளையாடுவாள். கஷ்டப் படுத்தித் தான் அவளை வீட்டுக்கு அழைத்து வந்து சாப்பிடச் செய்ய வேண்டி யிருக்கும்.

இன்னொரு விசித்திரமான விளையாட்டு: குன்றைப் பார்த்து நிற்கிறது. அப்படிக் குன்றைப் பார்த்த வண்ணமாகவே பின்புறமாக ஓடுகிறது. அப்போது குன்றும் நம்முடன் ஓடி வரும். இந்தத் தோற்றம் குழந்தைகளுக்கு நல்ல விளையாட்டு. "மலையே வா, மலையே வா" என்று உரத்த குரலில் அழைத்துக் கொண்டு ஓடும் குழந்தைகள்.

மேலும் தாயுடன் ஒட்டிக் கொண்டே இருக்கும். செடிகளைக் கண்டு விட்டால் அவ்வளவுதான் ஒரே வெறிதான், சாப்பாடு வேண்டாம்.

இத்தகைய பெண்ணல்லவா பாலைவனத்தின் கொதிப்பு தாங்க முடியாமல் கஷ்டப்பட்டு நடந்து செல்லுகிறாள்.

> பூவைஉண் டோ, புனக்
> கிள்ளைஉண் டோ, வெண்
> புதியம ணல்ப்
>
> பாவைஉண் டோ, கற்ற
> சிற்றிலுண் டோ, குன்று
> பார்த்தலைக் கத்
>
> தேவைஉண் டோ, பெற்ற
> பாவிஉண் டோ, மற்றுன்
> செடிஉண் டோ,—
>
> யாவைஉண் டேமக—
> ளேசெல்ல நீயவ்
> அருஞ்சுர மே?

[பூவை: மைனா; புனக்கிள்ளை: ஏதேச்சையாய்த் திரிகிற கிளி; தேவை உண்டோ: அவசியம் இல்லை—பாலைவனத்தில் குன்றேது ஒன்றேது; பெற்ற பாவி: தான் தான்; அருஞ்சுரம்: கடும் பாலை]

தாயாகிய பாத்திரம் எவ்வளவு அரிய சோக பாவத்தோடு பேசுகிறது. தமிழ் பாஷை அற்புதமாய்ச் சாதிக்கிற காரியம்! இத்தகைய அற்புதக் கவியைப் பாடிய கவிஞர் யாராய் இருந்தால் நமக்கென்ன?



தாமோதர் வாலி கார்ப்பரேஷன் பிராஜக்ட் ஆபீஸர் ஸ்ரீ வி. ஏ. ரங்கராஜன் அவர்களின் புதல்வி சௌ. சரஸ்வதிக்கும் சென்னை போர்டு ஆப் ரெவின்யூ சீனியர் சூப்பிரண்டண்ட் ஸ்ரீ ச. கே. சீனிவாசன் அவர்களின் புதல்வர் சிரஞ்சீவி ராமகிருஷ்ணன் பி. ஏ. (ஆனர்ஸ்)க்கும் சமீபத்தில் தியாகராய நகரில் விவாகம் சிறப்பாக நடந்தேறியது. முகூர்த்தத்திற்கு முதன் மந்திரி ராஜாஜி முதலிய பல பிரமுகர்கள் விஜயம் செய்து மணமக்களை ஆசீர்வதித்தனர். வாழ்க சரஸ்வதி — ராமகிருஷ்ணன்.

# பெரம்பூர் ஸங்கீத ஸபா (Regd.)

## ஸ்ரீ தியாகப்ரும்ம மஹோத்ஸவம்

### இடம்: ராவ்பகதூர் கலவல கண்ணன் செட்டியார் ஹைஸ்கூல், பெரம்பூர்

கனம் ராஜாஜி அவர்கள் விழாவை தொடங்கி வைப்பார்கள்

| | | | |
|---|---|---|---|
| 15—5—53 | பிரும்மஸ்ரீ காரைக்குடி சாம்பசிவ அய்யர் அவர்கள் } | — | மூன்று |
| வெள்ளிக்கிழமை | ஸ்ரீமதி ரங்கநாயகி ராஜகோபாலன், ஸ்ரீமதி ராஜேஸ்வரி } | | வீணைகள் |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ காரைக்குடி முத்து அய்யர் | — | மிருதங்கம் |
| | வடக்கஞ்சேரி ஸ்ரீ மணி பாகவதர் | — | பாட்டு |
| இரவு 9-30 மணிக்கு | கும்பகோணம் ஸ்ரீநிவாசன் | — | வயலின் |
| | பி. ஸ்ரீநிவாசன் | — | மிருதங்கம் |
| 16—5—53 | ஸ்ரீ மதுரை கிருஷ்ணன் | — | பாட்டு |
| சனிக்கிழமை | ஸ்ரீ டி. என். மணி | — | வயலின் |
| 2-15—3-30 மணி வரை | ஸ்ரீ கும்பகோணம் கணேசன் | — | மிருதங்கம் |
| 3-45—5-45 மணி வரை | ஸ்ரீ செம்பை நாராயணன் | — | பாட்டு |
| | ஸ்ரீ டி. கே. ராமச்சந்திரன் | — | வயலின் |
| | ஸ்ரீ பாலக்காடு மகாதேவன் | — | மிருதங்கம் |
| | ஸ்ரீ திரவியம் | — | கஞ்சிரா |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ மூசிரி சுப்ரமணிய அய்யர் | — | பாட்டு |
| | ஸ்ரீ மாயவரம் கோவிந்தராஜ பிள்ளை | — | வயலின் |
| | ஸ்ரீ ராமநாதபுரம் முருகபூபதி | — | மிருதங்கம் |
| | ஸ்ரீ உமையாள்புரம் கோதண்டராம அய்யர் | — | கடம் |
| இரவு 9-30 மணிக்கு | ஹரிகதா — ஸ்ரீ திருவாடி அண்ணாஸ்வாமி பாகவதர் | | |
| 17—5—53 | ஸ்ரீ பி. ராஜம் | — | பாட்டு |
| ஞாயிற்றுக்கிழமை | ஸ்ரீ வி. தியாகராஜன் | — | வயலின் |
| 2-45—4-45 மணி வரை | ஸ்ரீ வி. நாகராஜன் | — | மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ செம்மங்குடி ஸ்ரீநிவாச அய்யர் | — | பாட்டு |
| | ஸ்ரீ கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை | — | வயலின் |
| | ஸ்ரீ பாலக்காடு மணி அய்யர் | — | மிருதங்கம் |
| | ஸ்ரீ புதுக்கோட்டை சுவாமிநாத பிள்ளை | — | கஞ்சிரா |
| 18—5—53 | ஸ்ரீ மதுரை மணி அய்யர் | — | பாட்டு |
| திங்கள்கிழமை | ஸ்ரீ டி. என். கிருஷ்ணன் | — | வயலின் |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ பழனி சுப்ரமணிய பிள்ளை | — | மிருதங்கம் |
| 19—5—53 | ஸ்ரீ அரியக்குடி ராமாநுஜ ஐயங்கார் | — | பாட்டு |
| செவ்வாய்க்கிழமை | ஸ்ரீ பாப்பா வெங்கட்ராமையா | — | வயலின் |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ பாலக்காடு மணி அய்யர் | — | மிருதங்கம் |
| | ஸ்ரீ புதுக்கோட்டை சுவாமிநாத பிள்ளை | — | கஞ்சிரா |
| 20—5—53 | ஸ்ரீ ஆலத்தூர் சகோதரர்கள் | — | பாட்டு |
| புதன்கிழமை | ஸ்ரீ டி. என். கிருஷ்ணன் | — | வயலின் |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ பாலக்காடு மணி அய்யர் | — | மிருதங்கம் |
| | ஸ்ரீ பழனி சுப்ரமணிய பிள்ளை | — | கஞ்சிரா |
| 21—5—53 | ஸ்ரீ செம்பை வைத்தியநாத பாகவதர் | — | பாட்டு |
| வியாழக்கிழமை | ஸ்ரீ எம். எஸ். கோபாலகிருஷ்ணன் | — | வயலின் |
| மாலை 6 மணி | ஸ்ரீ மார்த்தாண்டபுரம் மணி அய்யர் | — | மிருதங்கம் |
| | ஸ்ரீ ஆலங்குடி ராமச்சந்திரன் | — | கடம் |
| | ஸ்ரீ ஹரிஹர சர்மா | — | மோர்சிங் |
| 22—5—53 | ஸ்ரீ ஜி. என். பாலசுப்ரமணியம் | — | பாட்டு |
| வெள்ளிக்கிழமை | ஸ்ரீ டி. என். கிருஷ்ணன் | — | வயலின் |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ பாலக்காடு ரகு | — | மிருதங்கம் |
| 23—5—53 | ஸ்ரீ கே. வி. நாராயணஸ்வாமி | — | பாட்டு |
| சனிக்கிழமை | ஸ்ரீ வி. தியாகராஜன் | — | வயலின் |
| 3—5 மணிக்கு | ஸ்ரீ பாலக்காடு ரகு | — | மிருதங்கம் |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ த்வாரம் வெங்கடசாமி நாயுடு | — | ஸோலோ வயலின் |
| | ஸ்ரீ பழனி சுப்ரமணிய பிள்ளை | — | மிருதங்கம் |
| இரவு 9-30 மணிக்கு | ஹரிகதா — ஸ்ரீ எம்பார் விஜயராகவாச்சாரியார் | | |
| 24—5—53 ஞாயிறு 3—5 மணிக்கு | ஸ்ரீ ராமநாதபுரம் கிருஷ்ணன் — ஸ்ரீ கோவை தஷிணாமூர்த்தி — ஸ்ரீ ராமநாதபுரம் ராகவன் | | |
| மாலை 6 மணிக்கு | ஸ்ரீ திருப்பாம்புரம் சுவாமிநாத பிள்ளை — ஸ்ரீ திருவாலங்காடு சுந்தரேசய்யர்—பழனி சுப்ரமணிய பிள்ளை—வில்வாத்திரி அய்யர் | | |
| இரவு 9-30 மணிக்கு | பாலக்காடு ஸ்ரீ சுப்ரமணிய அய்யர்—ஸ்ரீ கும்பகோணம் ஸ்ரீநிவாசன்—காரைக்குடி சந்திரமௌளி | | |
| 25—5—53 திங்கள் -15—7-15 மணி வரை | ஸ்ரீ டி. ஆர். பாலசுப்ரமணியம் — ஸ்ரீ கோவை தஷிணாமூர்த்தி — ஸ்ரீ உமையாள்புரம் வெராமன் | | |
| இரவு 8 மணிக்கு | பிரபல தென்னிந்திய நாதஸ்வர வித்வான் - ஊர்வலம் | | |

# நாகபுரியில் புதிய ஆஸ்பத்திரி

நாகபுரி வைத்தியக் கல்லூரியின் புதிய ஆஸ்பத்திரி ஆசியாவிலேயே மிகப் பெரிதென்று கருதப்படுகிறது. பிணியால் வருந்துபவருக்கு ஆறுதல் அளிக்க சகல வசதிகளும், நவீன முறையில் பொருந்திய ஸ்தாபனம். இந்தியாவிற்கு இது போன்ற ஆஸ்பத்திரிகள் மேலும் தேவை. அவற்றை அமைக்கும் பணியில் என்றும் பயன்படுவது ஏ. ஸி. ஸி. (A. C. C.) ஸிமெண்ட்.








**தி அஸோஸியேட்டட் ஸிமெண்டு கம்பெனீஸ் லிட்.**

இவர்களின் வியாபார மானேஜர்கள்

**தி ஸிமெண்டு மார்க்கெட்டிங் கம்பெனி ஆப் இந்தியா லிட்.**

SISTA'S CMI - 109 - TAMIL




தென்னிந்தியாவிலே, நாவல்பாக்கம் என்னும் கிராமம் பிரசித்தி பெற்றது. அதற்குக் காரணங்கள் அநேகம் சொல்வார்கள். வடக்கே கோகுலத்திலிருந்து கண்ணன் நாவல்பாக்கத்திலுள்ள நாவல் மரங்களை உலுக்கிப் பழங்களை ருசித்துச் சாப்பிட நடந்து வந்தார் என்கிறது ஸ்தல புராணம். வேறு சிலரோ அந்த ஊரிலுள்ளவர்கள் நாவல் எழுதுவதில் நிபுணர்கள் என்று சொல்வார்கள். எது எப்படி இருந்தாலும் நாவல்பாக்கத்தில் உள்ள நாகலக்ஷ்மியின் கோயில் மிகவும் பிரசித்தி பெற்றது. தவிரவும் அந்த ஊரில் வசித்து வரும் காகுப் பாட்டியைத் தெரியாதவர்கள் இருக்க முடியாது. காகுப் பாட்டியின் வாழ்க்கையே ஒரு கதை. அந்த ஊரில் அவளுக்கு இருந்த நிலங்கள் அதிகம். அவைகளை வைத்துக் கொண்டு தன் ஒரே அருமை மகள் சேதுலட்சுமியை நல்ல இடத்தில் ஜகதீசனுக்குக் கலியாணம் செய்து கொடுத்தாள். மாப்பிள்ளை, மனைவி, மாமியார் மூவரும் சௌக்கியமாக வாழ்க்கை நடத்தி வந்தார்கள்.

வயது ஆன பாட்டி ஆசைக்கும், ஆஸ்திக்கும் ஒரு பேரன் பிறக்க மாட்டானா என்று சாதகப் பட்சிபோல் காத்துக் கிடந்தாள். அதற்காக அந்த ஊர் நாகலக்ஷ்மி அம்மனுக்குஅவள் செய்த உபயங்கள் கணக்கில்லை. சர்ப்ப சாந்தி என்றும், நாகப் பிரதிஷ்டை என்றும் தங்கத்தாலும், வெள்ளியாலும் வாரி இறைத்தாள். பலனில்லாமல் போகவில்லை. சேதுலட்சுமி அழகான தங்க விக்கிரகம் போல் மூக்கும், விழியுமாக ஒரு ஆண் குழந்தையைப் பெற்றாள். பாட்டி குழந்தைக்கு நாகராஜன் என்று பெயரிட்டாள்.

பையனும் எல்லாக் குழந்தைகளையும்போல் வளர்ந்து ஏழாவது வயதை அடைந்தான்.

கோவிந்தபுரம் "கோவிந்தா பாங்கி"ன் டைரக்டர்களின் கூட்டத்தில் ஒரே அமளி. பாங்கு நடத்தத் தெரியாதவர்களாகச் சேர்ந்து, பாங்கியை முன்னுக்குக் கொண்டு வர வழி தெரியாதவர்கள் என்று ஒருவரை ஒருவர் காரசாரமாகச் சொல்லிக் கொண்டார்கள். எல்லோரையும் அமைதியாக இருக்கும்படி மன்றாடிக் கேட்டுக் கொண்டார் பாங்குத் தலைவர் வேதமூர்த்தி. "ஐயா! கவலைப்படாதீர்கள். பாங்கியை முன்னுக்குக் கொண்டுவருவது என் பொறுப்பு. சண்டையிலும் பூசலிலும் என்ன காரியம் நடக்கும்?" என்று கூறி அமைதியை நிலை நாட்டினார்.

மற்ற அங்கத்தினர்களும் தலைவரை ஆமோதித்து விட்டு பாங்கைச் சீர்திருத்தும் யோசனையையும் அவரிடம் ஒப்புவித்தார்கள். அன்றைய சிற்றுண்டியையும், காப்பியையும் ருசித்து ரசித்துப் புசித்தார்கள். கூட்டத்திற்கு வந்து உட்கார்ந்ததற்கான 'உட்காரும் பீஸ்', பிரயாணப்படி, எல்லாம் வாங்கிக் கொண்டார்கள், கலைந்தார்கள். யோசித்தார் தலைவர், தலையைச் சொறிந்தார், காரியதரிசியைக்கூப்பிட்டார். "ஓய்! என்ன வேலை செய்கிறீர்? நம்ம பாங்கியில் பணம் சேர ஒரு வழியும் உமக்குத் தெரியவில்லையே. இதோ பாரும், ஆறு மாதத்தில் என்ன வேலைகள் செய்யப் போகிறேன் என்று! பணம் இருக்குமிடம் எனக்குத் தெரியும், கிராமங்களில்தான் பணம் இப்பொழுது புரளுகிறது. ஓய் புரளுகிறது! என்ன புரளி பண்ணுகிறேன் என்று நினைக்கிறீரா? அந்தப் பணத்தைத் திரட்டி நம் பாங்கியில் சேர்த்து எப்படிப்பட்ட நிலைக்கு நம்ம பாங்கியை உயர்த்துகிறேன் பாரும்!" என்று சொல்லிவிட்டுப் போன வேதமூர்த்தி காரியாம்சத்தில் இறங்கித் தொடங்கினார் சுற்றுப் பிரயாணம். கிராமம் கிராமமாகப் பிரசாரம் செய்தார். நாவல்பாக்கத்திற்கும் வந்தார். தேனொழுகப் பேசினார், ஆட்களை மயக்கினார். அந்த வலையில் நம் காகுப் பாட்டி விழாமல் இருப்பாளா? தன் சொந்த உபயோகத்திற்காக இரண்டு காணி

நிலத்தை வைத்துக் கொண்டு மற்றவைகளை எல்லாம் விற்றுப் பணமாக்கி ரொக்கமாகப் பத்தாயிரம் ரூபாயை வேதமூர்த்தியிடம் கொடுத்தாள்; நல்ல வட்டிக்கு விட்டாள் பணத்தை. இரண்டு மாதத்தில் வேதமூர்த்தி தன் பாங்கிக்குச் சேர்ந்த பணத்தின் அளவைக் கண்டு மூக்கின் மேல் விரலை வைத்தார்கள். நாகுப் பாட்டிக்கு, மற்றவர்களைப் போல் தவறாமல் வட்டி வந்தது. ஒரு வருஷமாயிற்று, இரண்டு வருஷங்கள் ஓடின.

ஒருநாள், காவல் பாக்கத்துக்கு வந்த தமிழ் தினசரி ஒன்றை ஜகதீசன் படித்தான். "ஐயோ, மாமி!" என்றலறினான். "மாமி! போச்சே!" என்றான். "என்னப்பா போச்சு?" என்றாள் பாட்டி. "கோவிந்தபுரம் கோவிந்தா பாங்கு கோவிந்தா" என்ற தலைப்பைத் தடுமாறிப் படித்தான். பாட்டி ஒரு கணம் பிரமித்தாள், கண் இருண்டது, மயக்கம் வந்தது. ஒருவாறு சமாளித்துக் கொண்டாள். "சேது, ஒரு டம்ளர் மோர் கொண்டுவா" என்று கேட்டு மோர் வாங்கிக் குடித்தாள். "ஜகதீசா! ரூபாய்தானேடா போச்சு! கவலைப்படாதே. என்னமோ என் போதாதகாலம். நாகராஜு இருக்கான். அவன் அதிர்ஷ்டக் குழந்தை. அவனை முன்னுக்குக் கொண்டு வருவோம். நீ ஏண்டா அழறே அசடு! நாகலக்ஷ்மி நம்மைக் கைவிட மாட்டாள். உலகம் தெரியாதவன் நீ" என்று கூறித் தன் மனசைக் கல்லாக்கிக் கொண்டாள் நாகுப்பாட்டி.

'கோவிந்தா பாங்கு' மூடுவதற்குக் காரணமாக இருந்தவர்கள் கூட்டில் ஏற்றப்பட்டார்கள். பொய்க் கணக்கு, மோசடி என்ற குற்றங்களுக்காக பாங்குத் தலைவர் வேதமூர்த்தி பன்னிரண்டு வருஷம் சிறைவாச தண்டனை அடைந்தார்.

வருஷங்கள் பறந்தன. நாகுப் பாட்டியின் மனப்பான்மை மிகவும் விசித்திரமாகவே இருந்தது. அவள் மனம் தளரவில்லை. தன் பணம் முதலும் வட்டியுமாக ஒரு நாள் மீண்டு வரும் என்று நம்பினாள். கையில் இருந்த பணத்தை வைத்துக் கொண்டு இட்டிலிக் கடை போட்டாள். உழைத்தாள், மாப்பிள்ளை, பெண், பேரன் எல்லோரும் சரியா உழைப்புடன் பாடுபட்டார்கள். நாகராஜன் சூடிகையாய்ப் படித்தான். மேல் படிப்புக்குக் காலேஜ் சேரப் பட்டணம் அனுப்பப்பட்டான். "நாகராஜு, நாங்கள் கஷ்டப்பட்டு உன்னைப் படிக்கவைத்து வித்தியாதானம் கொடுக்கிறோம். நீ சமத்தாய் வாசித்துப் பரீட்சை பாஸ் செய்து நல்ல இடத்தில் கலியாணமாகி நான் பார்க்கப் போகிறேன்" என்று தன் பேரனைக் கட்டிக் கொண்டு ஊருக்கு அனுப்பினாள் பாட்டி.

பட்டணம் வந்து சேர்ந்த நாகராஜன் முதலில் ஓட்டலில் அறை வைத்துக் கொண்டு இருந்தான். பிறகு ஒரு சிநேகிதர் சொன்னால் ஒரு வீட்டு மாடியில் அறை ஒன்று எடுத்துக் கொண்டு படிக்க ஆரம்பித்தான். அந்த வீட்டுக்கு வந்ததுமுதல் ஒரு நிம்மதி அடைந்தான். காலேஜிலிருந்து திரும்பி வந்ததும் அவனை ரமணீயமான சங்கீதம் வரவேற்கும். அந்த வீட்டில் மூவர்தான் உண்டு. வீட்டுத் தலைவர் நடராஜ ஐயர், அவர் சகதர்மிணி கற்பகம், தனம் என்ற பெண், தனம் நல்ல அழகி; ஸ்கூல் பைனல் படித்துக் கொண்டிருந்தாள். சிறந்த சாரீரம், சங்கீதம் அப்படியே ஆளை உருக்கும். அவள் உருக்கமாய்ப் பாடிக் கொண்டிருக்கும்பொழுது கேட்பவர்கள் கண்களைத் துடைத்துக்கொள்வார்கள்.

நாளடைவில் அந்தக் குடும்பத்துடன் நெருங்கிப்பழகிய நாகராஜன், தனம் நடராஜ அய்யரின் பெண் இல்லை, அவர் தங்கை பெண் என்று தெரிந்து கொண்டான். தனம் சில சமயம் தன்னை அலங்காரம் செய்து கொண்டு வந்தாளானால் நாகராஜன் அவளைக் கண் கொட்டாமல் பார்ப்பான். கையில் தங்க வளைகள் ஒலிக்கும், காதில் வைரத்தோடு டால் அடிக்கும், கழுத்தில் வைர 'நெக்லஸ்' வர்ணங்களை வாரி இறைக்கும். முத்து நகைகளாக ஒரு நாள் போட்டுக் கொண்டு காட்சி



அணிப்பாள்; கெம்பிலும் அவளுக்கு நகைகள் ஒரு ஸெட் உண்டு. இவ்வளவு செல்வாக்குடன் இருந்த தனம் ஏனோ சில சமயங்களில் முக வாட்டத்துடன் இருப்பதைப்பார்ப்பான். அவன் இவனுக்கு ஒரு மர்மப் பெண்ணாக இருந்தாலும் இதயத்தில் அவளை வைத்துப் பூட்டி விட்டான். தனத்திற்கும் நாகராஜ னிடம் ஒரு பிரேமைதான்.

ஒருநாள் பரீட்சை நெருங்கும் சமயம். தனம் தன் அறையில் தனியாகப் படித்துக் கொண்டிருந்தாள். நாகராஜனுக்குத் தாகம் எடுத்தது. கீழே இறங்கி வந்தான்; தனத்தின் அறையில் விளக்கு எரிவதைப் பார்த்து, "தனம், ஒரு டம்ளர் ஜலம் கொடேன்" என்று கேட்டான். ஆனால் உடனே 'ஏண்டா, கேட்டோம்' என்று நினைத்துக் கொண்டான். அவன் இவளை எதிர்ப் பார்க்கவில்லை. ஒரு வேளை காதில்விழவில்லையோ என்று நினைத்து மறுபடியும் "தனம்!" என்று கூப்பிட்டான். அவள் தலை நிமிர்ந்தாள். ஆனால் அவள் கண்களிலிருந்து தாரை தாரையாக ஜலம் வழிந்தோடியது.

"தனம், இது என்ன?" என்றான் பதறிப் போய். 'ஒன்றுமில்லை' என்று பதில் வந்தது.

"ஒன்றுமில்லையா! உன் கண்களிலிருந்து இப்படி ஜலம் கொட்டுகிறது. யாராவது உன்னை ஏதாவது...?"

"ஒன்றுமில்லை! என் தலைவிதியை நினைத்துக் கொண்டு நான் அழுகிறேன்!"

"தலைவிதியா! என்னிடம் சொல்லக் கூடுமானால்



சொல்லு தனம்! யோசிக்காதே! என்னால் இயன்ற உதவியை நான் செய்கிறேன்!"

"சொல்லுவேன், ஆனால் நீங்கள் பிறகு என்னை வித்தியாசமாய் நினைக்கக் கூடாதே!"

"என்னைப் பற்றிய விவரங்கள் தெரிந்தால் என்னைப் பற்றி நீ வித்தியாசமாக எண்ணக் கூடாதே என்பதுதான் என் கவலை. உன்னைப் பார்த்துப் பழகிய பிறகு நான் என் வாழ்க்கையை எப்படிச் சொல்வது என்று மயங்குகிறேன்; நல்லபடியாக இருந்த எங்கள் குடும்பம், ரொம்ப வறுமை நிலையை அடைந்துவிட்டது. நான் இங்கே இருந்து படிப்பது கூட என் குடும்ப நிலைக்கு மிகவும் சிரமமான காரியம். அதை யெல்லாம் நான் மனசில் வைத்துக்கொண்டு எவ்வளவோ சிரமப் படுகிறேன். அது இருக்கட்டும். தனம், நீ ஏன் அழுகிறாய்? சொல்லு."

"ஒன்றுமில்லை, என் அப்பாவை நினைத்துக் கொண்டேன், அழுதேன்!"

"ஐயோ, பாவம்! உலகில் இது எல்லாம் சகஜம் தானே!"

"ஏதோ தெரியாமல் பேசுகிறீர்கள். நீங்கள் நினைப்பது போல் என் அப்பா இறக்கவில்லை."

"இறக்கவில்லையா? பின் அவர் எங்கே இருக்கிறார். நான் பார்த்ததே இல்லையே?"

"நீங்கள் அவரைப் பார்க்கப் போகிறீர்கள். ஆனால்..."

"என்ன ஆனால்? எந்த ஊரிலிருந்து வரப் போகிறார்?"

"ஊரிலிருந்து மட்டுமல்ல; ஜெயிலிலிருந்து வரப்போகிறார்."

"என்ன தனம் சொன்னாய்!

"ஆமாம்! பன்னிரண்டு வருஷங்கள் சிறையிலிருந்து விட்டுத் திரும்பப் போகிறார் என் தந்தை வேதமூர்த்தி."

"யார்! நீ அந்தப் பாவியின் பெண்ணா?"

"பார்த்தீர்களா, நான் நினைத்தது......!" என்று மறுபடியும் அழ ஆரம்பித்தாள் தனம்.

சிறிது சமாளித்துக் கொண்டான் நாகராஜன். "தனம், இப்படிக் கூட ஒரு சோதனை உண்டா? எங்கள் குடும்பத்தையே ஆண்டியாக்கி என் அருமைப் பாட்டியை இந்த வயது காலத்தில் எனக்காக உழைத்து உயிர் வாழ வைத்தவர் உன் தகப்பனார். ஆனால் என்ன! நீ என்ன செய்வாய், அழாதே தனம்...!"

"அழாதே என்றால் போதுமா! என்னைக் கை விட்டுவிட மாட்டீர்களே! என் வாழ்வை அழித்துவிட மாட்டீர்களே!" என்று விம்மினாள் தனம்.

"தனம், என்னைப் பொறுத்த வரையில் உன்னைப் பூரணமாக நேசிக்கிறேன். ஆனால் என் பாட்டி என்ன சொல்லுவாளோ!"

"நீங்கள் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம். நான் உங்கள் பாட்டியின் காலில் வந்து விழுந்து மன்னிப்புக் கேட்கிறேன்!"

"வேண்டாம், தனம்! எல்லாவற்றையும் என்னிடம் விட்டுவிடு" என்று சொல்லிச் சென்ற நாகராஜனுக்கு ஏதோ செய்தது. அவன் சோர்ந்துபோய் உட்கார்ந்துவிட்டான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் வாசலில் ஒரு கார் வந்து நின்றது. அதிலிருந்து நடராஜய்யருடன் ஒரு ஆசாமி இறங்கினார். அவர்தான் வேதமூர்த்தி என்று ஊகித்துக் கொண்டான் நாகராஜன். தந்தையும் மகளும் சந்தித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள். தன் மகளைக் கண்டு பூரித்தார் வேதமூர்த்தி. அவரைக் கட்டிக் கொண்டு அழுதாள் தனம்.

* * *

நாவல்பாக்கம் கிராமத்தில் ஒரு மாட்டு வண்டி நாகுப் பாட்டி வீட்டு வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து வேதமூர்த்தி, தனம், நாகராஜன் மூவரும் இறங்கினார்கள். "பாட்டி, இவள் தான் வேதமூர்த்தியின் பெண் தனம்" என்று அவளை நாகராஜன் அறிமுகப்படுத்தினான். அப்பெண் பாட்டியை நமஸ்கரித்தாள். அவளை ஒரு கணம் தலை முதல் கால் வரையில் கவனித்துப் பார்த்த பாட்டி, "அம்மா, தீர்க்க சுமங்கலியாக இரு" என்று ஆசி கூறித் தழுவிக் கொண்டாள். உடனே பாட்டியின் கால்களில் சாஷ்டாங்கமாக வேதமூர்த்தி விழுந்து. "பாட்டி, நான் செய்த காரியத்திற்கு என் முகத்தில் விழித்தாலும் பாவம், என்னை மன்னியுங்கள்!" என்றார்.

"எழுந்திருங்கள் ஐயா, நான் என் தனத்தை உங்கள் தனத்தால் மீட்டுக் கொண்டு விட்டேன். கால வித்தியாசத்தால் ஒருதடவை தவறு செய்து விட்டீர்கள். சரணாகதி வேறு செய்து விட்டீர்கள். குழந்தைகள் நன்றாக இருக்கட்டும்" என்றாள் பாட்டி. அந்த மாதமே ஒரு முகூர்த்தம் நிச்சயிக்கப் பட்டது. வேத மூர்த்தியின் குமாரத்தி சௌபாக்கியவதி தனத்துக்கும், சிரஞ்சீவி நாகராஜனுக்கும் அந்த முகூர்த்தத்தில் விவாகம் சிறப்பாக நடந்தது.

கல்யாணத்தன்று, முகூர்த்தம் நடந்து சாப்பாடெல்லாம் முடிந்த பிறகு, தனியாகப் பாட்டியைச் சந்தித்தான், நாகராஜன். "பாட்டி, நீ எப்படி இந்தக் கலியாணத்துக்குச் சம்மதம் கொடுத்தாய்?"

"அசடே! என் சொத்து எப்பொழுதும் அழியாது. தனம் போட்டுக் கொண்டிருக்கும் இவ்வளவு நகைகளும் ஏதுடா! எல்லாம் நான் அவர் பாங்கியில் போட்ட பணத்திலிருந்து தானே செய்து போட்டிருக்கிறார்? வட்டியும் முதலுமாக என்னிடமே திரும்பி வந்துவிட்டது. அந்தப் பெண்ணும் என்னை மயக்கி விட்டாள். சுகமாக இருங்கள்" என்றாள் பாட்டி.

"சபாஷ், பாட்டி!" என்று தன் மனதில் எண்ணிக் கொண்டு தன் தனத்தைத் தேடிக் கொண்டு புறப்பட்டான் நாகராஜன்.




இந்திராவின் தொந்தரவு பொறுக்க முடியாமல் திணறினான் அருணாசலம். அவனை அவள் நாள் தவறாமல் நச்சரித்து வந்தாள், தனிக் குடித்தனம் போகவேண்டுமென்று.

அருணாசலம் அவளுக்கு எவ்வளவு சமாதானம் கூறியும் பயன்படவில்லை. அவள் ஒரே பிடிவாதமாக நின்றாள். "இன்றைக்கென்ன! உங்களுக்கு ஒன்றும் தெரியவில்லை. நாளைக்கு நமக்கும் நாலு பிறந்தால் அப்போது தெரியும் கஷ்டமெல்லாம். அப்போது உங்க அண்ணா வந்து உதவி செய்வாராக்கும்......!" என்றாள் இந்திரா.

அருணாசலம் அவன் மனைவி, அவன் தாயார், தமையன் குருமூர்த்தி, மன்னி விசாலம், அவளுடைய குழந்தைகள் ஸ்ரீதர், வைதேகி எல்லோரும் ஒன்றாக இருந்து வந்தார்கள். அருணாசலமும் குருமூர்த்தியும் சிறுவயதிலேயே தகப்பனாரை இழந்தார்கள். அவர்களுடைய தாயார் அவர்கள் இருவரையும் சிரமப்பட்டு வளர்த்தாள், தன் அண்ணன்மார்களின் உதவியைக் கொண்டு. குருமூர்த்தி எஸ். எஸ். எல் ஸி. படித்ததும் அவனுக்கு மேலும் படிக்க வேண்டுமென்று ஆசை இருந்தாலும் குடும்ப நிலையை உத்தேசித்து அவன் உத்தியோக வேட்டையில் இறங்க வேண்டியதாகி விட்டது. ஒரு கம்பெனியில் ஐம்பது ரூபாய் உத்தியோகம் கிடைத்தது. அந்தச் சொற்ப வரும்படியில் தாயார், அருணாசலம், அவன் ஆக மூவருமாக ஒருவாறு காலம் தள்ளினார்கள்.

அருணாசலம் படிப்பில் சுட்டிகையாக இருந்தான். 'நாம்தான் அதிகம் படிக்க முடியாமல் போய் விட்டது. தம்பியாவது நன்றாகப் படித்து உயர்ந்த பதவி பெற வேண்டும் என்று இருந்தது குருமூர்த்திக்கு. ஆகவே அருணாசலம் எஸ். எஸ். எல். ஸிக்குப் பிறகு காலேஜில் சேர்ந்தான். நன்றாகப் படித்துப் பாஸ் செய்து வந்தான். பி. காம். பாஸ் செய்ததும் எடுத்த எடுப்பிலேயே இருநூற்றைம்பது ரூபாயில் ஒரு பாங்கியின் உதவி மானேஜர் உத்யோகம் கிடைத்தது. அதிலிருந்து அவர்களுடைய வாழ்க்கை சுகமாக இருந்தது. தன் தம்பி கை நிறையச் சம்பாதிப்பதில் பெருமை கொண்டான் குருமூர்த்தி.

சிறிது நாட்களுக்கெல்லாம் குருமூர்த்திக்கும், அருணாசலத்துக்கும் விவாகம் நடைபெற்றது.

குருமூர்த்தியின் மனைவி விசாலம் பொறுமையே வடிவானவள், நடுத்தரக் குடும்பத்திலிருந்து வந்தவள், அழகும், சாந்தமும் உடையவள்; வீட்டு வேலைகளில் மிகவும் கெட்டிக்காரி. அவள் வந்ததிலிருந்து குரு மூர்த்தியின் தாயார் லக்ஷ்மியம்மாளுக்கு ஒரு வேலையும் கிடையாது. தன் மருமகளின் சுறுசுறுப்பையும், வேலை செய்யும் அழகையும், பதவிசையும் பற்றி வருவோர் போவோர்களிடம் எல்லாம் புகழ்வதுதான் அவளுக்கு வேலை. அப்படித் துரு துரு வென்று காரியங்களைச் செய்து தன் மாமியாருக்கும், கணவனுக்கும் பணி விடைகள் செய்தாள் விசாலம்.

அருணாசலம் மன்னியின் பேரில் உயிராய் இருந்தான். அவளைத் தெய்வமாக மதித்தான். அவள் தான் அருணாசலத்துக்கு இந்திராவை — மனைவியாகத் தேர்ந்தெடுத்தவள். இந்திரா நல்ல செல்வந்தரின் பெண். மிகுந்த அழகி. விசாலம் குடும்ப லக்ஷணமாய், லட்சுமீகரமாய்க் காண்போர் பய பக்தி கொள்ளும்படியான அழகையும், வசீகரத்தையும் பெற்றிருந்தாள். ஆனால் இந்திராவின் அழகு காண்போரை மயக்கும் அழகு. அகன்ற கண்கள், விசாலமான நெற்றி, சுருண்ட கூந்தல், அவளுடைய கண்களின் சுழற்சியில் விசாலம் அயர்ந்து போய்விட்டாள். அருணாசலத்துக்கு அவளைக் கொள்ள வேண்டுமென்று தீர்மானித்த போது அருணாசலத்தைப் பற்றிக் கேட்கவா வேண்டும்! அவளுடைய அழகில் மயங்கிவிட்டான். அவ்வளவுதான். விரைவில் எல்லாக் காரியங்களும் வேகமாக நடைபெற்றது. முடிவில் இந்திரா அருணாசலத்தின் மனைவியானாள்.

இந்திராவும், விசாலமும், ஒருவரை யொருவர் மிகவும் நேசித்துப் பழகினார்கள். இந்திரா சதா விசாலத்திடம் மன்னி, மன்னி என்று சுற்றி வந்து அவளுக்கு வீட்டு வேலைகளிலெல்லாம் உதவி வருவாள். எந்தக் காரியத்தையும் இருவரும் சேர்ந்தே செய்வார்கள். எதையும் இந்திரா மன்னியைக் கேட்டுத்தான் செய்ய வேண்டும் என்பாள். அவளுக்கு அருணாசலம் ஏதாவது வாங்கிவந்தால் உடனே மன்னிக்கு ஒன்றும் வாங்கிவரவில்லையா என்பாள். ஒரு தடவை அருணாசலம் கடைத்தெருவிலிருந்து ஒரு அழகான வேலைப்பாடு செய்த நகைப் பெட்டி வாங்கி வந்தான். அதைக் கண்ட இந்திரா, "ஒன்று மட்டும் வாங்கி வந்தீர்களே, மன்னிக்கும் ஒன்று வாங்கிவரக் கூடாதா!" என்று கேட்டாள். "கடையில் ஒன்றே ஒன்றுதான் இருந்தது. உனக்கென்று வாங்கி வந்தேன்" என்றான் அருணாசலம்.

"சரி, எனக்கில்லாவிட்டால் போகிறது. இதை மன்னிக்குக் கொடுத்து விடுகிறேன்" என்று கூறி மன்னிக்குக் கொடுத்து விட்டாள் இந்திரா.

அவ்வளவு அன்போடு ஒற்றுமையாக இருந்தவள் இப்போது தனிக் குடித்தனம் போகிறேன் என்று பிடிவாதமாகச் சண்டை பிடிப்பதைக் கண்டால் ஆச்சரியமாகத் தானே இருக்கிறது!

விசாலத்துக்கு முதலில் ஸ்ரீதர் பிறந்தான். மூக்கும் விழியுமாக இருந்த அந்தக் குழந்தையை இந்திரா எப்போதும் எடுத்துக் கொஞ்சிக் கொண்டிருந்தாள். அவனுக்கு வேண்டிய அலங்காரங்களை யெல்லாம் செய்தாள். கைக்குத் தங்கக் காப்பு, இடுப்புக்குச் சதங்கை, காலுக்குக் கொலுசு என்று வாங்கிப் போட்டு அழகு பார்த்தாள். அவனுடைய ஆண்டு நிறைவைப் பிரமாதமாகக் கொண்டாடினார்கள். அவனுக்கு மெல்லிய தங்கச் சங்கிலியும் கைப் பிஞ்சு விரல்களில் இரண்டு வைர மோதிரங்களும் செய்து போட்டார்கள்.

எல்லாம் அமைதியாக, ஆனந்தமாக நடந்து கொண்டிருந்த போது தான் எதிர்வீட்டுக்குப் புதிதாக வந்திருந்த மாமி மெதுவாக இந்திராவுக்குத் தூபம் போட ஆரம்பித்தாள்.

"என்ன இந்திரா, நீ இப்படி சுத்த அசடாக இருக்கிறாயே! நூறும், இருநூறும் போட்டு அவர்களுக்குச் செலவு செய்து வந்தால் அப்புறம் உங்களுக்கு என்ன மிச்சம் இருக்கும்!" என்று கேட்டு வைத்தாள் செண்பகம் அம்மாள்.

"இவர் படித்து இந்த உத்யோகத்தில் இருப்பதே மைத்துனர் கஷ்டப்பட்டுப் படிக்க வைத்ததால் தானே மாமி!" என்றாள் இந்திரா.

"அதனால் இவரே எல்லாத்துக்கும் செய்து வர வேணுமா இந்திரா! அதுக்காகக் காலம் முழுதும் அவர் குடும்பத்தைத் தாங்கிக் கொண்டிருக்க முடியுமா? அவரவர்கள் சௌகரியத்தை அவரவர்கள் கவனித்துக் கொள்ள வேண்டியது தான். என்னவோ அம்மா, நான் சொன்னேன். இதை யெல்லாம் யோசித்துப் பார்த்தாயானால் உன்னுடைய பிற்காலத்துக்கு நல்லது!" என்று இந்திராவின் மனதில் விஷ வித்தை ஊன்றிவிட்டாள் சண்பகம் மாமி!

இந்திராவின் உள்ளத்தில் சண்பகம் மாமியின் கடைசி வார்த்தைகள் ரீங்காரம் செய்ய ஆரம்பித்தன. அந்த மாமிக்கென்ன பைத்தியமா பிடித்திருக்கிறது, இப்படி யெல்லாம் சொல்ல என்று தோன்ற ஆரம்பித்தது. மேலும் சண்பகம் மாமி அவ்வப்போது போதிக்க போதிக்க அவளுடைய உள்ளத்தில் வித்தியாச மனப்பான்மை கொஞ்சம் கொஞ்சமாகத் தோன்ற ஆரம்பித்தது. 'கை நிறையச் சம்பாதித்து வருவது நம் கணவர் தானே! மைத்துனர் ஒரு நூறு ரூபாயைக் கொண்டு வந்து விட்டால் இரு குடும்பங்களும் சமமாக வாழ வேண்டுமென்றால் முடியுமா? உண்மையில் பார்க்கப்போனால் அவர்களுக்குச் செலவும் அதிகமாகிறது' என்று யோசிக்கலானாள்.

இந்த எண்ணங்கள் அவளுடைய மனத்தில் புகவும் முன்போல் விசாலத்துடன் அன்யோன்யமாய், இழைந்து கொண்டு பழகுவதை நிறுத்தி விட்டாள். தான் உண்டு, தன் காரியம் உண்டு என்பது போல் நடக்க ஆரம்பித்தாள். கொஞ்சம் கொஞ்சமாகத் தன் கணவன்தான் நிறையச் சம்பாதிக்கிறானே, தான் ஏன் அதிகமாகக் காரியம் செய்ய வேண்டும்! நமக்கு இணையாக எல்லாச் சலுகைகளையும் பெறுகிறாளே மன்னி, அவள்தான் கொஞ்சம் அதிகமாகக் காரியம் செய்யட்டுமே என்று நினைக்க ஆரம்பித்தாள். விசாலம் இந்திராவிடம், "இந்திரா, கொஞ்சம் அடுப்பைப் பற்ற வைத்து விடுகிறாயா, நான் ஜலம் தூக்கி வருகிறேன், நாழிகை யாகிவிட்டது" என்றால், "கொஞ்சம் தலையை வலிக்கிறாப்போலே இருக்கு மன்னி, நீயேதான் பற்றவைத்துவிடேன். ஐந்து நிமிஷத்தில் என்ன ஆய்விட்டது!" என்று சிரித்துக் கொண்டே கூறிவிடுவாள்.

சூட்சம புத்தியுள்ள விசாலம் அவளிடம் குடிகொண்டுள்ள மாறுதலைக் கண்டு கொண்டாள். ஆனால் அவள் அதை அதிகம் பாராட்டாமல் காரியங்களைச் செய்து வந்தாள். ஆனால் இந்திரா முன்போல் தன்னிடம் நெருங்கிப் பழகாமல் இருப்பதைக் கண்டு மிகவும் மனம் வருந்தினாள்.

இந்திரா பாட்டுக்குத் தன் அறையில் போய் உட்கார்ந்து கொண்டு புத்தகம் படிக்க ஆரம்பித்து விடுவாள். விசாலம் தன்னம் தனியாக ஓடி ஆடிக் காரியங்களைச் செய்வாள்.

விசாலம் மறுபடியும் கர்ப்பம் தரித்திருந்தாள். அந்தத் தள்ளாமையிலும் அவளேதான் காரியம் செய்தாள், இதை அறிந்து அருணாசலம், "என்ன இந்திரா, நீ முன்போல் கூடமாட மன்னிக்கு ஒத்தாசை செய்வதில்லையா.........பாவம், மன்னி ஒண்டியாகச் செய்கிறாளே!" என்றான் இந்திராவிடம். ஆனால் இந்திரா அது காதில் விழாதது போல் படித்துக் கொண்டிருந்தாள்.

"என்ன இந்திரா, நான் சொல்வது காதில் விழவில்லையா!" என்று கேட்டான்.

"எல்லாம் நான் சும்மா உட்கார்ந்து கொண்டிருக்கவில்லை. நானும் வேலை செய்யத்தான் செய்கிறேன்" என்று அடித்தாற்போலக் கூறினாள். வீணாய்ச் சண்டை உண்டாக்க விரும்பாமல் அருணாசலம் அங்கிருந்து போய்விட்டான்.

விசாலம் ஒரு பெண் குழந்தைக்குத் தாயாரானாள். அதற்கு ஏகப்பட்ட செலவு ஆயிற்று. பெண் குழந்தையானதால் புண்யாவசனத்தன்றே சங்கிலி ஒன்றும், காலுக்கு கொலுசு ஒன்றும், கைக்குத் தங்கக் காப்பு, வளை எல்லாம் வாங்கிப்



போட வேண்டுமென்று லக்ஷ்மியம்மாள் கூறினாள். அதைக் கேட்டபோது இந்திராவுக்குக் கோபம் கோபமாக வந்தது. 'ஆமாம், இப்படியே செய்து கொண்டே போனால் குடிமுழுக வேண்டியது தான்' என்று மனசில் கூறிக் கொண்டாள்.

அருணாசலம் அவன் அம்மா கூறியபடியே வாங்கிக் கொண்டு வந்தான்.

"இவ்வளவு பணம் ஏது இப்போது!" என்று கேட்டாள் இந்திரா, அருணாசலத்தை நோக்கி.

"ஏதாயிருந்தால் உனக்கென்ன! அம்மா வாங்கி வரச் சொன்னால் வாங்க வேண்டியதுதானே."

"இப்படி எத்தனை நாள்தான் வாங்கிக் கொண்டு இருக்கப் போகிறீர்கள்!" என்றாள் இந்திரா.

"இதென்ன இப்படிக் கூறுகிறாய், இந்திரா!" என்று பிரமித்தான் அருணாசலம்.

"எப்படிச் சொல்கிறேனும்! இப்படி எல்லாம் இப்போ இருக்குன்னு செய்துகொண்டே வந்தால் கஷ்டப்படுவது நீங்களா, அவர்களா! எதற்கும் ஒரு மிதம் இருக்கவேண்டும்" என்றாள்.

"என்ன உளறுகிறாய்! பேசாமல் இரு" என்று அடக்கி வைத்தான் அவளை.

இந்திராவுக்கு வர வர அந்த வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. எதற்கெடுத்தாலும் தனக்குப் போட்டியாக விசாலம் இருக்கிறாள் என்று அவள் மேல் குரோதம் உண்டாயிற்று. தனக்கென்று ஆசைப்பட்டுக் கொண்டு எதைச் செய்து கொண்டாலும் அதற்குப் பங்குக்கு வந்து விடுகிறாள் விசாலம் என்று அவளை மனசில் கரித்துக் கொட்டினாள். விசாலமாகக் கேட்காது போனாலும், அவளுடைய மாமியார் லக்ஷ்மியம்மாள் எதற்கெடுத்தாலும் இரண்டு பேருக்கும் செய்யணும் என்றுதான் கூறுகிறாள். அதனால் அவள் பேரில் மேலும் துவேஷம் உண்டாயிற்று. சதா



அவள் உள்ளத்தில் புகைந்து கொண்டே இருந்தது. குழந்தை ஸ்ரீதரையும், வைதேகியையும் முன்போல் எடுத்துக் கொஞ்சவதில்லை. தன்னுடைய கணவன் சம்பாதிப்பதைக் குறையாடப் பிறந்தவர்கள் என்று அவர்கள் பேரில் கோபம். சிறு சேஷ்டைகள் செய்தாலும் ஸ்ரீதரை அடிக்க ஆரம்பித்தாள். அன்று அப்படித்தான் ஸ்ரீதர் அவளுடைய அறையில் புகுந்து அவள் மேஜை மேல் ஏறிப் பௌடர் டப்பாவைத் திறந்து அதைக் கொட்டி, முகத்தில் பூசிக் கொண்டான். தைல பாட்டிலைக் கீழே போட்டு உடைத்திருந்தான். ஆறு மாதத்துக்கு முன் இதேமாதிரி விஷமங்களை அவன் செய்தபோது, "அடே, கண்ணு, அதற்குள்ளே இதெல்லாம் கற்றுக் கொண்டாயா, போக்கிரி" என்றெல்லாம் கொஞ்சியவள் அவனைப் பளார், பளார் என்று முதுகில் அறைந்தாள். அதைக் கண்டு விசாலம், "என்ன இந்திரா, இப்படிப் போட்டுக் குழந்தையை அடிக்கிறாயே," என்று கேட்டதற்கு இந்திரா "பார், உன் பிள்ளையை எப்படி யெல்லாம் அலங்கோலம் செய்திருக்கிறான் இங்கே" என்றாள்.

'உன் பிள்ளை' என்றது அவளுக்குச் சுருக்கென்று பட்டது. இவ்விதம் அவள் என்றுமே பிரித்துப் பேசியதில்லை.

இருவருக்கும் இடையே இருந்த பிளவு நாளுக்கு நாள் அகன்று கொண்டு வந்தது.

அந்தத் தீபாவளியின்போது இந்திராவுக்கும், விசாலத்துக்கும் பட்டுப் புடவை வாங்கக் கடைக்குப் போனார்கள், அருணாசலமும், குருமூர்த்தியும். இரண்டு புடவைகள் வாங்கி வந்ததில், விசாலத்துக்கு வாங்கிய புடவை இருபது ரூபாய் விலை அதிகமாக இருந்தது. மயில் வர்ணப் புடவை விசாலத்தின் உடலுக்கு ஏற்றதாக இருந்ததால் அதை வாங்கி விட்டார்கள். அதில் இரண்டு மை சரிகை அதிகம். அதைக் கண்டதும் இந்திரா அருணாசலத்திடம் சண்டை பிடித்தாள். "இனி இந்த வீட்டில் ஒன்றாக இருக்க முடியாது. இப்போதே வேறு வீடு பாருங்கள். இந்த மாதிரி செலவு செய்து வந்தால் நாம் உருப்பட்டாற் போலத்தான்!" என்றாள்.

அவளுடைய காரியத்தைச் சாதித்துக் கொள்ள ஒரு பெரும் சண்டை வீட்டில் நிகழ்ந்தால்தான் முடியும்போல் இருந்தது. அதற்குத் தகுந்தாற் போல் எதிர் வீட்டுச் சண்பகம் மாமி ஒரு வைர பேஸரி விலைக்கு வருகிறது என்றாள். அதை வாங்கிக்கொள்ள அவளுக்குச் சபலமா யிருந்தது. வைர பேஸரியை வாங்குவதற்காக அருணாசலத்திடம் மூந்நூறு ரூபாய் கேட்டாள்.

"நீ மட்டும் வாங்கிப் போட்டுக் கொண்டால் நன்றாயிருக்குமா, இந்திரா!" என்றான் அருணாசலம்.

"அப்படியானால் எனக்குச் சில ஆசைகளே இருக்கப் படாதா! எதற்கெடுத்தாலும் பங்கா! இதை இனி சகிக்க முடியாது. நாளைக்கே வேறு வீடு பாருங்கள்" என்றாள்.

கடைசியில் அருணாசலம் அவளுக்கு மட்டும் வைர பேஸரி வாங்கித்தர இசைந்தான். அடுத்த நாள் வைர பேஸரி இந்திராவின் மூக்கில் ஏறியது, அதைக் கண்ட அவளுடைய மாமியார், "ஏண்டா, அருணாசலம்......ஒண்ணு மட்டும் வாங்கினால் எப்படிடா!" என்று ஆரம்பித்தாள்.

"ஆமாம்......எதற்கெடுத்தாலும் எல்லோருக்கும் வாங்குவது என்றால் குடி முழுக வேண்டியது தான். விரலுக்குத் தகுந்தாற்போல்தான் வீங்க முடியும்" என்றாள் இந்திரா.



" தொழிலாளர்களே, நம் தொழிலில் நமக்கு நல்ல ஊக்கம் வர வேண்டுமானால் அதற்கு என்ன முக்கியமாக வேண்டும்......" ;

" நீங்கள் பேசுகிறதால் எங்களுக்கு நல்ல தூக்கம்தான் வருகிறது. முக்கியமாக 'அரோரா' பாக்கு இருந்தால் போதும். நல்ல ஊக்கம் ஏற்பட்டுவிடும்.

அதற்கப்புறம் வார்த்தைகள் மீறிப் போய் விட்டன. இந்திராவின் பிடிவாதம் ஜெயித்தது.

மேலும் கசப்பு வளராமலிருக்க அருணாசலம் வேறு வீடு பார்த்துத் தனிக் குடித்தனம் வைக்கத் தீர்மானித்து விட்டான்.

* * *

தனிக் குடித்தனம் வந்ததிலிருந்து இந்திராவுக்குத் தலைகால் தெரியவில்லை. ஒரு பெரிய காரியத்தைச் சாதித்து விட்டதாகப் பூரித்தாள்.

அன்று மத்தியானம் இந்திரா ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தாள், வேலைகளை யெல்லாம் முடித்துக் கொண்டு. அச்சமயம், " இந்திரா " என்று குரல் கொடுத்து யாரோ உள்ளே வருவது கேட்டுத் திரும்பிப் பார்த்தாள். அவளுடைய அம்மாவும், தங்கை பார்வதியும் இரண்டு பெட்டி, படுக்கை, கூடை, கூஜா முதலிய வற்றுடன் உள்ளே நுழைந்து கொண்டிருந்தனர்.

அவளுடைய அம்மா பெட்டி படுக்கைகளை யெல்லாம் உள்ளே வைத்து விட்டு வந்ததும், " என்னம்மா, நீ வரப்போவது பற்றி தெரியப்படுத்த வில்லையே " என்று கேட்டாள் இந்திரா.

அவளுடைய தாயார் கூறிய கதையைக் கேட்டதும் இந்திரா திடுக்கிட்டாள். அவளுடைய தாயார் இதுவரை இந்திராவின் தமையன் வேதராமனிடம் இருந்து வந்தாள். அவன் மிகவும் நல்லவன்தான். ஆனால் அவனுடைய மனைவி பாரிஜாதியின் துர்ப்போதனையால் வரவர மிகவும் மாறிவிட்டான் என்றும், கடைசியில் ஒருநாள் சண்டை உண்டாகி அவன் அவர்களிருவரையும் வீட்டை விட்டுத் துரத்தி விட்டதாகவும் கூறி விட்டு, " இனி, நான் எங்கே போவேன், இந்திரா! நான் ஒண்டியாக இருந்தாலும் பாதகமில்லை. ஆனால் இவள் ஒருத்தி இருக்கிறாளே!" என்றாள்.

சாயங்கிரம் அருணாசலம் வந்ததும் " எங்கம்மா வந்திருக்கிறாள். பார்வதியும் கூட வந்திருக்கிறாள் " என்றாள் இந்திரா கொஞ்சியபடியே.

" ஓகோ......அப்படியா ! சந்தோஷம். என்ன சமாசாரம், ஊரில் எல்லோரும் சௌக்கியமா !" என்று கேட்டான் அருணாசலம்.

" இதைப் பாருங்கள், இந்த அநியாயத்தை. எங்க அண்ணா அம்மாவையும், பார்வதியையும் வைத்துக் காப்பாற்ற முடியாதுன்னு துரத்தி விட்டானும். அவளை இங்கேயே இருந்து விடும்படி சொல்லி விட்டேன் " என்றாள்.

"யார் எப்படி போனால் எனக்கென்ன! ஊராரை யெல்லாம் வைத்துக் காப்பாற்ற இங்கென்ன கொட்டியா வைத்திருக்கிறது...!" என்று கூச்சலிட்டான் அருணாசலம்.

இந்திராவுக்கும் கோபம் பொங்கியது. " ஏன் இப்படிக் கூச்சலிடுகிறீர்கள்! எங்கம்மா உங்களுக்கு ஊராராய்ப் போய் விட்டாளா !"

" ஆமாம். உங்கம்மாவா யிருந்தால் எனக்கென்ன ! என்னைப் பெற்று வளர்த்த அம்மாவும், என்னை மேலுக்குப் படிக்கவைத்து நான் இன்று இந்த நிலையில் இருப்பதற்குக் காரணமுமான என் அண்ணாவும் எனக்கு வேற்று மனுஷாளாய்ப் போன பிறகு உன் அம்மா மட்டும் எனக்குச் சொந்தமாகி விடுவாளா ! இந்த வீட்டில் உனக்கும், எனக்கும் தவிர வேறு யாருக்கும் இடமில்லை. எங்க அம்மா வையும் அண்ணாவையும் காப்பாற்ற எனக்கு அருகதை யில்லாதபோது உங்கம்மாவை மட்டும் காப்பாற்ற எனக்கு என்ன அருகதை இருக்கிறது! விருந்தாளிகளாக நாலுநாள் வேணுமானால் இருக்கட்டும் " என்று தீர்மானமாகச் சொன்னான் அருணாசலம்.

இந்திரா அவனுடைய பேச்சைக் கேட்டு ஸ்தம்பித்தாள். அவளுக்கு அப்போது தான் உண்மை கொஞ்சம், கொஞ்சமாக விளங்கியது. தான் செய்த தவறை நினைத்துப் பெரிதும் வருந்தினாள்.

" போதும், தனிக் குடித்தனம் நாளைக்கே அண்ணாவுடனும், அம்மாவுடனும் பழையபடி குடித்தனம் போவோம். எனக்குப் புத்தி வந்தது. இனி நீங்கள் என்ன செய்தாலும் குறுக்கே வருவதில்லை. ஆனால் எங்கம்மாவும், தங்கையும் மட்டும் இருக்க அனுமதியுங்கள். அவர்களுக்கு வேறு புகலிடம் ஏது !" என்று கெஞ்சினாள்.

" ஆகட்டும் " என்றான் அருணாசலம்.

நான்கு நாட்கள் கழிந்து – மறுபடி குடும்பங்கள் ஒன்று சேர்ந்த பிறகு – அன்று கடிதம் ஒன்று வந்தது இந்திராவின் தாயாருக்கு. அது இந்திராவின் தமையன் வேதராமனிடமிருந்து வந்தது. அவன் தான் செய்த தவறுக்கு வருந்துவதாகவும், தன் மனைவியும் மிகவும் மன்னிப்புக் கேட்பதாகவும், உடனே அவளும், பார்வதியும் புறப்பட்டு வரவேண்டு மென்றும் எழுதியிருந்தான்.

அடுத்த நாளே இருவரும் புறப்பட்டுப் போனார்கள். இந்திரா தன் தமையனுடையகுணம் திடீரென்று மாறிவிட்டது குறித்து மகிழ்ந்ததுடன், ஆச்சரியமும் அடைந்தாள்.

ஆனால் இதெல்லாம் அவளுடைய கணவன் அருணாசலத்தின் முயற்சியால் அவளுடைய தாயாரும், அண்ணன் வேதராமனும் சேர்ந்து அவளுடைய குணத்தை மாற்ற நடத்த நாடகம் என்று அவளுக்கு எப்படித் தெரியப் போகிறது!

# சிறப்பான போல்டிங் காமிராக்கள்

## . . . மிதமான விலைகளில்

இதோ இவை இன்றைய மிகப்பிரசித்தமான மடக்குக் காமிராக்கள்-இதில் ஆச்சரியமென்ன! உபயோகிக்க எளிதாகவும், கைதேர்ந்த ரகம் படங்கள் எடுப்பதாகவும் இருக்கும் இவற்றின் விலைகள் அமெச்சூர் போட்டோக்காரர்களின் சக்திக்கு அடங்கியதாகவேயுள்ளன. இச்சிறப்பு மிக்க 'பிரௌனி' காமிராக்களை உங்கள் கோடக் வியாபாரியிடம் இன்றே போய்ப்பாருங்கள்!

**சிக்ஸ். 20 போல்டிங்**
**'பிரௌனி' காமிராக்கள்**

பிரதி சுருள் 'கோடக்' 620 பிலிமிலும் 2¼" × 3¼" அளவில் எட்டு ஆல்பம்-சைஸ் படங்கள் எடுக்கலாம். f/6.3 லென்ஸ் மாடலைக் கொண்டு (படத்தைப் பார்க்கவும்) நான்கடி அருகிலிருந்து தத்ரூபமான போர்ட்ரேட்டுகள் எடுக்க முடியும். ஷட்டருடன் ப்ளாஷ் இணைப்பு வசதியுமுண்டு. நான்கு விதமான டைம் எக்ஸ்போஷர் வசதியுமிருக்கிறது. அதன் விலைக்கு அரிய மதிப்புடைய அற்புதமான காமிரா!



ரூ. 105/-

*ஒவ்வொரு தினமும்.... சிறப்பான ஸ்னாப்புகள் எடுக்க அதிக சந்தர்ப்பங்கள்!*

**பிரகாசமான அல்லது மங்கிய வெளிச்சத்தில்:** மாற்றியமைக்கக்கூடிய துவாரமுள்ள லென்ஸ் இருப்பின் வெளிச்சம் எப்படியிருந்தாலும் நன்றாக எக்ஸ்போஷர் கொடுக்க சாத்தியமாகும். f/6.3 மாடலைகொண்டு வீட்டினுள் ஜன்னலருகிலிருக்கும் நல்ல வெளிச்சத்தில் ஸ்னாப்புகள்கூட எடுக்கலாம்.

**சிறப்பான செயல் படங்கள்:** அதிதுரிதமாக இயங்கும் ஷட்டர் இருப்பின், அசையும் உருவங்களை தெளிவாகபடம் பிடிக்க உதவிகரமாயிருக்கும். எளிய யுக்திகளைக் கையாண்டால் மிக துரிதமாக அசையும் உருவங்களைக்கூட படம் பிடித்து விடலாம்.

**இரவு ஸ்னாப்புகள் கூட:** வீட்டினுள் அல்லது இரவு வேளையில் அற்புதமான குடும்பப் படங்கள் எடுக்க விலை மலிவான ப்ளாஷ் பல்புகளை உபயோகியுங்கள். சூர்ய வெளிச்சத்திற்கு ஒப்பான இவ்வெளிச்சத்தைக் கொண்டு ஸ்னாப் ஷாட் ஆனாலும் சரி, 'ஓபன் ப்ளாஷ்' முறையில் எடுத்தாலும் சரி, வீட்டினுள் படம் பிடிப்பது வெளியே எடுப்பது போன்று சுலபமாகி விடுகிறது.

**மெனிஸ்கஸ் லென்ஸ் மாடல்**
ஒரு பாக்ஸ் காமிராவைப் போன்றே எளிதாக உபயோகிக்கலாம். போகஸ் செய்யத்தேவையில்லை. வேறு சரிசெய்ய வேண்டிய கருவிகளுமில்லை. சுலபமாக மடக்கி கைக்கடக்கமாக எடுத்துச்செல்லலாம். ரூ. 66/-

இரண்டு மாடல்களுக்கும் தோல் கேஸ் ரூ. 8/12

இவ்விலைகளில் விற்பனை வரி சேராது

கோடக் லிட்
(இங்கிலாந்தில் இணைக்கப் பெற்றது)
பம்பாய்
கல்கத்தா
டில்லி
மதராஸ்


வாழ்க்கையில் அதிக ஆனந்தம்
கால்கேட்
போரேட்டட்
பேபி பவுடரை
உபயோகிப்பதால்
........அதனால்தான் விவேகமுள்ள தாய்மார்கள் தங்கள் குழந்தையின் தளிர்மேனியை அரிச்சலற்றுப் பாது காக்க கால்கேட் போரேட்டட் பேபி பவுடரை உபயோகிக்கிறார்கள். மிக மெல்லிய மேனிக்கும் இதம் அளிப்ப தற்காக விஞ்ஞான முறையில் தயாரிக் கப்பெற்றது ... புண்படுத்தும் உஷ் ணம் தாக்காமல் தடுக்கிறது; குழந்தை நாள் முழுதும் ஜிலுஜிலுவென்று சௌகரியமாய் இருக்க உதவுகிறது. இதன் மெல்லிய நறுமணம் உங்களை யும் குழந்தையையும் கவர்ந்துவிடும்.
பணம் மிச்சம் — ஜயண்ட் சைஸ் வாங்குங்கள்
COLCATE
BORATED
BABY POWDER


டன்லப்
வெகுகாலம்
உழைக்கும்



# ஓரவஞ்சனை

ஸரோஜா ஸ்ரீநிவாஸன்

சூவென்று பேரிரைச்சலுடன் நீண்ட பெருமூச்சு விட்டபடியே எழும்பூர் ஸ்டேஷனில் வந்து நின்றது தனுஷ்கோடி பாஸஞ்சர். அரை மணி நேரத்திற்கு முன் அமைதி குடிகொண்டிருந்த ஸ்டேஷன் கணத்தில் கலகலப்படைந்தது. கூலிக்காரர்களும், போர்ட்டர்களும் திமுதிமுவென்று வண்டியை நோக்கி வேகமாக ஓடினர். வண்டியிலிருந்து பிரயாணிகள் பரபரப்புடன் இறங்கிக் கொண்டிருந்தனர். பெண்கள் வண்டியிலிருந்து ஹேமா ஜன்னல் வழியாகத் தலையை நீட்டி ஆவலுடன் வெளியே எட்டிப் பார்த்தாள். அவள் கண்கள் பரபரப்புடன் நாற்புறமும் சுற்றிச் சுழன்று யாரையோ தேடின. ஆனால் வெளியே பிரிந்து செல்லும் ஜன சமுத்திரத்தினிடையே தேடின நபரைக் காணவில்லை.

இதற்குள்ளாகக் கைக்குழந்தை கண்ணன் அழ ஆரம்பித்து விட்டான். பரபரப்புடன் குழந்தையைத் தூக்கிக் கொண்டாள் ஹேமா. அடுத்த நிமிஷமே கண்ணனுக்குச் சுருதி கூட்டுவது போலத் 'தலைச்சன்' பெண் ராஜியும் 'அம்மா...... காப்பி......' என்று ஈனசுரத்தில் சிணுங்க ஆரம்பித்தாள். ஹேமாவின் பாடு தர்ம சங்கடமாகி விட்டது. அவளுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. வண்டி நின்று ஐந்து நிமிஷமாகி விட்டது. இன்னும் எல்லாச் சாமான்களையும் இறக்கியாக வேண்டும். குழந்தைகளின் பசிக்கும் ஏதாவது வழி முதலில் செய்தாக வேண்டும். இத்தனை அமளியிலும் அவள் கணவன் விசுவநாதன் ஸ்டேஷனுக்கு வரவில்லை. ஹேமா தவித்துப் போனாள்.

கடைசியில் ஒருவாறாக மனத்தைத் திடப்படுத்தியபடி ஒரு போர்ட்டரைக் கூப்பிட்டுச் சாமான்களை இறக்கினாள் ஹேமா. போர்ட்டர் மூலமே ஒரு வண்டியைப் பேசி அமர்த்திக் கொண்டாள். வண்டியில் அவள் ஏறும் சமயத்தில், "அக்கா!" என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டுத் திரும்பினாள் ஹேமா. அவள் தம்பி சேது வண்டியை நோக்கி வேகமாக வந்து கொண்டிருந்தான்.

"சேதுவா? ஏண்டா, அத்திம்பேர் ஸ்டேஷனுக்கு வரவில்லையா? நீ மாத்திரம் வந்தாயா? ஏன் இத்தனை நேரம்?" என்று படபடப்பான குரலில் கேட்டாள் ஹேமா.

சேது ஒரு நிமிஷம் பதிலொன்றும் பேசவில்லை. "அக்கா! நீ முதலில் வண்டியில் ஏறு. வீட்டுக்குப் போய் எல்லா விஷயமும் சாவகாசமாகப் பேசிக் கொள்ளலாம்" என்று சொல்லியபடியே ராஜியைத் தூக்கிக் கொண்டான்.

ஹேமா மௌனமாக வண்டியிலேறினாள்.

"ஏன், அக்கா! ராஜி உடம்பு இளைத்து இப்படி உருமாறிப் போய்விட்டாளே! இவளுக்கு என்ன உடம்புக்கு?" – போகும்போது வழியில் கேட்டான் சேது.

"அவளுக்குத்தான் ஒரு மாசமாக உடம்பே சரியில்லை, சேது! தொண்டைப் பக்கம் ஏதோ வீங்கினாற்போல் இருந்தது. ஏதாவது கடியாயிருக்கும் என்று அம்மா ஊரிலே மந்திரித்தாள். ஏதோ எண்ணெயெல்லாம் வாங்கித் தடவினாள். ஒன்றுக்கும் அது கேட்கவில்லை. கொஞ்சம் கொஞ்சமாக வீக்

கம் பெரிதாகி விட்டது. உடம்பும் இளைக்க ஆரம்பித்து விட்டது. எனக்குப் பயமாய்ப் போய் விட்டது. அதனால் உடனே புறப் பட்டு வந்து விட்டேன். இங்கேதான் நல்ல டாக்டரிடம் கொண்டு போய் அத்திம்பேரை விட்டுக் காட்டச் சொல்லணும்'' என்று விவரித்தாள் ஹேமா.

"அக்கா!" — தாழ்ந்த குரலில் தயக்கத் துடன் கூப்பிட்டான் சேது.

"என்ன, சேது?"—அவன் தயக்கத்தைக் கண்டு படபடக்கும் இருதயத்துடன் கேட் டாள் ஹேமா.

"நீ இத்தனை நாள் கழித்துக் குழந்தையின் உடம்பை இவ்வளவு மோசமாக்கிக் கொண்டு வந்தது உன் பேரிலே தப்பு. அத்திம்பேர் உன் மேலே ரொம்ப ரொம்பக் கோபமாயிருக் கிறார்......அதனால்தான் உனக்குக் கடிதாக கூடப் போடவில்லை. இன்றைக்கு ஸ்டேஷ னுக்கும் வரவில்லை. நீ இன்றைக்கு வரப் போகிற விஷயமே எனக்குத் தெரியாது. நாலு மணிக்கு மேலேதான் என்னைக் கூப் பிட்டு விஷயத்தைச் சொல்லி ஸ்டேஷனுக்குப் போகச் சொன்னார். அதனால்தான் நான் வரத் தாமதமாகி விட்டது. இது வரைக்கும் அத்திம்பேருக்கு இத்தனை கோபம் வந்ததே கிடையாது. அக்கா!" என்று சொல்லி நிறுத்தினான் சேது.

இவ் விஷயத்தைக் கேட்ட ஹேமாவின் முகத்தில் கலவரம் குடி கொண்டது. அவள் முகத்திலிருந்த சந்தோஷமும், குதூகலமும் இருந்த இடம் தெரியாமல் மறைந்தன.

வீடு வந்து விட்டது. ஹேமா குழந்தை யுடன் பரபரப்பாக வண்டியிலிருந்து இறங் கினாள். விசுவநாதனின் உருவத்தை வாயிற் படியில் அவள் கண்கள் ஆவலோடு தேடின. ஆனால் ஏமாற்றம்தான் அவளை வரவேற்றது.

"வாடியம்மா, ஹேமா!" என்று அன்புடன் அழைத்தபடியே உள்ளே யிருந்து வந்த சாவித்திரி அம்மாள் கண்ணனை ஹேமாவிடமிருந்து ஆவ லுடன் வாங்கிக் கொண்டாள். குழந் தையை மாமியிடம் கொடுத்து விட்டுப் பரபரப்புடன் தன் போர்ஷ னுக்குள் நுழைந்தாள் ஹேமா. விசுவ நாதனை உள்ளே காணவில்லை. ஹேமாவுக்குத் துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது. விடு விடென்று சாவித்திரி மாமியின் போர்ஷனுக்குத் திரும்பி வந்தாள்.

"மாமி! அவர் எங்கே, மாமி?"— இதைக் கேட்கும்போது ஹேமாவின் கண்களிலிருந்து கட கட வென்று நீர் பெருகிற்று.

"அசடு! இப்பொழுது எதற்காக அழுகிறாய்? அவன் இப்பொழுது தான் எங்கேயோ வெளியில் போனான். நீ போய்க் கை காலை அலம்பிக் கொண்டு வா. முன்னால் காப்பி சாப்பிட்டு விட்டு அப்புறம் எல்லா விஷய மும் பேசிக் கொள்ளலாம். — ராஜியின் உடம்பு ஏன் இத்தனை மோசமாகி விட்டது? கழுத்துப் பக்கம் ரொம்ப வீங்கி இருக் கிறதே! அது சரி! அவனுக்கு என்ன ஆகாரம் கொடுக்கிறாய்? கொஞ்சம் ஓவல்டின் கரைத்துக் கொடுக்கட்டுமா?" என்று கேட் டாள் சாவித்திரி மாமி.

"ஓவல்டின்னே கொடுங்கோ, மாமி! கைக் குழந்தைக்குப் பசும்பால் இருந்தால் கொடுங் கள்" என்று கூறினாள்.

"ஏண்டி, அசடு! குழந்தையின் உடம்பு இப்படிக் குட்டிச் சுவராகிற வரைக்கும் ஊரிலே இருப்பாயோ? உன் அகமுடை யான்தான் பதினைந்து நாள் முன்னாடியே புறப்பட்டு வரும்படி கடிதாக போட்டானே! உடனே புறப்பட்டு வரக்கூடாதோ? விசு வுக்கு உன் மேலே ரொம்பக் கோபம், போ! இரண்டு நாளாக என்னிடமும் மாமாவிடமும் கூடச் சரியாகப் பேசவில்லை. சேது சொன்ன அப்புறம்தான் எனக்கே நீ இன்றைக்கு வரு கிற விஷயம் தெரியும். அவனுடைய முன் கோப குணம் தெரிந்திருந்தும் நீ இப்படி இருக்கக் கூடாது!" ஹேமாவிடம் காப்பி யைக் கொடுத்தபடியே விஷயத்தைச் சொன் னாள் சாவித்திரியம்மாள்.



"எனக்குத் தெரியவில்லை, மாமி! குற்றம் என்பேரிலேதான். அதற்காக என்ன தண்டனை வேண்டுமானாலும் அவர் கொடுக்கட்டும், பட்டுக்கொள்கிறேன்" என்றாள் ஹேமா கண்களில் பொங்கி வந்த கண்ணீரைப் புடவைத் தலைப்பால் துடைத்துக் கொண்டே.

"வருத்தப்படாதே, ஹேமு! என்ன இருந்தாலும் ராஜீ முதல் குழந்தை. சேர்ந்த புத்திரி. பிள்ளை பிறந்ததும் அவனைக் கவனிக்காமல் நீ இருந்து விட்டாய் என்று உன் மேலே விசுவுக்குக் கோபம். எல்லாம் இரண்டு நாள் போனால் தானாகச் சரியாகப் போய்விடும்" என்று ஹேமாவைச் சமாதானப் படுத்தினாள் சாவித்திரி.

இந்தச் சமயத்தில் விசுவநாதன் உள்ளே நுழைந்தான். அவனைக் கண்ட சாவித்திரி, "இந்தாடா, விசுவம்! இங்கே வா!" என்று கனிவுடன் கூப்பிட்டாள். ஹேமா திடுக்கிட்டுப் படபடப்புடன் எழுந்து நின்றாள். விசுவநாதன் காதில் விழாதவன் போல் தன் போர்ஷனுக்குள் நுழைந்தான்.

"என்னா! அவனைப் போய்க் கூப்பிடுங்கோ. ஹேமாவிடம் கோபம் என்றால் நான் என்ன பண்ணினேன்? காதிலே விழாத மாதிரிப் போகிறானே!" என்று அன்புடன் தன் கணவருக்குக் கட்டளை யிட்டாள் சாவித்திரி.

நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்த சர்மா எழுந்து போய் விசுவநாதனைக் கூப்பிட்டார். அவர் வார்த்தையைத் தட்ட முடியாமல் வந்தான் விசுவநாதன். "விசுவம்! இந்தாடா, குழந்தையை எடுத்துக் கொள். ராஜாப் பயல் எப்படி இருக்கிறான், பாரு! அசல் உன்னையே உரித்து வைச்சிருக்கிறான்.



போக்கிரி! சிரிக்கிறதைப் பாரு!" என்று கூறி எட்டு மாதக் கண்ணனை விசுவநாதனிடம் நீட்டினாள் சாவித்திரி.

விசுவநாதன் கைநீட்டிக் குழந்தையை வாங்க வில்லை. ஏன்? அதை நிமிர்ந்து கூடப் பார்க்கப் பிடிக்காதவன் போல் வெறுப்புடன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

"ஏன் விசுவம்! குழந்தை உன்னை என்ன பண்ணியது? பச்சைக் குழந்தைமீது இப்படி வைராக்கியம் பாராட்டாதே! ஹேமா சிறிசு. என்னமோ தெரியாமல் இருந்துவிட்டாள். நாளைக்கே ராஜீயை டாக்டரிடம் காட்டி வைத்தியம் பண்ணினால் சரியாகப் போய்விடும். இந்தா, குழந்தையை வாங்கிக் கொள்!" என்றாள் சாவித்திரி.

இதற்குள் கண்ணன் ஆ...ஊ...என்று விளையாடியபடியே விசுவநாதனிடம் தாவினான். ஆனால் விசுவநாதன் சிறிதும் அசைந்து கொடுக்க வில்லை.

"மாமி, எனக்குப் பிடிக்கவில்லை! என்னைத் தொந்தரவு பண்ணுறீர்கள்!" என்று சொன்ன விசுவநாதனின் வார்த்தைகளில் வெறுப்பும், அசட்டையும் கலந்து தொனித்தன. அதற்கு மேல் அவனிடம் பேசுவதில் பயனில்லை என்று உணர்ந்த சாவித்திரி சர்மாவிடம் கண்ணனைக் கொடுத்து விட்டு 'வெடுக்' கென்று எழுந்து உள்ளே போய் விட்டாள்.

* * *

விசுவநாதனுக்குப் பாங்கு ஒன்றில் காஷியர் வேலை. மாதம் நூற்றைம்பது ரூபாய் சம்பளம். அவனுக்கு உற்றார் உறவினர் யாரும் இல்லை. முதல் முதலாக வேலை தேடிப் பட்டணம் வந்த புதிதில் சர்மாவின் வீட்டில் ஒரு அறையில் குடியேறினான். சர்மாவுக்கு நீண்ட நாட்களாகவே புத்திர பாக்கியம் கிடையாது. அந்தக் குறையை விசுவநாதன் மூலம் தீர்த்துக் கொண்டார். சாவித்திரிக்கும் விசுவநாதனிடம் அலாதி அன்பு உண்டு. அவனைத் தன் பிள்ளையாகப் பாவித்து அவனிடம் அதிகச் சலுகையுடன் நடந்து கொண்டாள். விசுவநாதனுக்கும் ஏனோ தெரியவில்லை, அந்தக் குடும்பத்தில் தனிப் பிடிப்பும், பந்தமும் ஏற்பட்டு விட்டது. சாவித்திரியிடமும், சர்மாவிடமும் அவனுக்கு மட்டற்ற மரியாதையும் அன்பும் உண்டு. ஏழெட்டு வருஷங்களாக ஒன்றாய்ப் பழகிய தோஷம் விசுவநாதனை அந்தக் குடும்பத்திலேயே ஒருவனாக்கி விட்டது. "எனக்கு ஒரு பெண் இருந்தால் விசுவுக்குக் கொடுத்து அவனை என் மாப்பிள்ளையாக்கிக்கொண்டிருப்பேன்" என்று சாவித்திரி அடிக்கடி சொல்லிக் கொள்வது உண்டு.

ஆனால் அந்தப் பாக்கியம் ஹேமாவின் பெற்றோருக்குத்தான் கிட்டிற்று. திருச்சிக்கு அருகில் உள்ள கிராமம் ஒன்றில் பிறந்து வளர்ந்த ஹேமா விசுவநாதனின் மனைவியாக வந்து வாய்த்தாள். ஹேமாவைச் சாவித்திரிக்கு ரொம்பவும் பிடித்துப் போய் விட்டது.

தனித்தனி போர்ஷனில் குடியிருந்தாலும் இரு குடும்பங்களும் சந்தோஷமாகவே வாழ்க்கை நடத்தி வந்தன.

கல்யாணமான மறு வருஷம் ஹேமாவுக்கு ராஜி பிறந்தாள். அபூர்வமாய்ப் பிறந்து அந்த வீட்டிலே ராஜி ஒரு குழந்தையாக வளைய வந்து எல்லாருடைய அன்பிலும், அரவணைப்பிலும் வளர்ந்து வந்தாள். விசுவநாதனுக்குச் சந்தோஷம் கரை புரண்டது. என்றைக்குமே அவனுக்குக் குழந்தைகள் என்றால் பிடிக்கும். அதுவும் தன்னை அப்பா என்று முதல்முதலாக மழலை மொழியில் அழைத்து, தன் விளையாட்டுக்களிலும், விஷமங்களிலும் அவன் இதயத்தை மகிழ்விக்கப் பிறந்த முதற் குழந்தை அல்லவா அவள்? எனவே, ராஜியிடம் உயிராக இருந்தான் விசுவநாதன்.

ராஜி பிறந்த மறு வருஷம் ஹேமா இரண்டாம் முறையாகக் கருத் தரித்தாள். உலக வழக்கத்தை யொட்டி ஹேமாவைப் பிரசவத்திற்காக ஊருக்கு அனுப்பி வைத்தான் விசுவநாதன். முதலில் ராஜியைப் பட்டிக்காடான ஊருக்கு ஹேமாவுடன் அனுப்பி வைப்பதில் அவனுக்கு இஷ்டமில்லை. குழந்தையைப் பிரிந்து இருப்பது என்பது அவனால் முடியாது போல் இருந்தது. ஆனால் சவலைக் குழந்தையானதால் ஹேமாவை விட்டுப் பிரிந்திருக்காதென்று சாவித்திரி கட்டாயப்படுத்திச் சொன்னதின் பேரில் ராஜியை அரை மனத்துடன் ஊருக்கு அனுப்பி வைத்தான். ஹேமாவுக்கு ஆண் குழந்தை பிறந்திருப்பதாகக் கடிதம் வந்தது. விசுவநாதனுக்குக் கொள்ளை சந்தோஷம். புண்ணியாஹவசனத்திற்காக ஊருக்குப் போனான். ஆனால் அங்கு ராஜியைக் கண்ட நிலை அவனைத் தூக்கி வாரிப் போட்டது. கொழு கொழுவென்று சுவர்ண விக்கிரகம் போல் இருந்த ராஜி இளைத்து உருமாறிக் களை யிழந்து காணப்பட்டாள். விசுவநாதனுக்கு ஹேமாவின் மீது கோபம் ரௌத்திராகாரமாகப் பொங்கி வந்தது. அவனுடைய அசிரத்தையும், போஷாக்குக் குறைவும்தான் குழந்தை ராஜியின் நிலை மோசமானதற்குக் காரணம் என்று நினைத்தான். சீக்கிரமே புறப்பட்டு வரும்படி கோபத்துடன் சொல்லி விட்டு உடனேயே சென்னைக்குத் திரும்பி விட்டான்.



மனைவி :—என் மாமா விடமிருந்து நிறையச் சொத்து வந்ததனால்தானே என்னைக் கல்யாணம் செய்து கொண்டீர்கள்?

கணவன் :—அப்படி யொன்றும் இல்லையே! உனக்கு யாரிடமிருந்து சொத்து வந்திருந்தாலும் உன்னைத்தான் கல்யாணம் செய்து கொண்டிருப்பேன்!

ஹேமாவுக்கு விசுவநாதனின் குணம் தெரியும். சீக்கிரம் புறப்பட அவள் எவ்வளவு துடித்தபோதும் ஏதாவது அசந்தர்ப்பம் சேர்ந்து பிரயாணம் தடைபட்டுக் கொண்டேயிருந்தது. சோதனைபோல் ராஜியின் உடம்பும் துரும்பாக இளைத்துத் தொண்டையின் இருபுறமும் பெரிதாக வீங்கி விட்டது. ஹேமா பயந்தே போய்விட்டாள். கணவர் தன்னைக் கோபிப்பாரோ என்று நினைத்து உடனே புறப்பட்டு விட்டாள். அவள் பயந்தபடியே ஆகி விட்டது. விசுவநாதன் அவளுக்கு அளித்த வரவேற்பு அவள் மீதுள்ள அவனது கோபத்தின் உச்சத்தை நன்றாக நிரூபித்துக் காட்டியது.

* * *

முகத்தில் கோபம் ஜொலிக்க விரைப்பாகச் சாய்வு நாற்காலியில் சாய்ந்து கொண்டிருந்தான் விசுவநாதன். கண்ணீரும் கம்பலையுமாக அவன் எதிரில் குற்றவாளியைப் போல் மண்டியிட்டு உட்கார்ந்திருந்தாள் ஹேமா. அவர்களுக்கருகே இருந்த குழந்தை கண்ணன் தவழ்ந்தபடியே சாய்வு நாற்காலியின் பக்கம் வந்தான்.

"நான் செய்த தப்புக்கு என்ன தண்டனை வேணுமானாலும் கொடுங்கள். அதை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் உயிரோடு சித்திரவதை செய்கிறதுபோல பராமுகமாய் இருந்து விடாதீர்கள்!" என்று மன்னிப்பை வேண்டிக் குரலிலே குழைவைக் குழைய விட்டபடி கேட்டாள் ஹேமா.

காத்துக் கொண்டிருந்தவனைப்போல் சீறினான் விசுவநாதன். "செய்கிறதையும் செய்துவிட்டு அழுகை வேறு, நீ! உனக்குப் பிள்ளைதான் உசத்தி! அவன்தானே நாளைக்குச் சம்பாதித்துக் கொட்டி உன்னைக் காப்பாற்றப் போகிறான்! அதனால் பிள்ளை பிறந்ததும் உனக்குப் பெருமை பிடிபடவில்லை. பிள்ளையைக் கொஞ்சி மகிழ்ந்த ஜோரிலே பெண்ணைக் கவனிக்க முடியவில்லை. அசிரத்தை மிஞ்சிப் போய் விட்டது. நான் சொன்ன வார்த்தையையும் லட்சியம் செய்யவில்லை. என் பெண் இருந்தால் என்ன, செத்தால் என்ன! உனக்குப் பிள்ளை இருக்கிறான். போதும்! உன் எண்ணம் அப்படித்தானே?" என்று ஏகத்தாளம் நிறைந்த குரலில் கேட்டான் விசுவநாதன். அவனுடைய ஒவ்வொரு வார்த்தையிலும் விஷம் தெறித்தது.

"ஐயோ! இதென்ன விபரீதப் பேச்சு! எனக்கா அப்படிப்பட்ட எண்ணம்? என் வயிற்றிலே பிறந்த குழந்தையிடமே எனக்கு என்ன வஞ்சனை இருக்க முடியும்! வீணாக



தஞ்சை ஜில்லா விஷ்ணுபுரம் [illegible] ஹைஸ்கூலின் வருடாந்திரக் கொண்டாட்டம் ஏப்ரல் மாதம் 15-ந் தேதி சென்னை மந்திரி கனம் மாணிக்கவேலு நாயக்கரின் தலைமையில் மிகச் சிறப்பாக நடந்தேறியது. அக் கொண்டாட்டத்தின் பொழுது பள்ளி மாணவர்கள் 'மனோஹரா' என்னும் நாடகத்தை வெகு அருமையாக நடித்தனர்.

வார்த்தையைக் கொட்டி என் மனசைப் புண்ணாக்காதீர்கள். போதாத காலம்தான், ராஜிக்கு உடம்புக்கு நோய் வந்துவிட்டது" என்று அரற்றினாள் ஹேமா.

"போதாத காலமா? ஹூம்...! எல்லாம் உன் கவனக் குறைவும் அகம்பாவமும்தான். பிறந்தகச் சீராட்டத்திலும், பிள்ளையைச் சீராட்டுவதிலும் என் பெண்ணைச் சாக அடிக்க வழி பண்ணிவிட்டாய்? உன் பிள்ளையை மட்டும் நன்றாக மொழு மொழு வென்று கொண்டு வரத் தெரிந்ததா?"— ஒரு படி அதிகமாகவே தன்னை மறந்து கோபத்தில் பேசிவிட்டான் விசுவநாதன்.

ஹேமா துடிதுடித்துப் போனாள். அவன் வார்த்தைகள் அவள் இருதயத்தை வாள் கொண்டு அறுத்தன.

"ஐயோ, இதென்ன? பச்சைக் குழந்தையைப் பார்த்து இத்தனை வர்மமாய்ப் பேசுகிறீர்களே! இது உங்களை என்ன பண்ணிற்று? இவனும் உங்கள் குழந்தை தானே? உங்கள் ரத்தத்திலே ஊறின ஜீவன் தானே?" என்று கூறிய ஹேமாவினால் மேலே பேச முடியவில்லை. முகத்தை முந்தாணையினால் மூடிக்கொண்டு விசித்த வாறே உள்ளே சென்று விட்டாள்.

கோபத்தில் ஏதேதோ பொரிந்து தள் ளிக்கொண்டு விசுவநாதனும் வெளியே சென்

விசுவநாதனுக்கு ஹேமாவின் சொல்லின் உள்ள உண்மை புலப்பட்டது. 'ஒரு தாய் தன் குழந்தையிடமே ஓரவஞ்சனை காட்டுவாளா? நாம்தான் பெரிய முட்டாள். அவளைப் போய் கோபித்துக்கொண்டோமே' என்று எண்ணியபோது கோபத் தீ கக்கிய நீராவி கண் வழியே நீராக வடிந்தது. உடனே வீட்டை நோக்கித் திரும்பி வந்தான். வீட்டுக்கு வந்தபோது கதவு பூட்டியிருந்தது. நம் செய்கைக்காகக் கோபித்துக் கொண்டு ஹேமா பிறந்தகம் போயிருப்பாளோ என்று எண்ணிய அவனுக்கு மனத்தை என்னமோ செய்தது. அப்படியே தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்து விட்டான்.

சிறிது நேரத்துக்கெல்லாம் ராஜியைத் தூக்கிக் கொண்டு ஹேமாவும், கண்ணனைத் தூக்கிக்கொண்டு சாவித்திரி மாமியும் வந்து சேர்ந்தார்கள். ராஜியின் கையில் மருந்து பாட்டில் இருந்தது. சாவித்திரி மாமி, "அப்பாடா! இப்பொழுதுதான் கவலைவிட்டது. டாக்டர் 'நாலைந்து நாட்களில் ராஜிக்குப் பூரண குணமாகிவிடும்' என்று சொன்னார். குணமானதும் வடபழனி ஆண்டவருக்கு அபிஷேகம் செய்ய வேண்டும்!" என்று சொல்லிக்கொண்டே நுழைந்தாள்.

"நிஜமாகவா?" என்று கேட்டவாறே விசுவநாதன் எழுந்தான். தன் 'ங்' பாஷையில் 'ஆமாம்' [illegible]



அதிக வெண்மையான பற்கள் சுத்தமான வாய்
COLGATE
RIBBON DENTAL CREAM
ஒளிவீசும் புன்னகைகள் கோல்கேட் புன்னகைகள்




ஸ்பென்ஸர்ஸ்
ஸூதிங் ஸிரப்
குழந்தைகளை சிறப்பாக வைக்கிறது
SPENCER'S
SOOTHING SYRUP
AN INVALUABLE REMEDY FOR INFANT DISORDERS
SPENCER & CO. LTD.
வாயுப் பொருமல், தேக அசௌகரியங்கள், அதிக அமிலச் சேர்க்கை முதலான காரணங்களால் ஏற்படும் வேதனைகளை மிக விரைவில் நிவர்த்திக்கிறது.
ஸ்பென்ஸர் & கோ. லிமிடெட்.
மானுபாக்சரிங் கெமிஸ்டுகள்
1/153. மவுண்ட் ரோட், சென்னை-2 இந்தியா.




விக்ரமபுரி என்ற நாட்டை விக்ரம சிம்மன் என்னும் ஒரு அரசன் ஆண்டு வந்தான். அவனுக்கு வீர சிம்மன் என்னும் ஒரு புதல்வன் இருந்தான். அவன் நல்ல அழகன்; அது மட்டுமல்ல கல்வி கேள்விகளிலும் சிறந்து விளங்கினான். ஆனால் ஒரே ஒரு கெட்ட குணம் மட்டும் அவனிடம் இருந்தது. அது என்னவென்றால் யாரைக் கண்டாலும் சற்றுத் துடுக்காகப் பேசுவதுதான்.

அரசனுடைய தோட்டத்தில் ஒரு தேவதை வசித்து வந்தது. அது வீர சிம்மனை மிகவும் நேசித்தது. ஆனால் அவனுடைய துடுக்குத் தனத்தை வெறுத்தது. அவனுடைய அந்தக் குணத்தை எப்படியாவது போக்க வேண்டுமென்று மனத்தில் எண்ணிக் கொண்டது.

ஒருநாள் அந்த தேவதை ஒரு நொண்டிப் பிச்சைக் காரனைப் போல வேடம் தரித்து அரண்மனை வீதி வழியே சென்றுகொண்டிருந்தது. அப்போது அரண்மனை உப்பரிகையிலிருந்து வீரசிம்மன் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். நொண்டிப் பிச்சைக் காரனைக் கண்டதும் அவனுக்குச் சிரிப்பு வந்தது. உடனே பிச்சைக்காரனைப் பார்த்து, "ஏ, பிச்சைக்காரா, எங்கள் அரண்மனையில் ஒரு ஓட்டப் பந்தயம் நடத்தப் போகிறோம். அதில் நீயும் கலந்து கொள்கிறாயா? கலந்து கொண்டால் உனக்குத்தான் முதல் பரிசு கிடைக்கும்!" என்று சொல்லிக் கேலி செய்தான். பிச்சைக் காரன் உருவத்திலிருந்த தேவதைக்கு ரொம்பவும் கோபம் வந்து விட்டது. வீர சிம்மனை நோக்கி, கோபமாய் "உனக்கு இந்தக் கதி நேர அதிக நாள் பிடிக்காது. அப்போதுதான் உனக்கும் புத்தி வரும்" என்று சாபம் கொடுத்து விட்டது. அருகிலிருந்தவர்கள் "ஐயா, அரசகுமாரன் ஒன்றும் அறியாதவன். அவனை நீங்கள் மன்னித்து விடவேண்டும்" என்று வேண்டிக் கொண்டனர். அதற்குத் தேவதை அவனுடைய கல்யாணத்தின் போது அவன் கால் நேராகும் என்று கூறி விட்டுத் தான் வந்த வழியே சென்றது.

நொண்டி வீர சிம்மனுக்கு வயது ஆகி வந்தது. கல்யாணமாகும் பருவமும் வந்தது. ஆனால் நொண்டி ராஜகுமாரனை மணக்க யார் முன் வருவார்கள்? கடைசியில் தன் ஆப்த நண்பனை அமரபுரி அரசனுக்கு விக்ரம சிம்மன் ஆட்களை அனுப்பித் தன் குமாரனுக்கு அவன் குமாரியைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி கேட்டான். அதற்கு அவனுடைய குமாரி "நொண்டி ராஜகுமாரனுக்கு ஏற்றவள் ஒரு நொண்டி ராஜ குமாரிதான். நான் அல்ல" என்று பரிகாசம் செய்து ஆட்களைத் திருப்பி அனுப்பி விட்டாள்.

அரசனுடைய ஆட்கள் திரும்பி வந்து நடந்ததைக் கூறினர். இதைக் கேள்வியுற்ற அரசன் தன்னுடைய ஆப்த நண்பனே இவ்வாறு மறுத்தால் வேறு யார் தன் மகனை மணக்க முன் வருவார்கள் என்று மிகவும் கவலைக்குள்ளானான்.

இது இப்படியிருக்கையில் ஒரு சமயம் வீரசிம்மன் வேட்டையாடக் காட்டுக்குச் சென்றான். வேட்டையாடின பிறகு களைத்து ஒரு மரத்து நிழலில் அமர்ந்து



புது டில்லியில், கும்பகோணம் மடத்தைச் சேர்ந்த அக்னி ஹோத்ரம் ராமானுஜ தாத்தாச்சாரியார் அவர்கள் ஒரு மாத காலமாகச் சமயப் பிரசங்கங்கள் புரிந்து, புது டில்லித் தமிழர்களை ஆஸ்திக வெள்ளத்தில் மூழ்கடித்தார்.

இளைப்பாறிக் கொண்டிருந்தான். அப்போது ஒரு பஞ்சவர்ணக் கிளி வேகமாகப் பறந்து வந்தது. பஞ்சவர்ணக் கிளி இறக்கையை அடித்துக் கொண்டு பறந்து வந்த அழகைப் பார்த்தான். அடுத்த கணம் அதைப் பிடிப்பதற்காக அமரபுரி இளவரசி ஓடி வந்தாள். ஓடி வந்த வேகத்தில் கால் தடுக்கி ஒரு பெரிய பள்ளத்தில் உருண்டு விழுந்து விட்டாள்.

இதைக் கவனித்த அரச குமாரன் அவள் தன்னைப் பரிகாசம் செய்ததையும் மறந்து, அவளை அந்தப் பள்ளத்திலிருந்து தூக்கிக் கொண்டு வந்து அவள் அரண்மனையில் சேர்த்தான். இளவரசிக்குக் காலில் பலத்த காயம் ஏற்பட்டிருந்தது. அரண்மனை வைத்தியர்கள் அதற்கு எவ்வளவோ வைத்தியம் செய்தார்கள். அதன் பயனாகக் காயம் ஆறிற்றே ஒழிய, காலைச் சிறிது நொண்டித்தான் நடக்க முடிந்தது. அப்போதுதான் அமரபுரி அரசனுக்குத் தன் மகளை மணக்க யார் முன் வருவார்கள் என்ற கவலை ஏற்பட்டது.

இதே ஏக்கத்தில் மன்னன் நோய் வாய்ப் பட்டான். இதைக் கேள்வியுற்ற விரசிம்மன் அமரபுரிக்கு வந்து "அரசே, தாங்கள் கவலைப்பட வேண்டாம். இப்போதும் அவள் சம்மதித்தால் நான் அவளை மணக்கத் தயாராயிருக்கிறேன்" என்றான்.

உடனே அரசன் "ராஜகுமாரா, உன் குணத்தைக் கண்டு நான் மிகவும் சந்தோஷப்படுகிறேன். உன்னைப் பரிகாசம் செய்ததற்குக் கடவுள் அவளுக்குத் தக்க தண்டனை அளித்துவிட்டார்" என்று கூறினான்.

புரோகிதர்களை யழைத்துத் திருமணத்திற்கு நாள் குறித்தனர். அந்த நன்னாளும் வந்தது. மணப் பந்தலில் அரச குமாரனும் அரச குமாரியும் மணக்கோலத்தில் அமர்ந்திருந்தனர். அப்போது எங்கிருந்தோ அந்த நொண்டிப் பிச்சைக்காரன் அங்கு வந்தான். உடனே விரசிம்மன் தான் ஒரு அரச குமாரன் என்பதையும் மறந்து பிச்சைக்காரன் காலில் விழுந்து "பெரியவரே, தங்களைப் பரிகசித்ததற்கு எனக்குத் தக்க தண்டனை கிடைத்தது. தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும்" என்று வேண்டிக் கொண்டான்.

என்ன ஆச்சரியம்! அப்போது அங்கு பிச்சைக்காரனுக்குப் பதில் தேவதை நின்று கொண்டிருந்தது. அது அவர்களைப் பார்த்து "குழந்தைகளே, உங்களை நான் மன்னித்து விட்டேன். உங்களுக்குப் புத்தி கற்பிப்பதற்காகத்தான் அப்படிச் செய்தேன். உங்கள் கால்கள் பழையபடி ஆகிவிடும். நீங்கள் கவலைப்பட வேண்டாம்" என்றது. உடனே மணமக்கள் இருவரும் தேவதையை வணங்கி எழுந்தனர். எழுந்ததுதான் தாமதம். அவர்களுடைய கால் ஊனம் மறைந்து பழையபடி ஆகிவிட்டது. அவர்களுடைய திருமணமும் இனிது நிறைவேறியது.




கடையிலே காலடி எடுத்து வைத்தான் ராகவன். அவனுக்குப் பின்னாலேயே மூன்று பெண்களும் கடைப்படி ஏறினார்கள். ராகவனின் நண்பனான சுந்தரம் கிராக்கியைக் கவனிப்பதில் ஈடுபட்டான். என்ன இருந்தாலும் வியாபாரியின் குணம் போகுமா!

"மிஸ்டர்! உங்களிடம் 'ஸிம்' இருக்கிறதா!"

என்னவென்றால், சுந்தரம் சோப்பு விற்று எத்தனையோ தடவை அவன் பார்த்திருக்கிறான். இது வரை அவன் பதினான்கு பதினைந்தணாவுக்குக் குறைந்து விற்றதில்லை. ஏன்! அவனிடமே கூட அவன் பதினான்கணாவுக்குக் குறைத்து வாங்கிக் கொண்டதில்லை. இன்று திடீரென்று இப்படி சோப்பின் விலை குறைவானேன்!


மூன்று முடிச்சுகள்

கடையிலே காலடி எடுத்து வைத்தான் ராகவன். அவனுக்குப் பின்னாலேயே மூன்று பெண்களும் கடைப்படி ஏறினார்கள். ராகவனின் நண்பனான சுந்தரம் கிராக்கியைக் கவனிப்பதில்

என்னவென்றால், சுந்தரம் சோப்பு விற்று எத்தனையோ தடவை அவன் பார்த்திருக்கிறான். இது வரை அவன் பதினான்கு பதினைந்தணாவுக்குக் குறைந்து விற்றதில்லை. ஏன்! அவனிடமே கூட

"அவளா......! யார் அவள்! ஓஹோ! யாரோ ஒருத்தி உன் வலையில் சிக்கிவிட்டாள் போலிருக்கிறது! என்ன, அப்படித்தானே!"

சுந்தரம் இள நகை புரிந்தான். "ஒருத்தி என்று வெகு இலேசாகச் சொல்லி விட்டாயே! அவள் சாமான்யப்பட்டவள் இல்லை, அப்பா! அப்ஸரஸ் என்றால் அப்ஸரஸ்! அதுவும் சந்திரலோகத்து அப்ஸரஸ்! ஆகா! அவள் கண்கள்தான் எப்படிக் கருமை விட்டுக் கவர்ச்சிகரமாயிருக்கின்றன, தெரியுமா! அப்பப்பா! அவளுடைய கண்களின் ஆழத்திலே பளிச்சிடும் ஒளி......! என்னத்தைச் சொல்வேன், போ! அதன் காரணமாக விற்பனை வரி காலணாவுக்கும் ...!" என்று ஏகமாக வர்ணிக்கத் தொடங்கி விட்டான்.

"பேஷ்! பேஷ்! நன்றாயிருக்கிறது வர்ணனை! உன் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு போனதோடு மட்டும் அல்லாமல் விற்பனை வரி காலணாவையும் அல்லவா அவள் கொள்ளை கொண்டு போய் விட்டாள் என்று தெரிகிறது!" என்றான் ராகவன் பரிகாசம் தொனிக்க.

"உன் பரிகாசத்தை ஒருபுறம் மூட்டை கட்டி வை!" என்று சள்ளென்று விழுந்தான் சுந்தரம்.

"கோபித்துக் கொள்ளாதே அப்பா! இதோ மூட்டை கட்டி வைத்து விட்டேன். அது போகட்டும். உன் உள்ளத்தைக் கொண்டு போனாளே, போகும்பொழுது தன் விலாசத்தையாவது கொடுத்துச் சென்றாளோ!"

"விலாசமா!" — சுந்தரம் சிரித்து விட்டு, "போடா, போ! முன்பின் தெரியாத வாடிக்கைக்காரர்கள் எப்பொழுதாவது விலாசம் கொடுத்துப் போவது உண்டா! ஆனால் ஒன்று மட்டிலும் சந்தேகம் இல்லை. அவள் என்னை மனமாரக் காதலிக்கத் தொடங்கி விட்டாள்!" என்றான்.

"ச்...! நீயும் காதலிக்கத் தொடங்கி விட்டாய் அல்லவா!" என்று கேட்டான் ராகவன்.

சுந்தரம் இதற்குப் பதில் சொல்வதற்குப் பதிலாகப் புன்முறுவல் புரிந்தான். ராகவனும் பதிலுக்கு ஒரு சிறிய சிரிப்புச் சிரித்து வைத்தான். பிறகு, "அது இருக்கட்டும், மிஸ்டர்! இந்தக் காதல் எப்படி ஆரம்பமாயிற்று! அந்த கதையைச் சொல்லு!" என்று கேட்டான்.

"எப்படியோ ஆரம்பமாயிற்று. நேற்று மத்தியானம் நடந்ததைக் கேளு. நான் சாப்பிட்டு விட்டுக் கடைக்குப் போனேன். அவளும் சரியாக அதே சமயத்துக்கு வந்து சேர்ந்தாள். என்னைப் பார்த்ததும் அவள் தன் கையிலிருந்து பர்ஸுடன் கண்களில் மாட்டியிருந்த கறுப்புக் கண்ணாடியையும் கழற்றிக் கவுண்டரில் வைத்தாள். பிறகு, என்னைப் பார்த்து, 'உங்களிடம் சந்தன சோப்பு இருக்கிறதா!' என்று கேட்டாள்.

"அப்பொழுது அவள் வைத்த கண் வாங்காமல் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். நிஜமாக...ராகவன், நிஜமாக நான் சொல்வதை நம்பு! அவளுடைய கவர்ச்சி மிகுந்த அந்தக் கருவிழிகளில் என்னதான் மந்திர சக்தி இருந்ததோ, தெரியாது. நான் மயங்கி விட்டேன்; அவள் கேட்ட கேள்வியையே மறந்து விட்டேன். நான் கேள்வியை மட்டுமா மறந்தேன்! என்னையே கூட அல்லவா மறந்து விட்டேன்! கணநேரம் அவள் என்னையே பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு ஒரு இளநகை புரிந்துவிட்டு நாணத்தினாலோ என்னமோ தலையைக் கவிழ்த்துக் கொண்டாள். குனிந்த தலை நிமிராமல் மறுபடியும் அதே கேள்வியைக் கேட்டாள்.

"அவளுடைய அந்தக் கேள்வியைக் கேட்டதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'சந்தன சோப்புத்தானே! இருக்கிறதே!' என்று திக்கித் திக்கிப் பதில் சொன்னேன்.

"'ஒரு கட்டி கொடுங்கள்!' என்றாள் அவள்.

"நான் பின்னால் திரும்பிச் சோப்புகள் வைத்திருந்த இடத்தைப் பார்த்தேன். எல்லாக் கட்டிகளும் தீர்ந்திருந்தன. உள்ளே ஒரு பெட்டி பிரிக்காமல் வைக்கப்பட்டிருந்தது.

"'இரண்டே இரண்டு நிமிஷம் இருங்கள். இதோ இன்னொரு பெட்டியைப் பிரித்து எடுத்து வருகிறேன்' என்றேன்.

"'சார், வெளியே இல்லாவிட்டால் வேண்டாம்' என்றாள் அவள்.

"'வேண்டாமாவது! ஏன் வேண்டாம்! இரண்டே இரண்டு நிமிஷம் இருங்கள். இதோ எடுத்து வருகிறேன்' என்று சொல்லிவிட்டு உள்ளே சென்று பெட்டியைத் திறந்தேன். அதிலிருந்து ஒரு கட்டியை எடுத்து அவளிடம் கொடுத்து, 'இந்தாருங்கள் சோப்பு!' என்றேன்.

"நான் அவ்வளவு தூரம் அக்கறையுடன் வியாபாரத்தைக் கவனிப்பதைக் கண்டு தானோ என்னமோ, அவள் இலேசாகச் சிரித்தாள். பிறகு, 'விலை என்னவோ!' என்று கேட்டாள்.

"என் மனம் மறுபடியும் குழம்பியது. 'இவளுக்கு என்ன விலை சொல்லலாம்!' என்று நான் யோசித்தேன். 'பதினாறு அணா சொல்லிவிட்டால் என்ன!' என்று எண்ணம் எழுந்தது. ஆனால் என் மனம் கேட்கவில்லை. காசைக் காட்டிலும் பிறிதொரு பொருளை என் மனம் விரும்பியது. ஆமாம், என்ன கேட்கலாம்! ஒரு ரூபாய் கேட்பதா! இல்லை, இரண்டு ரூபாய்தான் கேட்பதா!... உண்மையைச் சொல்கிறேன், ராகவன்! அவளிடம் என்ன கேட்பது என்று எனக்கு எவ்வளவோ மண்டையை உடைத்துக் கொண்டும் தோன்றவில்லை. வெகுநேரம் வரை நான் பேசாமலே இருந்தேன். அவளுடைய அழகிய மெல்லிய விரல்கள் சோப்புக் கட்டியுடன் விளையாடிக்



பம்பாய் கலாநிலயத்தார் ஏப்ரல் 4-ந் தேதியன்று ஸ்ரீ எஸ். வி. சௌந்தரராஜன் எழுதிய 'பெண் தெய்வம்' என்ற நாடகத்தைச் சிறப்பாக நடித்தனர். அந்த நாடகத்தில் போலீஸ் இன்ஸ்பெக்டராக நடித்த நாதன் அவர்களையும், போலீஸ்காரர்களாக நடித்த ராமகிருஷ்ணன், கே. ஆர். விசுவநாத் ஆகியவர்களையும் இந்தப் படத்தில் காணலாம்.

கொண்டிருந்தன. நானோ இவ்வளவு நேரம் யோசனை பண்ணியும் அவளிடம் என்ன கேட்டு வாங்குவது என்று முடிவுக்கு வர முடியாமல் தவித்துக் கொண்டிருந்தேன்.

"கடைசியில் என்னை அறியாமல் என் வாயிலிருந்து 'ஒரு ரூபாய் காலணா கொடுங்கள்!' என்ற சொல் வெளிவந்தது. நான் விலைப்பட்டியல் கொடுக்கக்கூட மறந்து விட்டேன்.

"அவள் பர்ஸிலிருந்து ஒரு ரூபாய் நோட்டை எடுத்து என்னிடம் நீட்டினாள். என் விரல்கள் அவள் கையிலிருந்து அந்த நோட்டை வாங்கிக் கொண்டன. ஆனால் அப்பொழுதும் என் விழிகள் அவளுடைய வட்டக் கரு விழிகளிலேயே லயித்திருந்தன.

"'கட்டாயம் காலணா கொடுத்துத்தான் ஆக வேண்டுமோ!' என்று அவள் கேட்ட கேள்வி என்னைத் தூக்கி வாரிப் போட்டது.

"என் மனத்தில் என்ன யோசனை ஓடிக்கொண்டிருந்ததோ, தெரியாது. 'கட்டாயம் கொடுத்துத்தான் ஆகவேண்டும். ரூபாய்க்குக் காலணா சர்க்கார் விற்பனை வரி வாங்குகிறதல்லவா!' என்றேன். அதற்குமேல் அதிகமாக நான் வாய் கொடுக்கவில்லை.

"அவள் அதற்குமேல் ஒன்றும் பேசவில்லை. தன் பர்ஸைத் திறந்து ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை எடுத்துக் கவுண்டரின் மேல் வைத்தாள். பிறகு, 'இந்தாருங்கள், உங்கள் விற்பனை வரியை எடுத்துக் கொண்டு மிச்சத்தைக் கொடுங்கள்!' என்றாள்.

நினைவு வைத்துக் கொண்டுதான் ஆகவேண்டும். நீங்கள் பள்ளிக்கூடத்துப் பாடங்களை நினைவு வைத்துக் கொள்கிறீர்கள் அல்லவா! அதே போல......' என்றேன் நான்.

"மறுபடியும் அவளுடைய அந்த இளநகை உதடுகள் முழுவதும் படர்ந்து பரவியது. 'சரி, சார்! நினைவிருந்தால் நானேக்கே உங்களுடைய விற்பனை வரியைக் கொண்டு வந்து கொடுத்து விடுகிறேன்!' என்று சொல்லி விட்டுச் சோப்புக் கட்டியைப் பையில் எடுத்து வைத்துக்கொண்டு அங்கிருந்து புறப்பட்டாள்.

"'இதோ பாருங்கள்! நானேக்கு உங்களை எதிர் பார்ப்பேன்!' என்று போய்க் கொண்டிருந்த வளைக் கூப்பிட்டு நிறுத்திச் சொன்னேன்.

"அசட்டுத் தைரியத்தில் ஏதோ சொல்வதைச் சொல்லி விட்டேன். அவளும் உதடுகளில் இனிய புன்னகை தவழ என்னை ஒரு முறை பார்த்து விட்டு அங்கிருந்து சென்று விட்டாள். அவள் போனபின்தான் எனக்கு 'ஏனடா சொன்னோம்!' என்று தோன்றியது. நான் அதை எண்ணி மிகவும் மன வருத்தப்பட்டேன். நான் சொன்ன வாக்கியத்தைத் திரும்பத் திரும்ப நினைத்துப் பார்த்து மனம் வெதும்பினேன். அவள் என்ன நினைத்தாளோ, யார் கண்டார்கள்!" என்றான் சுந்தரம்.

"அப்படியா! இன்றைக்கு அவளைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாயா!" என்று கேட்டான் ராகவன், அந்தக் காதல் கதையைக் கேட்டபின் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டவாறு.

உனக்கு எப்படித் தெரியும்! ஒரு வேளை உனக்கும் பித்தம் கித்தம் தலைக்கேறி விட்டதா, என்ன! பாவம், அவன் உன்னிடம் ஒரு சந்தன சோப்பு வாங்கிக்கொண்டு போனதும் போதும், நீ வீணில் அவனுடைய உயிரை வாங்குவதும் போதும்!'' என்றான்.

சுந்தரம் சிரித்துவிட்டு, "எனக்கு என்னவோ தெரியவில்லை. வந்து......'' என்று ஆரம்பித்தான்.

அதற்குள்ளாக ராகவன், "சரி, அப்பா! நம்பிக் கொண்டிரு. நான் தடை செய்யவில்லை'' என்றான். அடுத்த சில விநாடிகளுக்கெல்லாம், "நான் வருகிறேன்'' என்று விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து தன் வீட்டுக்கும் புறப்பட்டுவிட்டான்.

## 2

மறுநாள் ராகவன் வெகுநேரம் வரை தன் காரியாலயத்து அலுவல்களில் அகப்பட்டுத் திண்டாடிக் கொண்டிருந்தான். திரும்பும் பொழுது துரதிர்ஷ்டவசமாக மோட்டார் சைக்கிள் ரிப்பேராகி விடவே, அவன் நடந்தே வீட்டுக்கு வரும்படியாகி விட்டது. சுந்தரத்தைக் காணக் கூட அவனால் போக முடியவில்லை. ஆனால் இரவில் படுக்கையில் படுத்தபின் வெகு நேரம் வரை சுந்தரத்தைப் பற்றியே யோசனை செய்து கொண்டிருந்தான். சுந்தரத்துக்கும் அவனுக்கும் அவ்வளவு ஒன்றும் நெருங்கிய நட்பு இல்லை. சாதாரணச் சிநேகம்தான். ஆனால் சுந்தரம் அவனிடம் ஒரு விஷயத்தையும் ஒளித்து மறைத்துப் பேசினதில்லை. ஒவ்வொரு மாதமும் இரண்டொரு பெண்களுடன் அவனுக்கு நெருங்கிப் பழகும் பாக்கியம் ஏற்படும். பார்ப்போர் கண்களுக்கு அவர்களிருவருக்கும் அப்படி நெருங்கிப் பழகுவது காதலாகக் காட்சியளிக்கும். பிறகு அது தானாகவே மறைந்தும் விடும்.



சுந்தரத்தின் நிலைமை இப்படி இருந்தது. ஆனால் ராகவனின் நிலைமையோ அதற்கு முற்றிலும் நேர் மாறாக இருந்தது. இன்றுவரை அவனுக்கு ஒரு மெல்லியலாளின் கைஸ்பரிசம் படும் பாக்கியம்கூட ஏற்படவில்லை. அவன் வாழ்க்கை மேடு பள்ளமும் குன்றும் குழியும் இல்லாத நேர் பாதையைப் போலிருந்தது. அதுவும் ஜன சஞ்சாரமும் ஜனச் சந்தடியும் அற்ற பாதையைப் போல! வாழ்க்கையின் அந்த அமைதியிலும் அவனுடைய உள்ளத்தில் சிற்சில சமயம், 'நாமும் ஏன் ஒரு எழிலரசியின் அன்புத் தளையில் கட்டுண்டு பொழுது போக்கக் கூடாது!' என்று தோன்றும். 'அன்புத் தளையில் கட்டுப்படா விட்டாலும் ஒரு அழகியுடன் காதல் பேச்சாவது பேசக் கூடாதா! அதில் என்ன தவறு!' என்று எண்ணுவான்.

இன்றும் நினைவு அவனை அந்த யோசனையில் கொண்டு ஆழ்த்தியது. எந்தப் பெண்ணைத் தேர்ந்தெடுக்கலாம் என்று அவன் யோசித்தான். 'அவன் தங்கை படிக்கும் கல்லூரியில் அவளுக்கு எத்தனையோ தோழிகள் உண்டு. அவர்களில் எத்தனையோ பேர் அவனுடைய தங்கை தங்கத்துடன் அவனுடைய வீட்டுக்கு அடிக்கடி வந்து போய்க் கொண்டிருந்தார்கள். அவர்களில் ஒருத்தியை அவன் ஏன் தேர்ந்தெடுக்கக் கூடாது! லீலா, நிர்மலா, மீனாக்ஷி, மீனலோசனி, சரோஜா, தேவயானி என்று இன்னும் எத்தனையோபேர் இருக்கிறார்கள். இவர்களில் யாராவது ஒருத்தியைத் தேர்ந்தெடுத்துக் கொண்டால் போயிற்று. அப்புறம் சுந்தரத்தைப் போல் அவன் ஒவ்வொரு மாதமும்...'' அவன் அந்த நினைவில் தன்னை மறந்தான்.

அதற்குப் பிறகு தனக்குத் தகுந்த காதலி ஒருத்தியைத் தேர்ந்தெடுக்கும் விஷயத்தில் அவன் மும்முரமாக முனைந்தான். ஒவ்வொரு பெண்ணையும் வெகு உன்னிப்பாகவும் நுணுக்கமாகவும் கவனித்தான். அவர்களுடைய முகத் தோற்றத்தையும் ரூபலாவண்யத்தையும் வெகு சிரமப்பட்டுத் தன் நினைவில் ஏற்றிப் பதிய வைத்துக் கொள்ளவும் முயன்றான். ஆனால் மிகவும் வருந்தத்தக்க விஷயம் என்னவென்றால், அவன் பார்த்த பெண்களில் ஒருத்தியாவது சந்திரலோகத்துச் சந்திரமுகியாகவோ, வானுலகத்து வனமதியாகவோ, இந்திரபுரியின் அரம்பையர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கக் கூடி



மனைவி :—என்ன, மூன்று மணி நேரமாக உங்களைக் காணவில்லையே !
கணவன் :—உன் பாட்டியினிடம் "சௌக்கியமா ?" என்று விசாரித்தேன், அவ்வளவுதான் !

யவர்களாகவோ அவனுக்குத் தோற்றமளிக்கவில்லை. ஒருத்தியின் கருவிழிகளாவது ஏரியின் ஆழத்தையோ சோனையில் மோதிச் சுழலும் சுழிகளின் சுழற்சிகளையோ நினைவுறுத்துவதாகவும் அமையவில்லை.

வெகு நேரம் கழித்து அவனுக்கு ஒரு விசித்திரமான உபாயம் தோன்றியது. 'சுந்தரம் எந்தப் பெண்ணின் காதல் கட்டில் சிக்குண்டு வாழ விரும்புகிறானோ, அந்தப் பெண்ணையே நாமும் காதலிக்கத் தொடங்கிவிட்டால்...!' என்பதுதான் அவனுக்குத் தோன்றிய அந்த உபாயம். அவனுடைய கருவிழிகளின் அழகைப் பற்றியும் அப்ஸரஸை நிகர்த்த அவளுடைய எழிலுருவத்தைப் பற்றியும் சுந்தரம் வாய் ஓயாமல் வர்ணிக்கிறானே ! அவளுடைய அந்தக் கரு விழிகளுடன் என்னுடைய இந்தக் கரு விழிகள் கலந்தால்...! அவனுக்குத்தன் அழகில் அவ்வளவு நம்பிக்கை இருந்தது. அதுவே அவனுக்கு எல்லா விதத்திலும் உசிதமாகவும் பட்டது. ஒரே மாதிரியான இரு கற்கள் உராய்ந்து அதனால் ஏற்படும் தீப்பொறி மற்ற கற்கள் உராய்வதனால் ஏற்படும் தீப்பொறியைவிடச் சக்தி வாய்ந்ததாகத்தானே இருக்கும் !

ஆனால்......ஆனால்......

அவனுடைய மனத்தில் இன்னொரு எண்ணம் உதயமாயிற்று. அது உதயமாகாமல் இருக்க முடியுமா ! உதயமாகாமல் இருந்தால் அவன் தன்னையும் ஒரு நண்பன் என்று சொல்லிக்கொள்ளத்தான் முடியுமா !

சுந்தரம் அவனுடைய நண்பன் ஆயிற்றே ! அவன் காதலிக்கும் ஒரு பெண்ணிடம் இவன் பேச்சுக் கொடுத்தால்......!

மாட்டான். அவன் அவ்வளவு கீழ்த்தரமானவனாக மாட்டான். அப்பப்பா ! நினைக்கவே அவனுக்கு அருவருப்பாயிருந்தது. நண்பனின் காதலி மீது வலை வீசுவதா !

இம்மாதிரி யோசனையில் அவனுக்குத் தன்னையறியாமல் தூக்கம் வந்து விட்டது.

இரவு வெகு நேரம் வரை கண் விழித்ததால் அவன் மறுநாள் காலை வெகு நேரம் வரை தூங்கி விட்டான். அதனால் அன்று ஆபீஸுக்கு அவன் மட்டம் போடும்படியாகி விட்டது.

அவன் தங்கை ஒன்பது ஒன்பதரை மணிக்குக் கல்லூரிக்குப் புறப்பட்டுப் போய் விட்டாள். காலை பத்துப் பத்தரை மணிக்குக் கண் விழித்த ராகவனுக்கு இரவு போட்ட திட்டங்களெல்லாம் ஒவ்வொன்றாக நினைவுக்கு வந்தன.

"அடுத்த ஞாயிற்றுக்கிழமை உன்னுடைய எல்லாத் தோழிகளுக்கும் ஒரு விருந்து வை!" என்று தன் தங்கை தங்கத்திடம் காலையில் எழுந்ததும் முதல் காரியமாகச் சொல்ல வேண்டும் என்று அவன் முதல் நாள் இரவே யோசனையின் முடிவில் திட்டம் போட்டிருந்தான். ஏனெனில் விருந்தை வியாஜமாக வைத்துக் கொண்டு அவர்களுடைய அழகை ஆராய்ச்சி செய்து பார்க்கும் சந்தர்ப்பம் கிடைக்கும் அல்லவா ! யாருடைய கரும் கூந்தலும் கருவிழிகளும் அவன் கவனத்தைக் கவருமோ, அவர்களுடன் அவன் தன் காதல் நாடகத்தைத் தொடங்கலாம் அல்லவா ! ஆனால் அவன் இப்பொழுது என்ன செய்ய முடியும் ! அவன் தங்கை தங்கம்தான் கல்லூரிக்கு அவன் எழுந்திருப்பதற்கு முன்பாகவே போய் விட்டாளே !

அன்று பகல்பொழுது முழுவதும் வீணாகப் பத்திரிகைகளைப் புரட்டுவதில் கழிந்தது. சாயந்திரம் கல்லூரியிலிருந்து திரும்பி வந்த தங்கம் நேரே சமையலறைக்குள் தன் தாயாரிடம் சென்று விட்டாள். ஆகவே, அவன் வேறு வழியின்றி 'டிரஸ்' செய்து கொண்டு சுந்தரத்தின் கடையை நோக்கிப் புறப்படும்படியாகி விட்டது.

ராகவனைக் கண்டதும் சுந்தரம் மலர்ந்த முகத்துடன் வரவேற்றான். "கேளேன், ராகவன்! கேளேன்! இன்று என்ன வெல்லாம் பேச்சு நடந்தது என்று கேளேன் !" என்று ஆரம்பித்தான்.

அவனுடைய அந்த வார்த்தைகளைக் கேட்டதும் ராகவன் தனது கனவுகள் அத்தனையையும் மறந்து, அவன் பேச்சில் மனத்தைப் பறிகொடுத்து விட்டான்.

"சொல்லப்பா, சொல்லு ! என்ன என்ன வெல்லாம் பேசினாய் ! சொல்லு !......ஆமாம், அவளுக்கு அந்தக் காலணா நினைவிருந்ததோ !" என்று கேட்டான் ராகவன்.

"காலணாவா !...... காலணா மட்டும்தானா அவளுக்கு நினைவிருந்தது ! இரவு முழுவதும் என் நினைவு வேறு அவளைப் புழுவாகக் குடைந்து எடுத்துக்கொண்டிருந்தது !"

"போய்!...உனக்கு இது எப்படித் தெரிந்தது!"

"எப்படித் தெரிந்ததா ! தெரிந்து கொள்ளத் தெரிந்தவர்களுக்குக் கண் மிக மிகக் கூர்மையானது, அப்பா ! உள்ளத்தில் உள்ளதை அப்படியே சலனப் படம் போலப் பார்த்து அனுபவிக்கும் அபார சக்தி அவர்களுக்கு உண்டு."—இதைக் கூறும்பொழுது சுந்தரத்தின் கண்களில் செம்மை படர்ந்தது. அவன் மேலும் தொடர்ந்தான் :

"அவள் கடைப் படி ஏறி வந்தாளோ இல்லையோ, 'நீங்கள் இரவு முழுவதும் தூங்கவில்லையா, என்ன !' என்று நான் கேட்டேன்.

"'ஏன் அப்படிக் கேட்கிறீர்கள் !' என்று கேட்கும் பார்வையில் அவள் என்னைப் பார்த்தாள்."

"உனக்கு ஜோஸியம் வரும் போலிருக்கிறதே !" என்று இடை மறித்தான் ராகவன் தன் கண்களைச் சிமிட்டியவாறே.

(அடுத்த இதழில் முடியும்)


எல்லாவித பல்வலிகளுக்கும்
பல் வெண்மை தரும்.....
உபயோகியுங்கள்
குரங்கு மார்க்
கருப்பு பல்பொடி
(REGD)
எங்கும் கிடைக்கும்
3 விதமான சைசுகள்
NOGI & CO.,
87, CHINA BAZAAR Rd, MADRAS-1


தென்னிந்தியாவின் தலைசிறந்த
டி.எஸ்.ஆர்
தயாரிப்புகள்
DASANGAM
T.S.R.&Co.
BATHING POWDER
FLOWER DUST
தசாங்கம்,
பரிமள
ஸ்நானப்பொடி
புஷ்பத்தூள்
அரகஜா
டி.எஸ்.ஆர் & கோ, கும்பகோணம்
(G. I. P.)


3 வாசனைக் கலாரத்னங்கள்
கம் கம் ஜவாஜ் * கம்பால்
* கமகர் அகர்பத்திகள்.
டி.எஸ். சுகந்தாலயா,
வாசனைத்திரவிய வியாபாரிகள், பெங்களூர்-2

# தந்தை உள்ளம்

துளசி ஐயா

கொக்கரக்கோ என்று கோழி கூவிற்று. கிழக்கு வெளுத்தது. சூரியன் உதயமானான். அதே நேரத்தில் சுந்தரமும் தன் படுக்கையை விட்டு எழுந்தான். அடுத்த கணம் அவன் வீட்டு மாடியில் காட்சி யளித்தான். அவன் கையில் பல் துலக்கும் பிரஷ் இருந்தது. ஆனால் அவன் அதை உபயோகப் படுத்தவில்லை. அவன் கண்கள் எதையோ தேடின. தன் வீட்டு மாடியை ஒட்டினாற்போல் இருந்த அடுத்த வீட்டு மாடியைப் பார்த்துக் கொண்டே இருந்தான். அதுவும் வெறும் மொட்டை மாடிதான். இருந்தாலும் அதில் எதையோ தேடினான். கணத்துக்குக் கணம் அவன் உள்ளம் யாரையோ ஆவலுடன் எதிர் பார்த்துக் கொண்டிருந்ததை அவன் முகம் தெளிவாக எடுத்துக் காண்பித்துக் கொண்டிருந்தது.

அடாடா! சுந்தரத்துக்கு என்ன நேர்ந்து விட்டது! அவன் உடல் ஏன் அப்படி ஆட வேண்டும்! அவன் கையிலிருந்து பல் துலக்கும் பிரஷ் கூடக் கீழே விழுந்து விட்டதே! அடுத்த வீட்டு மொட்டை மாடியில் அவன் எதிர்பார்த்துக் கொண்டிருந்த நங்கை உதயமாகி விட்டாள். அதைப் பார்த்துத்தான் அவன் ஒரு கணம் அப்படி நிலை குலைந்து விட்டான். அடுத்த கணம் அவன் முகம் சூரியனைக் கண்ட தாமரை மலரைப் போல் விரிந்து மலர்ந்து விட்டது.

அந்த இளம் மங்கை தன் நீண்ட கரும் கூந்தலை லேசாக அள்ளிச் செருகி யிருந்தாள். மேக வர்ணம் அவளை மூடி மறைத்திருக்கிறதோ என்று நினைக்கும்படி இருந்தது அவள் அணிந்திருந்த புடவை. வெண் முத்துக்கள் போன்ற அழகிய பற்கள் தெரிந்தும் தெரியாமலும் அவள் செம் பவள உதடுகளுக்கு நடுவில் பளபளத்துக் கொண்டிருந்தன. கைதேர்ந்த சிற்பி தன் கற்பனையெல்லாம் காட்டிச் செதுக்கிய பொற் பாவையைப் போல் கைகூப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தாள். அவள் கூப்பிய கரத்தைப் பார்த்ததும்தான் சுந்தரம் தன் சுய உணர்வைப் பெற்றான். தன்னையும் அறியாமல் கை கூப்பி வணங்கினான்.

தேயிலைத் தோட்டத்து முதலாளியான முருகப்ப தேவரின் மகளைச் சுந்தரம் அடிக்கடி பார்த்திருக்கிறான். ஆனால் அவளுடன் வாய்விட்டு ஒரு வார்த்தைகூடப் பேசியதில்லை. இருந்தாலும் அவர்கள் இருவரும் ஒவ்வொரு நாள் காலையிலும் தங்கள் தங்கள் வீட்டு மொட்டை மாடியில் இருந்த வண்ணம் பார்த்துக் கொள்வார்கள். அவர்கள் கருநீலக் கண்கள் பேசிக்கொள்ளும், உள்ளங்கள் உரையாடி மகிழும்.

அந்த காரிமணியின் விரல்கள் ஏதோ சில அபிநயங்கள் புரியும். அபிநயத்தின் 'அ, ஆ' தெரியாத சுந்தரத்துக்கு அது விளங்கியிருக்க நியாயமில்லை. ஆனாலும் அவன் கையை ஆட்டி, முகத்தைத் தேன் குடித்த நரிபோல் வைத்துக் கொண்டு அவளுக்கு அழகு காட்டுவான். இப்படி அவர்கள் கண்களினாலும் கைகளினாலும் காலை வேளைகளில் அவரவர்கள் வீட்டு மாடியிலிருந்த வண்ணம் பேசி வந்தனர். இதில் அவர்கள் அடைந்த இன்பம் அவர்கள் மலர்ந்த முகத்தில் தெரிந்தது. துள்ளும் நடையில் தெரிந்தது. இன்னும் ஒவ்வொரு அங்க அசைவிலும் தெரிந்தன.

சுந்தரம் தனக்கு வந்த கடிதங்களை யெல்லாம் வழக்கம்போல் சாவதானமாகப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தான். பீமசேனன் விளையாட்டு மன்ற வெள்ளி விழா அழைப்பிதழைப் பிரித்துப் படித்தான். அந்த அழைப்பிதழுடன் வந்திருந்த கடிதம் அவனை ஒரு உலுக்கு உலுக்கி விட்டது. தான் காண்பது உண்மைதானா என்பதை ஒருமுறை கண்ணைக் கசக்கி விட்டுப் பார்த்தான். பிறகு கடிதத்தைப் படித்தான்.

அன்புள்ள நண்பருக்கு,

பீமசேனன் விளையாட்டு மன்ற வெள்ளி விழாவை யொட்டி நடந்த பெண்கள் டென்னிஸ் விளையாட்டில் நான் கலந்துகொண்டு வெற்றி பெற்றிருக்கிறேன். இன்றைய வெள்ளி விழாவில் தங்களை எதிர்பார்க்கிறேன்.

இங்ஙனம், தங்களை ஒவ்வொரு நாள் காலை யிலும் தரிசித்து மகிழும், சகுந்தலா.

இந்தக் கடிதத்தைப் பலமுறை படித்தான். கடிகாரத்தைப் பார்த்தான். மணி பத்தாகி யிருந்தது. மீண்டும் வெள்ளி விழா அழைப்பிதழைப் பார்த்தான். மாலை ஐந்து மணிக்கு டென்னிஸ் விளையாட்டுப் போட்டியில் வெற்றி பெற்ற சகுந்தலாவுக்கு விசேஷ வெள்ளிக் கோப்பை பரிசளிக்கப்படும் என்று இருந்த வரியைப் படித்தான். உடனே மணி ஐந்தாகி விடக்கூடாதா! என்று நினைத்தான். அதற்குமேல் அவன் ஒரு கடிதத்தையும் படிக்கவில்லை.

தன்னுடைய பெட்டியிலிருந்த உடைகளை ஒவ்வொன்றாக எடுத்து அணிந்து பார்த்தான். ஒரு நல்லஉடையைத் தேர்ந்தெடுத்து வைத்துக்கொண்டான். மாடிக்கும் தெருவுக்குமாகக் குட்டி போட்ட பூனைபோல ஏறி இறங்கி வந்து கொண்டிருந்தான். அவன் மன வேகத்துக்கு ஏற்றபடி கடிகாரம் ஓடவில்லை. எப்படி ஓடமுடியும்! கடிகாரத்துக்குத் தெரியுமா சுந்தரத்தின் ஆவல்!

ஏறக்குறைய இதே நிலையில்தான் தவித்துக் கொண்டு இருந்தாள் சகுந்தலா.

** ** **

"வரவேணும்! வரவேணும்!" என்ற இனிமையான குரலைக் கேட்டுத் திரும்பிப் பார்த்தான் சுந்தரம். சகுந்தலா அகமும் முகமும் மலரக் கை கூப்பிய வண்ணம் நின்று கொண்டிருந்தாள். இதைப் பார்த்தவுடன் சுந்தரத்துக்கு ஒரு கணம் ஒன்றும் பதில் சொல்லத் தோன்றவில்லை. ஒரு அசட்டுச் சிரிப்பு சிரித்துவிட்டுப் பேசாமல் அவளுடன் சென்றான். சகுந்தலா சுந்தரத்தை அழைத்துக் கொண்டுபோய் முதல் வரிசையில் உட்கார வைத்தாள். தானும் அவனுக்குப் பக்கத்தில் இருந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டாள்.

"இந்த மன்றத்து அங்கத்தினரா யிருந்தும் நீங்கள் ஏன் இந்தப் பக்கம் தலை காட்டுவதில்லை!" என்று பேச்சை ஆரம்பித்தாள் சகுந்தலா.

"இந்த மன்றத்தில் அங்கத்தினராயிருப்பது ஒரு பெருமை. அதோடு மன்றத்துக்கு வராமலிருந்தால் இரட்டிப்புப் பெருமை. எனக்குத் தலையை மட்டும் காட்ட முடிவதில்லை. உடலையும் சேர்த்துக் கொண்டால்தான் எங்கேயாவது வர முடிகிறது!" என்று சொல்லிச் சிரித்தான் சுந்தரம். அவன் சொன்ன இயற்கையான ஹாஸ்யத்தை உணர்ந்து சகுந்தலாவும் அவனுடன் சேர்ந்து கொண்டு தன் முத்துப் பற்கள் தெரியக் கலகல வென்று சிரித்தாள்.

விழா ஆரம்பமாயிற்று. விழாவில் பேசிய ஒவ்வொருவரும் சகுந்தலாவின் திறமையை வெகுவாகப் பாராட்டிப் பேசினார்கள். அப்பொழுதெல்

லாம் சுந்தரம் மகிழ்ந்து போனான். தன்னையே பாராட்டுவதாக நினைத்துப் பூரித்தான். எல்லாரும் கை கொட்டி முடிந்ததையும் உணராமல் தான் மட்டும் தனியே கை கொட்டிக்கொண்டிருந்தான். சகுந்தலாவின் ஒரு பார்வை அவன் நிலையை உணர்த்திற்று. அதை உணர்ந்ததும் சட்டென்று தலையைக் குனிந்து கொண்டான்.

விழா முடிந்ததும் சகுந்தலாவைத் தன்னுடைய காரிலேயே ஏற்றிக் கொண்டு அவள் வீட்டில் கொண்டு போய் விட்டுச் சென்றான் சுந்தரம். ஊரெல்லாம் புகழும் பிரசித்தி பெற்ற டென்னிஸ் ஆட்டக்காரியான சகுந்தலா தன்னுடன் காரில் வருவதையும் அதைப் பிறர் பார்ப்பதையும் விட இந்த உலகில் வேறு பெருமை, புகழ் கிடையாது என்று எண்ணி அவன் உள்ளம் பூரித்தான்.

பூர்வ ஜன்மத்தில் விட்ட குறை தொட்ட குறை என்று சொல்லுவார்களே அப்படி ஏதோ இருக்க வேண்டும் என்று அவனுக்குத் தோன்றியது. சகுந்தலாவுடன் நீண்ட நாள் பழகியது போன்ற உணர்ச்சி அவன் உள்ளத்தில் நிரம்பி யிருந்தது. சகுந்தலாவுக்கும் அப்படியேதான் இருந்தது. இந்த விசித்திர உள்ளங்களின் பண்பை யாரால் உணர்ந்து கொள்ள முடியும்! இல்லை, எப்படித் தான் விவரித்துக் கூற முடியும்!

அன்று முதல் சகுந்தலாவையும் சுந்தரத்தையும் மணி நான்கு அடித்தால் பீமசேனன் விளையாட்டு மன்றத்தில் பார்த்துக் கொள்ளலாம். அவர்களிருவரும் மனத்தில் சிறிதும் களங்கமின்றி அன்யோன்யமாகப் பழகினார்கள். டென்னிஸ் மட்டையைத் தூக்கிக் கட்டி வைத்த சுந்தரம் இப்பொழுதெல்லாம் டென்னிஸ் மட்டையுடன் காட்சியளித்தான். எப்பொழுதுமே மாலை வேளையாகவே இருந்து விடக் கூடாதா! சகுந்தலாவுடன் ஆனந்தமாக டென்னிஸ் விளையாடிக் கொண்டே இருக்கலாமே என்று எண்ணினான். சகுந்தலாவோ டென்னிஸ் விளையாடக் கற்றுக் கொண்டதின் பயனை இப்பொழுதுதான் அனுபவித்ததாக எண்ணிப் பெரிதும் மகிழ்ந்து போனாள்.



பிரசித்திபெற்ற ஆட்டக்காரர்களை எல்லாம் வென்று வெள்ளிக் கோப்பைப் பரிசு கிடைத்தது கூட அவளுக்கு அவ்வளவு பெரிதாகத் தோன்றவில்லை. அரைகுறையாக ஆடும் சுந்தரத்துடன் விளையாடுவதில்தான் அவள் திருப்தி யடைந்தாள். அதுவே தான் பிறவி யெடுத்ததன் பயன் என்று கூட எண்ணினாள்.

அவர்கள் இருவரும் ஒருவர் ஆட்டத்தை ஒருவர் புகழ்ந்து கொண்டனர். சகுந்தலா தொட்டு எடுத்த பந்தாயிற்றே என்று நோகாமல் அடிப்பான் சுந்தரம். சுந்தரத்தின் பந்தாயிற்றே என்று அடிக்காமலே விட்டுவிடுவாள் சகுந்தலா.

இப்படி இவர்கள் ஆடும் ஆட்டத்தைப் பார்த்து விளையாட்டு மன்றத்தில் இருப்பவர்கள் எல்லாம் சிரிப்பார்கள். சகுந்தலா சுந்தரத்துக்கு டென்னிஸ் ஆடக் கற்றுக் கொடுப்பதாகக் கேலி செய்வார்கள்.

இப்படியாக டென்னிஸ் மைதானத்துக்குள் இருந்த இவர்களுடைய தொடர்பு பீமசேனன் விளையாட்டு மன்றத்திற்குள்ளும் பரவியது. பிறகு விளையாட்டு மன்றச் சுவர்களைத் தாண்டி மலர் குலுங்கும் பூங்கா, மகிழ்ச்சி யூட்டும் நாடகம், சினிமா முதலிய இடங்களிலும் சென்றது. கடைசியில் வழக்கம் போல எல்லாக் கதைகளிலும் வரும் காதலர்களைப் போல கல்யாணம் செய்து கொள்வதா யிருந்தால் "உங்களைத் தவிர வேறு யாரையும் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்" என்று சொன்னாள் சகுந்தலா. ஒருவருக்கு ஒருவர் வாக்குக் கொடுக்கும் அளவுக்குக் காதல் வளர்ந்து விட்டது!

இது முதலில் மன்றத்தில் உள்ள அங்கத்தினர்களுக்குத் தெரிந்தது. பிறகு அது மன்றத்துக்கு வெளியே உள்ள ஊர் மக்களுக்குத் தெரிந்தது. கடைசியில் சகுந்தலாவின் அருமைத் தந்தையாருக்கே தெரிந்து விட்டது!

சகுந்தலாவின் தந்தை ஒரு பத்தாம் பசலி. பெருந்தன்மையான சுபாவமும் அத்துடன் எடுத்ததற்கெல்லாம் சந்தேகம் கொள்ளும் சுபாவமும் உடையவர். தொட்டதற்கெல்லாம் 'புஸ்'ஸென்று கோபம் பொத்துக் கொண்டு வரும். தம்முடைய குடும்ப கௌரவத்தில் பெருமை யுடையவர். 'நான் பிறக்கும் போதே பிரபுவாகப் பிறந்தேன். பிரபுவாகவே வளர்ந்தேன். பிரபுவாகவே சாவேன்!' என்று சொல்லிக் கொள்வார். ஆனால் இரக்கமுள்ள மனமும் அருமையான குணமு முடையவர். இப்படிப் பட்டவரின் மகள் நவநாகரிக பாணியில் சுந்தரத்தோடு சுற்றுகிறாள் என்று கேள்விப் பட்டதும், அவர் உடலில் ஓடிக் கொண்டிருந்த இரத்தம் திடீரென்று சூடாயிற்று.

"சகுந்தலா! சகுந்தலா!" என்று சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடியே தொண்டை கிழியக் கத்தினார். ஒரு துள்ளுத் துள்ளி நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தார்.

"இதோ வந்துவிட்டேன், அப்பா!" என்று சொல்லிக் கொண்டே வந்தாள் அவள்.

"சகுந்தலா!"

"ஏன் அப்பா!"

"உனக்கு நான் ஒன்றும் அதிகமாகச் சொல்ல வேண்டியதில்லை. நீ வயது வந்த பெண். ஆகையால் இனி மேல் நீ வெளியே போய் வருவதைக் குறைத்துக் கொள்ள வேண்டும்......"

"அப்பா..." என்று குறுக்கிட்டாள் சகுந்தலா.

"சொல்லுவதைக் கேள். உனக்குக் கல்யாணம் ஆகும் வரையில் நீ எங்கேயும் வெளியே போகக் கூடாது" என்று கண்டிப்பாகச் சொல்லிவிட்டு துண்டை உதறித் தோளில் போட்டுக் கொண்டு, வெளியில் போய் விட்டார் சகுந்தலாவின் தந்தை.

சுந்தரம் மன்றத்தில் சகுந்தலாவை எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாந்ததுதான் மிச்சம். டென்னிஸ் ஆட்டத்தில் கவனம் செல்லாமல் பந்தை எங்கெல்லாமோ மனம் போனபடி அடித்தான்.

"என்ன ஸார், மிஸ் சகுந்தலை வரவில்லையோ!" என்றார் சுந்தரத்தின் மன வேதனையைப் புரிந்து கொண்ட விளையாட்டு மன்றத்துக் காரியதரிசி.

சுந்தரம் ஏதோ மழுப்பிப் பேசிவிட்டு, நேராகச் சகுந்தலாவின் வீடு நோக்கிச் சென்றான்.

சகுந்தலா, சுந்தரத்தின் வரவை எதிர் பார்த்து ஆவலோடு காத்திருந்தாள். நேராக அவன் அவளுடைய அறைக்குச் சென்றான்.

"ஏன் சகுந்தலா, நீ இன்று மன்றத்துக்கு வர வில்லை! உடம்புக்கு ஏதாவது!......" என்று பர பரப்போடு கேட்டான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. என் அப்பாவுக்கு நான் மன்றத்துக்குப் போவது பிடிக்கவில்லை. என்னைப் போக வேண்டாமென்று '144' தடை உத்தரவு போட்டு விட்டார்" என்று கூறி வார்த்தையை முடிப்பதற்குள்ளாகவே அவளுக்கு அழுகையே வந்து விட்டது.

"இதற்காகவா நீ வருத்தப் படுகிறாய்!" என்று கேட்டு அவளைச் சமாதானப்படுத்த முயன்றான்.

சகுந்தலா அழுதுகொண்டே இருந்தாள். அவள் முகத்தில் ஏக்கத்தின் சாயல், துக்கத்தின் கோடுகள் விளையாடிக் கொண்டிருந்தன.

அவள் அழுத முகத்தில் ஏற்பட்டிருந்த பயங்கர மாறுதலைப் பார்த்தவுடன் சுந்தரத்துக்கு என்ன பண்ணுவது என்றே தெரியவில்லை. வாய் மூடி மௌனியாகக் கற்சிலை போல் பேச்சற்று உட்கார்ந்து விட்டான்.

சற்று நேரம் அந்த அறையில் மௌனம் நிலவி யிருந்தது. அந்த மௌனத்தைக் கலைத்துக் கொண்டு சகுந்தலா பேச ஆரம்பித்தாள். "சுந்தரம்!" என்றாள்.

"உம்......!" என்றான் சுந்தரம்.

"எனக்கு அடுத்த மாதத்தில் கல்யாணம் வேறு நிச்சயித்து விட்டார் அப்பா" என்றாள். அவள் கண்களில் நீர் பொங்கியது.

சுந்தரத்தின் தலை சுழன்றது. ஆனால் தன்னை நிதானப் படுத்திக் கொண்டு. "ஏன், உனக்கு மாப்பிள்ளையைப் பிடிக்க வில்லையா!" என்று அவசியமில்லாமல் கேட்டு வைத்தான்.

"அத்தான்!......" என்று அலறினாள். இதுவரையில் அவள் சுந்தரத்தை அப்படி அழைத்ததே இல்லை. அத்தான் என்று அவள் அழைத்த ஒரு வார்த்தையில் அவளுடைய பண்பு, பாசம், அன்பு, ஆவல், எண்ணம் எல்லாமே பிரதிபலித்தது.

இந்தச் சமயத்தில் யாரோ கனைக்கும் சத்தம் கேட்கவே இருவரும் திடுக்கிட்டுத் திரும்பினர். சகுந்தலாவின் வேலைக்காரி நின்று கொண்டிருந்தாள். "எஜமான் தங்களைக் கையோடு அழைத்து வரச் சொன்னார்" என்றாள்.

"அப்பா கூப்பிடுகிறார்கள். நான் வருகிறேன். இனி உங்களை என்றைக்குப் பார்ப்பது!" என்று கேட்டாள் சகுந்தலா.



சுந்தரம் சற்று நேரம் வாய் பேசாமல் உட்கார்ந்திருந்தான்.

"நீங்கள்தான் இதற்கு ஏதா வது ஏற்பாடு செய்ய வேண்டும். அப்பா ஒரு காரியத்தைச் சொல்ல மாட்டார். சொன்னால் அதிலிருந்து மாற மாட்டார். இது வரையில் என் காரியங்கள் எல்லாவற்றிலும் எனக்குச் சுதந்திரம் அளித்து வந்த என் தகப்பனார் இதில் மட்டும் என் இஷ்டத்துக்கு ஒப்புக்கொள்ள மாட்டார்கள் போலிருக்கிறது" என்று கண்ணீரும் கம்பலையுமாகக் கூறினாள் சகுந்தலா.

இதே சமயத்தில் சகுந்தலாவின் தந்தையார் யாரிடமோ பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. 'இனிமேல் சுந்தரம் இந்த வீட்டில் கால் அடி எடுத்து வைக்கக் கூடாது' என்று கடுமை யான குரலில் கத்திக் கொண்டிருந்தார்.

அதைக் கேட்ட சகுந்தலாவும் சுந்தரமும் இடி யோசை கேட்ட நாகம்போல நடுநடுங்கிப் போய் விட்டனர். அவர்கள் முகங்கள் வெளுத்து விட்டன.

சுந்தரம் வந்த சுவடே தெரியாமல் அங்கிருந்து சென்று விட்டான். அவன் கால்கள் நடந்தனவே ஒழிய அவன் எங்கு போகிறோம் என்ற சிந்தனை யில்லாமலே சென்று கொண்டிருந்தான்.

** ** **

வாரம் ஒன்று ஓடிவிட்டது. சுந்தரம் தினம் காலையில் மாடிக்கு வருவான். அடுத்த வீட்டு மாடியை ஆவலோடு பார்ப்பான், பார்ப்பான் பார்த்துக் கொண்டே இருப்பான். அவன் யாரைப் பார்க்க விரும்பினானோ அவள், சகுந்தலா அங்கு வரவே மாட்டாள். பைத்தியக்காரன் போல் மாடியில் சுற்றி சுற்றி வருவான். பிறகு தன் காரி யங்களைக் கவனிக்கச் சென்று விடுவான்.

அன்று அவனுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. இன்று எப்படியாவது சகுந்தலா வைப் பார்த்து விடவேண்டும் என்ற தீர்மானத் தோடு கட்டிலில் படுத்துக் கிடந்தான். அவன் படுக்கை அறைச் சுவரில் மாட்டியிருந்த சகுந்த லாவின் புகைப்படம் அவனைப் பார்த்துச் சிரிப்பது போலிருந்தது. அந்த மோகனச் சிரிப்பில் மயங்கிய வண்ணம் அப்படியே கண்ணயர்ந்து விட்டான்.

அதோ சகுந்தலா வீட்டைச் சுற்றிலும் இருக் கும் காம்பவுண்டு சுவரிலிருந்து ஒரு மனித உருவம் இறங்குகிறது. சுற்றுமுற்றும் பார்க்கிறது. யாரு மில்லை. தைரியமாகச் செல்லு கிறது. ஏதோ சலசலப்பு. அந்த உருவம் தயங்கி நிற்கிறது. மறு படியும் அதே சத்தம். ஓங்கி வளர்ந்திருந்த மாமரத்தின் ஓரத் தில் தன் உருவத்தை மறைத் துக் கொள்ளுகிறது. அவ்வுருவத் தைப் பின்தொடர்ந்து மற்றொரு மனித உருவம் அந்த மரத்தை நோக்கி வேகமாக நடந்து வரு கிறது. அது ஒரு பெண் உருவம்.

"நில்!" என்ற சத்தம் கணீ ரென்று வந்தது.

முழு கருப்பு உடை அணிந்து கொண்டு, கையில் உருவிய கத்தி பளபளக்க நின்று கொண்டிருக் கது ஒரு உருவம். "ஐயோ, திருடன்! திருடன்!" என்று அலறினாள் அந்தப் பெண்.

அவ்வளவு தான். கருப்பு முக மூடி அணிந்திருந்த மனிதனின் இரும்புக் கரங்கள் அந்தப் பெண் ணைப்பற்றி இழுத்தது. "ஐயோ! என்னைக் காப்பாற்ற யவர்கள் இங்கே யாருமில்லையா!" என்று அலறினாள் அப் பேதைப் பெண்.

அந்தப் பெண் வேறு யாருமில்லை, சாட்சாத் சகுந்தலாதான். சுந்தரத்தின் காதலிதான்!

'ஆ! சகுந்தலாவுக்கா இந்த ஆபத்து' என்று துள்ளிக் குதித்து எழுந்தான் சுந்தரம். தொபுகடீ ரென்று படுக்கையிலிருந்து விழுந்தான். சுற்று முற்றும் பார்த்தான். தான் கண்டது கனவு என் பதை உணர்ந்தான். இருந்தாலும் அவன் உள்ளம் அமைதியில்லாமல் தவியாய்த் தவித்தது.

சகுந்தலாவின் தந்தைக்குச் சகுந்தலாவின்மீது எல்லையற்ற பிரியம். அவளுக்காக அவர் எதையுமே செய்யத் தயாராயிருந்தார். ஆனால் சுந்தரத்தின் குடும்பத்துக்கும் தம் குடும்பத்துக்கும் நீண்ட காலமாக இருந்து வரும் தகராறு காரணமாக அவர் சுந்தரத்தை வெறுத்தார். இது விஷயத்தில் தம் குடும்ப கௌரவம்தான் பெரிதென்று எண்ணினார். அதற்காகத் தாம் இது வரையில் கடைப்பிடித்து வந்த அர்த்தமில்லாத வீண் கௌரவத்தை விட்டுவிட அவர் விரும்பவில்லை. விஷயம் முற்றுவதற்குள் வேறு யாருக்காவது சகுந்தலாவை மணம் முடித்துவிட வேண்டும் என்று தீர்மானித்து விட்டார். அதற்காகவே தம் பங்களாக் காவல்காரனான கூர்க்காவிடம் சுந்தரத்தை வீட்டுக்குள் விடவேண்டாம் என்று உத்தரவும் போட்டிருந்தார்.

அன்று அவர் இது விஷயமாக ஒரு முடிந்த முடிவுக்கு வந்து விட்டார். அவர் பார்த்த பையன் அவர் மனதுக்குப் பிடித்து விட்டது. சகுந்தலாவின் அபிப்பிராயத்தைக் கேட்டு அவள் ஏற்றுக் கொள்ளா விட்டால் என்ன செய்வது என்று அவளைக் கேட்காமலே கல்யாணத்தை முடித்து விடுவது என்று தீர்மானித்து விட்டார். பொழுது புலர்ந்ததும் மேலே நடக்க வேண்டிய காரியங்களைத் துரிதமாகக் கவனித்து ஒரு முடிவு கட்டலாம் என்று படுத்து விட்டார்.

படுக்கையில் படுத்து விட்டாரே ஒழிய அவர் மனது என்னவோ சரியாகவே இல்லை. படுக்கையில் இப்படியும் அப்படியும் புரண்டு கொண்டிருந்தார். மணி பத்து, பன்னிரண்டு, ஒன்று, மூன்று என்று அடித்துக் கொண்டே இருந்தது. அவர் இரவு முழுவதும் தூக்கமின்றித் தவித்துக் கொண்டிருந்தார். தம் மகள் மனதுக்குப் பிடிக்காத மாப்பிள்ளையைத் தம் மருமகனாக ஏற்றுக் கொள்ள அவர் உள் மனது — அந்தராத்மா மறுத்தது! இதனால் என்ன என்ன விபரீதங்கள் ஏற்பட்டு விடுமோ என்று அவர் தந்தை உள்ளம் என்னென்னமோ கற்பனை செய்தது.

இந்தச் சமயத்தில் ஏதோ சத்தம் கேட்கவே அதைக் கூர்ந்து கவனித்தார்.

நல்ல இருட்டு. சகுந்தலா தன் அருகிலிருந்த சிறு பெட்டியை எடுத்துக் கொண்டு, கதவைத் திறந்து கொண்டு பூனையைப் போல் அடிமேல் அடி வைத்துக் கீழே இறங்கினாள்.

தோட்டத்திற்குச் சென்றதும் எதிரேயிருந்து ஒரு உருவம் மேலெழுந்து பூதம் கிளம்புவதுபோல் கிளம்பி நிமிர்ந்து நின்றது. ஒருதரம் அந்த உருவம் கனைத்தது. கனைப்புச் சத்தத்திலிருந்து சுந்தரம் தான் அந்த உருவம் என்பதை உணர்ந்து கொண்டாள். சுந்தரத்தை நோக்கி வேகமாக நடந்தாள். ஏதோ காலில் இடறி விட்டது.

'தடபுட! தடபுட!' என்று சத்தத்தோடு சகுந்தலா கால் தடுக்கிக் கைப் பெட்டியுடன் பொத்தென்று விழுந்து விட்டாள். வலி தாங்க முடியாமல் "ஆ" வென்று அலறிவிட்டாள்.

பளிச்சென்று இருவர் முகத்திலும் ஒரு 'டார்ச்' விளக்கு மின்னியது.

"ஏய்! ஏய்! நில்! நில்!" என்ற சத்தத்தோடு ஓடிவந்தான் எமதூதன்போல் காவலாளி கூர்க்கா. வீட்டை விட்டு ஓட முயன்ற சகுந்தலாவையும் சுந்தரத்தையும் பிடித்து விட்டான்.

மறுகணம், "அப்பாடா!" என்ற சத்தத்தோடு கீழே விழுந்தான் வாசு. எதிர்பாராத சுந்தரத்தின் குத்துதான் அவனை அப்படிக் கூச்சலிடச் செய்தது.

## அவர் கவலை!




அழகின் ஆதாரம்
உங்கள் சருமம் தான்
உங்கள் வதனத்திற்கு
பாதுகாப்பும் அழகும்
அளியுங்கள்
வெய்யில், புழுதி, வெப்பம், குளிர், ஈரம், மழை இவைகளிலிருந்து உங்கள் சருமத்தைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். நமது மிதமிஞ்சிய சீதோஷ்ண நிலைகளுக்கு ஏற்றதாயிருப்பதற்கென்றே ஹிமாலயா புக்கே ஸ்னோ தயாரிக்கப்பட்டுள்ளது. இதை தினமும் உபயோகித்து உங்கள் சருமத்தை மிருதுவாகவும், தெளிவாகவும் இருக்கச்செய்யுங்கள். பௌடர் பூசிக்கொள்வதற்கு முன் இதை தடவிக்கொள்ள மிகவும் பிரியப்படுவீர்கள். இதன் நறுமணத்தையும்விரும்புவீர்கள்.
HIMALAYA
HIMALAYA BOUQUET SNOW
ஹிமாலயா புக்கே ஸ்னோ
இன்னுமொரு நேர்த்தியான இராஸ்மிக் தயாரிப்பு
HBS. 8-50 TM
இராஸ்மிக் கம்: லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது



ஏப்ரல் மாதம் 14-ந் தேதி அன்று கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் "தமிழ் மாணவர் மன்றம்" ஆரம்பிக்கப் பட்டது. மன்றத்தின் நிர்வாக சபை அங்கத்தினர்களையும் மன்றத் தலைவர் ஸ்ரீ ப. த. தியாகராஜன் அவர்களையும் மேலே படத்தில் காணலாம்.

இதற்குமேல் சகுந்தலாவின் தந்தையால் இந்தக் காட்சியைப் பார்க்க முடியவில்லை.

அலறி அடித்துக் கொண்டு எழுந்தார். எழுந்த அவசரத்தில் எதிரிலிருந்த சுவரில் மூட்டிக் கொண்டார். மூட்டிக் கொண்ட வேகத்தில் அவர் தூக்கம் கலைந்தது. சுய உணர்வு பெற்றார்.

அதே கணத்தில் தம்முடைய அபிப்பிராயம் எல்லாவற்றையும் மாற்றிக் கொண்டார். தாம் இதுவரையில் பிடித்து வந்த வரட்டு கவுரவத்தை உதறித்தள்ளினார். மூன்று தலைமுறையாகக் காரணமில்லாமல் இருந்து வந்த குருட்டுத் தனத்துக்கு முற்றுப் புள்ளி வைத்து விட்டார். சுந்தரத்தையே தம்முடைய மருமகனாக ஏற்றுக் கொள்வது என்று தீர்மானித்து விட்டார். தாம் பெற்று வளர்த்த அருமை மகளின் விருப்பத்துக்கு மாறாக நடப்பதில்லை என்று சங்கல்பம் செய்து கொண்டார்.

பொழுது புலர்ந்ததும் நேரே படுக்கையை விட்டு எழுந்து பக்கத்து வீட்டுக்குச் சென்றார். சுந்தரம் அடுத்த வீட்டு மாடியைப் பார்த்த வண்ணம் நின்று கொண்டிருந்தான்.

"சுந்தரம்! சுந்தரம்!" என்று யாரோ கூப்பிடும் சத்தம் கேட்டுத் திரும்பிப் பார்த்தான். சகுந்தலாவின் அருமைத் தந்தை அங்கு நின்று கொண்டிருந்ததைப் பார்த்தான்.

"என்ன மாமா!......" என்று ஆவல் ததும்ப ஆர்வத்துடன் கேட்டான் சுந்தரம்.

"உங்கள் அன்பு என்றும் குன்றுமலிருக்க ஆண்டவன் அருள் புரிவான். நீதான் சகுந்தலைக்கு ஏற்ற கணவன்" என்று சொன்னார்.

அதே சமயத்தில் அடுத்த வீட்டு மாடியில் அப்பொழுதுதான் வந்த சகுந்தலா அந்தக் காணக் கிடைக்காத காட்சியைக் கண்குளிரக் கண்டாள். தன் தந்தை கூறிய வார்த்தைகளைக் காது குளிரக் கேட்டாள். புளகாங்கிதம் அடைந்தாள்.

# தமிழிசையும் பிரபந்தங்களும்

தமிழ் மொழி இசையின் வடிவே என்பதும், தமிழே இசையினால் தோன்றிய தென்பதும் தெள்ளிதில் உணரலாகும். "தென்னா தென்னா வென வண்டு முரல்" என்பது ஆழ்வார்கள் வாக்கு. அதினின்றே இன்றுள்ள ராக ஆலாபனைகள் தோன்றி யுள்ளன. தமிழ் மொழிக்காக, இறைவன் படுக்கையை விட்டு ஆழ்வார் பின் தொடர்ந்த கதைக்குச் சங்கச் செய்யுள்களே சான்றுகள். கூரத்தாழ்வார் என்ற பெரியாரின் குமாரர் பட்டர் என்ற வேதாந்தாச்சாரியர் நம்மாழ்வார் அருளிய பிரபந்தத்துக்கு, "குருகையர்கோன் யாழினிசை வேதத்தியல்" என்று காப்பு கூறியுள்ளார்.

ஆழ்வார்கள் தாமே, தம்முடைய பிரபந்தத்துள்

"இசையோடும் பண்ணில் பாடவல்லார்
அவர் கேசவன் தமரே"
"பண்ணார் தமிழ் ஆயிரத்துள் —
பண்ணின்பம் வரப்பாடுவார்"
"குழக்ருமவர் விளம்பும் புதுவையர்கோன்
விட்டுணு சித்தன் பாடல்"

என்றெல்லாம் கூறியுள்ளார்கள்.

ஆழ்வார்களில் தமிழின் இசைப்பண்பை யுணர்ந்தோருள் தலைவர் நாதமுனிக ளாவார். இவர் ஆளவந்தாருக்குப் பாட்டனார் என்பதும் கவிச் சக்கரவர்த்தி கம்பருடைய இராமாயண அரங்கேற்றத்திற்குத் தலைமை வகித்தார் என்பதும் பிரசித்தம். இப்பெரியார் தாமே, பிரபந்தங்களுக்கு இசை வகுத்து, தாளங்கள் நிர்ணயம் செய்துள்ளார். இன்றுங்கூட ஸ்ரீரங்கம், வில்லி புத்தூர், ஆழ்வார் திருநகரி முதலிய ஸ்தலங்களில் அரையர்கள் என்ற வைணவர்கள் தாளங்களோடு சேவித்து வருகிறார்கள்.

ஆழ்வார்களில் தலையாய நம்மாழ்வார் தாமே "பாலேய் தமிழர் இசைகாரர் பத்தர் பரவு மாயிரம்" என்றபடியால் தமிழ் இசை பால் போன்றது என்பதும் பால்போன்ற தமிழர்கள் இசைக்காரர்களாய், பரவுகின்ற ஆயிரம் தமிழ் என்றும் பொருள் கொள்ள வேண்டும். அநேக இடங்களில் "இசையோடு" என்பதினால் பிரபந்தங்களை இசையினின்றும் பிரித்தல் கூடாது என்பது தெளிவாய்த் தெரிகிறது. செந்தமிழில் பாசுரங்களைப் பெய்த ஆழ்வார்கள் இசையைக் கூட்டியே பொழிந்துள்ளார்கள். தமிழ் இசைக் கழகத்தார், தேவார திருவாசகங்களுடன் திவ்யப் பிரபந்தங்களை இசையுடன் பரப்புவதிலும் கவனம் செலுத்துவார்களா!

காஞ்பூர்
20—4—53

எஸ். பி. வரதராஜன்.

# அல்பேனியா

ஜெயமணி

உலகத்தில் யாருக்கும் தெரியாமல் எங்கேயோ மூலை முடுக்குகளில் இருக்கும் சிறிய தேசங்கள் திடீரென்று உலக மக்களின் கவனத்தை ஆகர்ஷித்து விடுகின்றன. அங்கு நடைபெறும் சம்பவங்கள் அந்த நாடுகள் உலக சரித்திரத்தில் முக்கிய இடம் பெறும்படி செய்து விடுகின்றன.

உதாரணமாகப் பாருங்கள். எதியோப்பியா நாடு ஆப்பிரிக்காவின் ஒரு மூலையில் இருக்கிறது. அதில் மொத்தம் முக்கால் கோடி ஜனங்கள்கூட இல்லை. சில ஆண்டுகளுக்கு முன் அதன் மீது இத்தாலியர் படையெடுத்து அட்டூழியங்கள் செய்ததால்தான், அந்த நாடு உலக மக்களின் அநுதாபத்துக்குப் பாத்திரமாகி உலகப் பிரசித்தி அடைந்தது.

மூன்று வருஷங்களுக்கு முன் கொரியாவைப் பற்றியும் முப்பத்தெட்டாவது அக்ஷ ரேகையைப் பற்றியும் யாருக்கும் எதுவும் தெரியாது. ஆனால் இன்றோ சர்வதேச மகா சபையிலும், உலகிலுள்ள சகல நாடுகளிலும், எல்லாப் பத்திரிகைகளிலும் மிகச் சிறிய தேசமான கொரியாவைப் பற்றியே விவாதங்கள் நடந்து வருகின்றன. மூன்றாவது உலக மகா யுத்தமா அல்லது உலக சமாதானமா என்பதே கொரியாப் பிரச்னையைப் பொறுத்திருக்கிறது என்ற அளவுக்கு அந்தச் சிறிய நாடு உலகப் 'புகழ்' பெற்றிருக்கிறது.

அது போலவே பதினாறு ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த ஒரு சம்பவம் ஐரோப்பாவிலே யாருக்கும் தெரியாமல் ஒரு மூலையிலிருந்த அல்பேனியா நாட்டை அம்பலத்தில் கொண்டு வந்து நிறுத்தி விட்டது.

1939-ம் வருஷம் இத்தாலி சர்வாதிகாரியாக இருந்த முஸோலினி அல்பேனியா மீது படையெடுத்தார். ஆயுத வலிமையற்ற மிகச் சிறிய தேசமான அல்பேனியா சில தினங்களில் வீழ்ச்சியுற்றது.

அல்பேனியா மன்னரான ஜாக், ராணியுடனும் கைக் குழந்தையுடனும் நாட்டை விட்டு ஓடநேர்ந்தது. பிறகு முஸோலினியின் கைப் பொம்மையான இத்தாலி மன்னர் மூன்றாம் விக்டர் எமானுவல் அல்பேனியாவுக்கும் மன்னரானார்.

இத்தாலியின் மேற்படி அட்டூழியம் உலக மக்களைத் திடுக்கிடச் செய்தது. அதன் காரணமாகவே அல்பேனியா உலகத்தின் கவனத்தைக் கவர்ந்தது! அல்பேனியாவை வீழ்த்திய இத்தாலியர்களின் மண்ணாசை அத்துடன் நிற்கவில்லை. அவர்கள் அடுத்துள்ள கிரீஸ் நாட்டையும் தங்கள் வசமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற நோக்கத்துடன், அதன் மீது படையெடுத்தனர். ஆனால், வீரர்களான கிரேக்கர்கள் முஸோலினியின் படைகளை முறியடித்துக் கிரீசுக்கு வெளியே விரட்டினர்; பிறகு அல்பேனியாவுக்கு வெளியேயும் அவர்களை விரட்ட முற்பட்டனர்.

*    *    *

அல்பேனிய மக்கள் அன்னியரின் ஆதிக்கத்திலிருந்து 1912-ல் தான் சுதந்திரம் பெற்றார்கள். எனினும் அவர்கள் ஐரோப்பாவில் ரோமியர்களுக்கும் கிரேக்கர்களுக்கும் முந்திய புராதன மக்கள் என்ற உண்மை சரித்திர வாயிலாகத் தெரிய வருகிறது.

பண்டைய காலத்தில் அல்பேனியாவுக்கு இலிரியா என்ற பெயர் வழங்கி வந்தது. இலிரியா என்ற வார்த்தைக்கு அல்பேனிய பாஷையில் சுதந்திரம் என்று பொருள். ஆனால் சுதந்திரம் என்ற பெயரைக் கொண்ட அந்த நாடு தொடர்ந்து இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலாக அன்னியர்களுக்கு அடிமையாக இருந்து வரும்படி நேர்ந்தது விதியின் விபரீதம் அல்லவா?

கிறிஸ்து பிறப்பதற்கு இருநூறு வருஷங்களுக்கு முன் ரோமியர்கள் அல்பேனியாமீது படையெடுத்து அதைத் தங்கள் வசப்படுத்திக் கொண்டனர்.

மத்திய காலத்திலும் அந்த நாட்டின்மீது ஸ்லேவியர்கள் படையெடுத்து ஆதிக்கம் செலுத்தி வந்தார்கள்.

கடைசியாக, சாம்ராஜ்ய வெறி பிடித்த துருக்கியர்கள் அல்பேனியா மீது படையெடுத்தனர். எனினும் அவர்கள் அல்பேனியாவை எளிதாகத் தங்கள் வசப்படுத்திக் கொண்டுவிட முடியவில்லை. ஜார்ஜ் காஸ்டிரியோடா என்ற வீர அல்பேனிய அதிபதியின் தலைமையில் அந்நாட்டு மக்கள் இருபது வருஷ காலம் துருக்கியர்களை எதிர்த்துப் போர் புரிந்தார்கள்.

அந்த வீரர் இறந்த பிறகுதான், துருக்கியர்கள் அல்பேனியாவில் வெற்றி பெற முடிந்தது. அதற்குப் பிறகும் அல்பேனிய மக்கள் அவர்களை எதிர்த்து அடிக்கடி சுதந்திர யுத்தத்தில் ஈடுபட்டு வந்தார்கள்.

போர்க்களத்தில் அல்பேனியர்களின் முதுகைப் பார்த்தவர்கள் கிடையாது;



ஜாக் மன்னர்




அல்பேனியாவில் குழந்தைகள்கூட வீரர்களாக இருக்கிறார்கள் என்றெல்லாம் மேனாட்டுக் கவிகள் அல்பேனிய மக்களை வெகுவாகப் புகழ்ந்திருப்பதிலிருந்து, அல்பேனியர்கள் அடிமைத்தனத்திலிருந்து விடுதலை பெற வெகு காலம் உக்ரமாகப் போராடினர் என்பதை ஊகித்துக் கொள்ளலாம்.

சுதந்திரப் போர் என்றைக்காவது வெற்றி பெற்றே தீரும் அல்லவா? அந்த நியதிக்கிணங்க அல்பேனியர்கள் தங்கள் சுதந்திரப் போரில் இறுதியாக வெற்றி பெற்றனர். 1912-ம் வருஷம் அவர்களுக்குத் துருக்கியர்கள் சுதந்திரம் அளிக்கும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டது.

1913-ம் ஆண்டிலே லண்டனில் நடந்த உலக வல்லரசுகளின் மகாநாட்டில் அல்பேனியாவின் சுதந்திரம் அங்கீகரிக்கப்பட்டது.

எனினும் 1914-ல் முதலாவது உலக மகா யுத்தம் மூண்டபோது அல்பேனியாவில் பலம் பொருந்திய தலைமை சர்க்கார் இராததால் இத்தாலியத் துருப்புகள் அந்த நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டன.

முதலாவது மகா யுத்தம் முடிந்த பின், அல்பேனியர்கள் தங்களுடைய தவறை உணர்ந்து தலைநகரான டிரானாவில் தலைமை அரசாங்கத்தை அமைத்துக் கொண்டனர்.

1925-ல் அல்பேனியா குடியரசாகப் பிரகடனம் செய்யப்பட்டது. அகமது பெக் ஜாக் என்பவர் மேற்படி குடியரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டார். ஆனால் மூன்று வருஷங்களுக்குப் பிறகு அல்பேனிய ஜனப் பிரதிநிதி சபை முடியரசை ஆதரித்து, ஜனாதிபதியான ஜாக்கையே அல்பேனியாவின் மன்னராகப் பிரகடனம் செய்தது.

மன்னர் தமது குடும்பத்துடன் இங்கிலாந்தில் அடைக்கலம் புகுந்தார்.

அவ்வாறாக அல்பேனியா அற்பாயுசு வாய்ந்த இத்தாலி சாம்ராஜ்யத்தின் கீழ் நாலு வருஷ காலம் இருக்க நேர்ந்தது. அல்பேனியாவின் துரதிருஷ்டம் அத்துடன் தீரவில்லை. 1943-ல் இத்தாலி நேச தேசங்களிடம் சரண் அடைந்த போது, ஜெர்மன் துருப்புகள் அந்நாட்டை ஆக்கிரமித்துக் கொண்டன.

வல்லரசுகளைத் திணற அடித்த ஜெர்மன் துருப்புகளைக் கண்டு அல்பேனியர்கள் அஞ்சவில்லை; மேற்படி துருப்புகளுக்கு அடிபணியவுமில்லை. அல்பேனிய மலைவாசிகள் என்வர் ஹோஷா என்ற ஒருபள்ளிக்கூட உபாத்தியாயரின் தலைமையில் படை சேர்ந்து ஜெர்மனியர்களை எதிர்த்தனர்.

1944-ல் நடந்த மேற்படி யுத்தத்தில் உலகமே பிரமிக்கும்படியான சம்பவங்கள் நிகழ்ந்தன. அல்பேனிய தேச பக்தர்கள் ஜெர்மன் துருப்புகளை எதிர்த்துப் போராடி, அவர்களை விரட்டியடித்து, சுதந்திரத்தையும் உலகத்தில் தங்கள் புகழையும் மீண்டும் நிலை நிறுத்திக் கொண்டார்கள்!

இரண்டாவது மகா யுத்தத்துக்குப் பிறகு ஜாக் மன்னர் மறுபடியும் அல்பேனியாவை ஆட்சி புரிய விரும்பினார். ஆனால் அவரை மன்னராக ஏற்றுக்கொள்ள அல்பேனிய மக்கள் மறுத்து விட்டனர்.

என்வர் ஹோஷா தலைமையில் அப்போது நிறுவப்பட்ட தற்காலிக அரசாங்கம், 1946ல் பொது ஜன வாக்கு எடுத்து நிரந்தரமாக்கப் பட்டது. ஸ்ரீ ஹோஷாவே புதிய அல்பேனியக் குடியரசின் ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அல்பேனியா சர்க்காரை பிரிட்டன், அமெரிக்கா, ருஷ்யா இந்த மூன்று வல்லரசுகளும் அங்கீகரித்தன.

எனினும் அல்பேனியக் குடியரசு சர்க்கார் ஆரம்பம் முதல் போல்ஷிவிக் ருஷ்யாவின் பக்கமாகவே சாய்ந்து வந்தனர்.

1948-ல் அல்பேனிய சர்க்கார் முற்றிலும் கம்யூனிஸ்ட் சர்க்காராக மாறி, ருஷ்யாவின் விரோதிகளைத் தங்களுக்கு விரோதிகளாகக் கருத முற்பட்டார்கள்.

அடுத்துள்ள யூகோஸ்லேவியா ருஷ்யாவின் தொடர்பைக் கத்தரித்துக் கொண்டது அல்

# அகில உலகச் சிறுகதைப் போட்டி

- ஏற்கெனவே முதல் தடவையாக அகில உலகச் சிறுகதைப் போட்டி நடந்தது அல்லவா! அதில் இந்தியா உள்பட உலகத்தில் உள்ள இருபத்து மூன்று நாடுகள் கலந்து கொண்டன.
- அந்தப் போட்டியில் உலகத்திலேயே முதல், இரண்டாவது பரிசு பெற்ற கதைகள் "கல்கி"யில் தொடர்ச்சியாக வெளியாகி வந்தது வாசக நேயர்கள் அறிந்த விஷயம். அவற்றைத் தவிர அந்தந்த நாடுகளில், அந்தந்த பாஷைகளில் பரிசு பெற்ற சுமார் நூறு சிறந்த கதைகளும் மொழி பெயர்க்கப்பட்டு, "கல்கி"யில் பிரசுரமாயின.
- மேற்படி போட்டி மிகவும் வெற்றிகரமாக நடந்ததால், இப்போது இரண்டாவது தடவையாக, அகில உலகச் சிறுகதைப் போட்டி நடத்த உத்தேசித்திருக்கிறார்கள்.
- இம்முறையும் அமெரிக்காவில் உள்ள பிரபல நியூ யார்க் ஹெரால்டு டிரிப்யூன் பத்திரிகையின் மேற் பார்வையிலேயே அந்தப் போட்டி நடைபெறுகிறது.
- இந்தியா தேசத்தில் மேற்படி சிறுகதைப் போட்டியை நடத்தும் பொறுப்பைப் புது டில்லி "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை ஏற்றுக் கொண்டிருக்கிறது.
- இந்தியாவில் உள்ள முக்கியமான பன்னிரண்டு பாஷைகளிலாவது, ஆங்கிலத்திலாவது மேற்படி போட்டிக்குச் சிறுகதை எழுதலாம்.
- இந்தியாவின் முக்கிய பாஷைகளில் தமிழ் மொழி ஒன்று என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. எனவே, தமிழ் எழுத்தாளர்கள் அகில உலகச் சிறுகதைப் போட்டியில் கலந்து கொள்ளலாம்.
- இந்தியாவில் எழுதப்படும் சிறந்த எட்டுக் கதைகளுக்கு "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகை மொத்தம் ரூ. 5,250 பரிசு அளிக்கும். அதில் முதல் பரிசு ரூ. 1500.
- அந்த எட்டுக் கதைகளிலிருந்து அகில உலகப் போட்டிக்கு முதல் நாலு கதைகள் அனுப்பப்படும்.
- இதில் கலந்து கொள்ளும் பத்திரிகைகள் தங்கள் தங்கள் பாஷைக் கதைகளுக்குப் பரிசு அளிக்கும். பரிசு பெறும் சகல கதைகளும் போட்டியை நடத்தும் பத்திரிகைகளில் வெளிவரும்.
- கதைகள் பிரசுரமாகி முடிந்த பின், அந்தக் கதைகளில் எது சிறந்தது என்பதை, போட்டியை நடத்தும் பத்திரிகைகளிடையே வோட்டு எடுத்து முடிவு செய்வார்கள்.
- அந்தக் கதைக்கே அகில உலகப் போட்டியின் முதல் பரிசான ஐயாயிரம் டாலர் (ரூ. 23,750) கொடுக்கப்படும்.
- பஞ்சாயத்தார்களிடம் சமர்ப்பிக்கும் கதைகளுக்கு இலக்கங்களே கொடுக்கப்படுமாதலால், எழுத்தாளர்கள் தங்கள் பெயரையோ, விலாசத்தையோ அதில் குறிப்பிடக் கூடாது.
- எனவே ஒவ்வொருவரும் தாங்கள் எழுதும் கதையில் இரண்டு பிரதிகள் அனுப்ப வேண்டும். அவற்றில் பெயரோ, விலாசமோ குறிப்பிடாமல் ஒரு பிரதி இருக்க வேண்டும்.
- அடுத்த ஜூன் மாதம் முப்பதாம் தேதிக்குள் கதைகள் அனுப்பப்பட வேண்டும்.
- பரிசு பெறாத, பிரசுரிக்கப்படாத கதைகளைத் திரும்பிப் பெற விரும்புவோர் கையெழுத்துப் பிரதியுடன் போதிய தபால் தலைகள் அனுப்ப வேண்டும். திருப்பி அனுப்புவதாக உத்தரவாதம் செய்ய முடியாது.
- தமிழ்க் கதைகளை ஆசிரியர், "கல்கி", கீழ்ப்பாக்கம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்க வேண்டும்.
- அனுப்பப்படும் சிறுகதைகள் அதிகபட்சம் நாலாயிரம் வார்த்தைகளுக்குமேல் இருக்கக் கூடாது. குறைந்தபட்சம் ஆயிரத்து இருநூற்றைம்பது வார்த்தைகள் உள்ளதாக இருக்க வேண்டும்.
- சிறுகதை அனுப்புவோர் தங்களுடைய சொந்தக் கற்பனையைக் கொண்டு எழுதப்பட்டது என்று உறுதி கூறவேண்டும். ஏற்கெனவே எந்த இடத்திலும் பிரசுரிக்கப்பட்டதல்ல என்று உத்தரவாதம் அளிக்க வேண்டும்.
- ஒரே ஆசிரியர் ஒன்றுக்கு மேற்பட்ட கதைகள் அனுப்பலாம்.
- கதைகள் எவ்விஷயத்தை வேண்டுமாயினும் அடிப்படையாகக் கொண்டிருக்கலாம். காதல், குரோதம், நன்றி, வாஞ்சை, தேசபக்தி, தியாகம், லோபம், யுத்தம், துணிகரச் செய்கை, வீரப் போர், துரோகம், கலியாணம், மரணம் ஆகிய எந்த விஷயமாயினும் சரி; உணர்ச்சிப் பெருக்கு, அமைப்புத் திறன், வாழ்க்கைப் பண்பு, நடையின் சிறப்பு, கதையின் ஓட்டம்—ஆகிய சிறு கதையின் அம்சங்களே முக்கியமாகக் கருதப்படும்.
- அகில உலகச் சிறுகதைப் போட்டிக்குப் பொறுக்கி எடுக்கப்படும் நாலு தமிழ்க் கதைகள் ஒவ்வொன்றுக்கும் ரூ. 125 வீதம் சன்மானம் அளிக்கப்படும்.
- முதலாவது அகில உலகச் சிறு கதைப் போட்டியில் இரண்டாவது பரிசு பெற்றவர் இந்தியர்தான்.
- இம்முறை மற்ற நாட்டினரைப்போல் இந்தியரும் முதற் பரிசு பெறுவதற்குச் சந்தர்ப்பம் இருக்கிறது. அவ்விதம் பரிசு பெற்று, உலகப் புகழை அடைவது இந்திய எழுத்தாளர்களின் பெரு முயற்சியையே பொறுத்திருக்கிறது.
- தயவு செய்து உறையின்மேல் "அகில உலகச் சிறுகதைப் போட்டி" என்று குறிப்பிட வேண்டுகிறோம்.
- அகில இந்தியப் போட்டிக்காகப் பஞ்சாயத்தார் தேர்ந்தெடுக்கும் நாலு கதைகளையும் அவற்றின் ஆசிரியர்கள் தாங்களாகவோ, அல்லது பிறரைக் கொண்டோ ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துத் தர வேண்டும்.
- பரிசுக்காகத் தேர்ந்தெடுக்கப்படும் கதைகளைத் தவிர மற்றக் கதைகளில் பிரசுரிப்பதற்குத் தகுதியானவை "கல்கி"யில் பிரசுரிக்கப்படும். அவற்றிற்குரிய சன்மானமும் அளிக்கப்படும்.
- இந்தப் போட்டி சம்பந்தமாக ஏற்படும் சந்தேகங்களில் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" நிர்வாக ஆசிரியர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி கூறும் தீர்ப்பே முடிவானது.

# வேலியும் குளமும்

எம். ஜீ.

பொன்னுசாமி வீட்டின் முன்னால் கும்பல் கூடியிருந்தது. ஆண் பெண் எல்லாருமாக நிறையக் குழுமி யிருந்தார்கள். இதற்கு முன் இப்படி இருந்ததில்லை.

பொன்னுசாமி வெளியே வந்தார்.

"என்ன வெள்ளையா? ஏன் இப்படி? என்ன நடந்தது? விஷயத்தைச் சொல்லு. எதற்கு இப்படித் திரண்டு வந்திருக்கிறீர்கள்?" என்று அவர் வெள்ளையனைப் பார்த்துக் கேட்டார். வெள்ளையன்தான் அந்தக் கூட்டத்துக்குத் தலைவன். அவன் சொல்லை அவர்கள் தட்ட மாட்டார்கள். அவனிடமிருந்த மந்திர சக்தி அவர்களைக் கட்டி ஆண்டு கொண்டு வந்தது. அப்படி வெள்ளையனும் தப்புத் தண்டாவழிக்குப் போகமாட்டான். நியாயத்தின் வரம்பையும் அவன் மீறியது கிடையாது. நல்லது, கெட்டது, எல்லாவற்றிற்கும் பொன்னுசாமியின் யோசனையைக் கேட்டு, அதன்படிதான் அவன் இதுவரை நடந்து வந்திருந்தான்.

"ஐயா, உங்கள் அண்ணர் செய்த காரியத்தைச் சொல்லி, பரிகாரம் தேடவே வந்திருக்கிறோம். நீங்கள் தான் எங்கள் கஷ்டத்தைத் தீர்க்க வேண்டும்" என்றான் வெள்ளையன். மற்றவர்கள் எல்லாரும் 'கப் சிப்' என்று அமைதியாக யிருந்தார்கள்.

"உங்களுக்கு நேர்ந்த கஷ்டம் என்ன? அண்ணா என்ன செய்தார் வெள்ளையா?"

"நாங்கள் குடிதண்ணீர் எடுக்கும் குளத்துக்குப் போகாதபடி செய்திருக்கிறார் பெரிய ஐயா! குளம் எங்களுக்குச் சொந்தம். குளத்தைச் சுற்றியுள்ள நிலங்கள் பெரிய ஐயாவுக்குச் சொந்தம். நீங்கள் இதை அறிந்தது தான். இருந்தாற் போலிருந்து, அவருடைய நிலத்தில், குளத்தைச் சுற்றி வேலி போட்டிருக்கிறார். நாங்கள் எப்படித் தண்ணீர் எடுக்கிறது? தலைமுறை, தலைமுறையாக எங்களுக்கு இருந்து வந்த உரிமையைப் பறிக்கப் பார்க்கிறாரே. இது நியாயமா? நீங்கள் தான் வழி சொல்ல வேண்டும்."

"அடடா. இதென்ன அநியாயம்? அவருக்கு ஏன் இப்படிப் புத்தி போயிற்று? வெள்ளையா, இதைச் சும்மா விடக்கூடாது. சமாதானமாக அவரிடம் சொன்னாலும் கேட்க மாட்டார். என்னை முகம் கொடுத்தே பார்க்க மாட்டார். இரண்டு பேருக்குமே பேச்சு வார்த்தை அற்றுப் போய் விட்டது. நியாயமாகப் போய்ச் சொல்லிப் பாருங்கள், கேட்டால் சரி. இல்லாவிட்டால் வேலியை அப்புறப் படுத்திவிட்டு, தண்ணீர் எடுக்க வேண்டியதுதான். அதன் பின்னும் வம்பு ஏற்பட்டால், கோர்ட்டு இருக்கவே இருக்கிறது. நியாயம் தேடிக்கொள்ள வேண்டியது. பெரியவருக்குக் கண்ணில்லா விட்டாலும், சட்டத்தின் கண் குருடில்லை. நீங்கள் அஞ்ச வேண்டாம். துணைக்கு நானிருக்கிறேன்."

"சரி ஐயா! நாங்கள் இவ்வளவு தூரம் பிழைத்து வருவதே உங்கள் தயவால்தான். உங்கள் யோசனைப்படியே செய்கிறோம்."

எல்லாரும் போய் விட்டார்கள். பொன்னுசாமி திண்ணையில் வந்து அமர்ந்தார். பெரியவர் ராமசாமியின் செய்கையை நினைக்க நினைக்க அவருக்கு வேதனையாக இருந்தது.

* * *

ராமசாமி வடக்கே பார்த்தால், பொன்னுசாமி தெற்கே பார்ப்பார். இத்தனைக்கும் இருவரும் பங்காளிகள் என்றுதான் பெயர். ஒருவர் முகத்தில் ஒருவர் விழிக்க மாட்டார்கள். ஒருவர் சென்ற வழியில் மற்றவர் செல்ல மாட்டார். உறவு முறையே அற்றுப் போயிருந்தது. இரு துருவங்களாகவே அவர்கள் இருந்து வந்தார்கள்.

பொன்னுசாமி பொதுஜன சேவையே லட்சியமாகக் கொண்டிருந்தார். கிராமச் சீர்திருத்தங்களில் அவர் தம் சொத்து, சுதந்திரத்தைச் செலவிட்டுக் கொண்டிருந்தார். அவரால் கிராமம் வெகுதூரம் முன்னேறியிருந்தது. பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி, நல்ல சாலைகள், சுகாதார வசதி எல்லாம் அவர் எடுத்துக் கொண்ட முயற்சிகளின் பலன் தான். சுருங்கச் சொன்னால் அந்தக் கிராமம் ஒரு குட்டி நகரமாகவே ஆகியிருந்தது. தம்முடைய பணத்தை இவ்வழிகளில் செலவிட்டு, ஜனங்கள் அடைந்த நன்மையைக் கண்டு மகிழ்ச்சி கொண்டார்.



விஜய வருஷப் பிறப்பன்று புது டெல்லித் தமிழ்ச் சங்கத்தில் குமாரி மீனுவின் நடனக் கச்சேரி சிறப்பாக நடந்தேறியது. நடன வைபவத்துக்குத் தலைமை வகித்த மத்திய சர்க்கார் மந்திரி ஸ்ரீ ஓ. வி. அளகேசன் பரதநாட்டிய மாடிய குமாரி மீனுவை ஆசீர்வதித்தார். குழந்தைக்கு நாட்டியம் பயிற்றுவித்த நடன ஆசிரியர் ஸ்ரீ கே. என். பக்கிரிசாமியையும் வெகுவாகப் பாராட்டினர்.



உபாத்தியாயர்:—ராமு. பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் எந்தக் கேள்வி கேட்டாலும் பையன்கள் சாதாரணமாக அளிக்கும் பதில் என்ன?
ராமு:—தெரியாது, ஸார்!
உபாத்தியாயர்:—நீ கெட்டிக்காரன். சரியாகப் பதில் சொல்லி விட்டாயே!

ராமசாமி, பொன்னுசாமிக்கு நேர் விரோதம். சுயநலம்தான் அவருக்குப் பெரிது. காசுடன் காசு சேர்க்கத்தான் அவருக்குத் தெரியும். ஒரு காலணாகூட நல்ல காரியத்துக்குக் கொடுக்க மனசு வராது. பொன்னுசாமி, மூக்கிரிக் கோட்டை மாதிரி ஒவ்வொன்றும் செய்து வந்தது அவருக்குப் பிடிக்கவில்லை. கிராமமே பொன்னுசாமியினால் கெட்டுப் போய் விட்டது என்ற அபிப்பிராயம் அவருக்கு. பொன்னுசாமியை மதிப்பது போல், தம்மை இந்த ஊர் ஜனங்கள் மதிக்கவில்லையே என்றுகூட அவர் எண்ணினார்.

"இந்தப் பயல் என்னத்தைக் கண்டு விட்டான், இப்படிக் குதிக்கிறான். இவனுக்கு என்ன தெரியும்? இவன் பெரிய மனுஷனா? நான் பெரிய மனுஷனா? பெரிய சீர்திருத்தத்தைக் கண்டு விட்டான் இவன். இவனை எப்படியாவது மடக்கிப் போட வேண்டும்" என்று ராமசாமி தம் கார் வாரி மூத்துவிடம் சொல்லுவார்.

மூத்துவும் அவருக்குத் தகுந்தாற்போல், ஆமாம் சாமியாக இருந்து, அவருக்கு இன்னும் தூபம் போட்டுக் கொண்டிருந்தான். பலன்; இருவருக்கும் நிராப்பகை சேர்ந்தது தான். ஒற்றுமையாக யிருந்த இரண்டு பெரிய குடும்பங்களும் பிரிந்து போயின.

ராமசாமியும், மூத்துவும் சதா ஏதாவது யோசித்த வண்ணமிருந்தார்கள். பொன்னுசாமியின் கோபத்தை மூட்டுவதற்கு வேண்டிய திட்டங்கள் போட்டுக் கொண்டிருந்தார்கள். பொன்னுசாமியும் இதுவரை சமாளித்துக் கொண்டு வந்து விட்டார்.

அவர்களது அடுத்த திட்டம்தான் குளத்தைப் பற்றியது. குளத்தைச் சுற்றிலும் வேலியும் போட்டு விட்டார்கள்.

* * *

பொன்னுசாமி சொல்லியனுப்பி யிருந்தபடி வெள்ளையன், மற்றும் சில ஊர் ஜனங்களுடன் ராமசாமியிடம் வந்தான்.

"வீண் தகராறுகள் வேண்டாம், ஐயா. இதற்கு முன் அனுமதித்தது போல், தண்ணீர் எடுக்கத் தடை போட வேண்டாம். வேலியை எடுத்து விடுங்கள். உங்களுக்குப் புண்ணியமுண்டு" என்றான் வெள்ளையன்.

"என்னப்பா, நீ சொல்லுவது? எங்கள் நிலத்தைச் சுற்றி வேலியடைத்தால், நீ யாரப்பா கேட்பதற்கு?" என்று கார்வாரி மூத்து ராமசாமிக்காகப் பரிந்து பேசினான்.

"பெரிய ஐயா சொல்லட்டும். நீங்கள் சும்மா யிருங்கள். நீங்கள் வேலி போட்டது தப்பு என்று நான் சொல்லவில்லை. உங்களுக்கு நியாயமாகத் தோன்றுவது எங்களுக்குப் பாதகம் விளைவிக்கிறது. கொஞ்சம் கருணை காட்டுங்கள் என்றுதான் கேட்கிறோம். குளத்துக்குப் போக வர இருந்த உரிமையைத் தான் கேட்கிறோம். பெரியவர்கள் நீங்களே இப்படிச் செய்தால், ஏழைகள் நாங்கள் எப்படி வாழ முடியும். தயவுசெய்து வேலியை எடுத்து விடுங்கள்" என்றான் வெள்ளையன் ராமசாமியைப் பார்த்து, இரங்கும் குரலோடு.

"வெள்ளையா, நீ வீணாக இதில் தலையிடாதே. பெரிய நியாய, அநியாயத்தைக் கண்டு விட்டவன் போல் பேச வந்துவிட்டாய். நிலத்துக்கு வேலி அவசியமாக யிருந்தது. போட்டிருக்கிறோம். உங்கள் குளம் குறுக்கே நின்றால், எங்கள் வேலையை நாங்கள் செய்யாமலிருக்க முடியுமா? வேலியை எடுக்க முடியாது. போய் வாருங்கள்" என்று தயை தாட்சண்யம் பாராது சொன்னார். அவர்கள் ஏமாற்றத்தோடு திரும்பினார்கள். மூத்து தனக்குள்ளே சிரித்துக் கொண்டான்.

"இதோடு பொன்னுசாமியும், அவருடைய ஆட்களும் தொலைந்தார்கள். சீர்திருத்தமும் தலைதூக்க முடியாது. நாம் செய்ததுதான் நல்ல வழி" என்றான் கார் வாரி மூத்து. ராமசாமி அவனை ஆமோதித்தார்.

* * *

அன்றிரவு ராமசாமி வீடு திரும்பியதும், அவர் மனைவி மரகதம் வழக்கம்போலத் தன் பழைய பல்லவியை ஆரம்பித்தாள்.

"சொந்தக் காரியம் தலை முழுகிப் போகிறாப் போல இருக்கு. அதைக் கவனிக்கக் காணோம். ஊர் விவகாரம் என்ன வேண்டியிருக்கு. ராஜத்தின் கல்யாணத்தைப் பற்றிக் கவலையைக் காணோம்" என்றாள் அவள்.

"நீ என்ன சொல்கிறாய்? காலம் வந்தால், தன்னாலேயே நடந்து விட்டுப் போகிறது? எனக்கு எல்லாம் தெரியும். நீ உன் வாயை வைத்துக் கொண்டு சும்மா யிருந்து வந்தால்

எல்லாம் தானே நடக்கும்" என்றார் அவர் மனைவி மரகதத்தைக் கடிந்த வண்ணம்.

"நாத்தனூர் பையன் நடராஜன் கையிலே இருந்தும் பிரயோசனமில்லை. நீங்கள் தான் இப்படி விரோதம் பாராட்டுகிறீர்கள். உங்கள் தம்பி வீட்டிலிருக்கும் அந்தப் பிள்ளை தான் மாப்பிள்ளை. ராஜம்தான் பெண் என்று ஊரெல்லாம் பேச்சா யிருந்தது. அதற்குக் கூட வழியில்லாமல் போய் விட்டது. நீங்கள் என்னதான் நினைத்திருக்கிறீர்கள்?" என்றாள் மரகதம்.

"நடராஜன் கிடக்கிறான், கழுதை. நாலு எழுத்து இங்கிலீஷ் படித்துவிட்டு இவன்கள் குதிக்கிறபடி குதிக்கட்டும். இவன் பி. ஏ. படித்திருக்கட்டுமே. இவனைவிட பி. ஏ. பி. எல். மாப்பிள்ளை என்னால் கொண்டுவர முடியும். அந்தக் குடும்பத்தைப் பற்றி என்னிடம் இனிமேல் பேச வேண்டாம்" என்று இந்தப் பேச்சுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைத்தார். மரகதமும் தன் வாயை அடக்கிக் கொண்டு இருந்து விட்டாள்.

* * *

நடராஜன் பொன்னுசாமியின் அக்காள் மகன். சிறுவயதிலேயே தந்தையை இழந்து, தாயுடன் மாமா வீட்டுக்கு வந்து சேர்ந்தவன். அவருடைய வளர்ப்புப் பிள்ளையாக வளர்ந்து விட்டவன். அந்த வருஷம்தான் காலேஜ் படிப்பு முடிந்து ஊருக்கு வந்திருந்தான்.

சென்ற இரண்டு மூன்று வருஷங்களாகவே நடராஜன், ராஜம் கல்யாணத்தைப் பற்றிய பேச்சு இருந்து வந்தது. நடுவில் ஏற்பட்ட தீராப் பகைதான் இதற்குத் தடை விதித்தது.

இருந்தும் பொன்னுசாமியும் சரி, அவர் குடும்பத்திலிருந்த மற்றவர்களும் சரி, அவர் எல்லாம் இத்துடன் முடிந்து விட்டது என்று எண்ணவில்லை. ராமசாமி மனம் மாறாமல் போகாது. இந்தக் கல்யாணமும் நடக்காமல் போகாது என்றுதான் நம்பிக் கொண்டிருந்தார்கள். அவர்கள் எல்லாரும் ராமசாமியிடம் ஒத்துப் போகவே விரும்பினார்கள். அதற்கென்று, அவர் போகும் தப்பான வழிக்குத் துணைபோகத்தான் அவர்களால் முடியவில்லை.

ராமசாமியின் மகள் ராஜம் "அப்பா வேறு மாப்பிள்ளை பார்த்து விடுவாரோ?" என்று அஞ்சினாள். அவள் மனத்தைக் கவர்ந்தவன் நடராஜன்தான். சின்னஞ் சிறுசா யிருந்த நாள் முதல் அவனிடம் அவளுடைய அன்பு குறையவில்லை. நாள் ஆக ஆக அவனிடம் அவள் உயிரையே வைத்திருந்தாள். பருவ காலத்தில் அதுவே அவனிடம் காதலாக வளர்ந்து பூத்துக் குலுங்கியது.

நடராஜனும் அவளைப்போன்ற மனத்தினை உடையவனாக யிருந்தான். அவளை அவனால் மறக்க முடியாது. அவளில்லாவிட்டால், அவனுக்குக் கல்யாணமே தேவையில்லை. பிரம்மச்சாரியாகவே வாழ்நாள் பூராவும் இருந்து விடவும் அவன் தயாராகி விடுவான்.

இவ்விருவரும் எத்தனை எத்தனையோ தடவைகளில் தங்கள் உள்ளங்களைப் பரிவர்த்தனை செய்து கொண்டிருந் திருக்கின்றனர். தனிமையின் சந்திப்பிலே அவர்கள் காதல் உரம் பெற்றது; செழுமையுடன் வளர்ந்தது. பயனை அடையும் நாளில், அது பட்டுப் போவதை அவர்கள் விரும்புவார்களா? விதியின் சதியா இது? இரு குடும்பங்களுக்கும் பகையை மூட்டி விட்டதே.

பகை, பகையாகவே யிருந்து விடாது. இரவிற்குப் பின் பகல் உண்டல்லவா?

இந்த நம்பிக்கைதான் ராமசாமியைத் தவிர எல்லாருடைய மனத்திலும் இருந்தது.

* * *

வெள்ளையனும், அவனுடைய ஆட்களும், பொன்னுசாமி ஏவியபடி, அவர் பக்க பலத்தோடு, வேலியை முறித்தெறிந்தார்கள். குளத்துக்கு ஆணும், பெண்ணுமாகப் போய், தண்ணீர் எடுத்து வந்தார்கள். இடையில் ராமசாமியின் ஆட்கள் தடுத்தார்கள். கலகம் விளைந்தது. அடிதடி என முற்றியது. பொன்னுசாமியின் குறுக்கீட்டால் கலகம் நின்று அமைதி நிலவியது.

மறுபடியும் ஊர்ப் பொதுக் குளத்தைச் சுற்றிப் பலமான வேலி முளைத்தது.

பொன்னுசாமியின் உதவியினால், ராமசாமி வேலி போடுவதை நிறுத்தி வைக்க, கோர்ட்டாரின் தடையுத்தரவு வாங்கப்பட்டது. அத்துடன் குளத்துக்கு, ராமசாமியின் நிலத்து வழியாகப் போய் வரும் உரிமையை நிலைநாட்ட ஜில்லா கோர்ட்டில் வழக்கு நடந்தது.



"ஏனப்பா, அந்த வண்டியே தேவலை போல இருக்கே, அது பின்னாலேயேனும் போச்சு. இது நின்னுவிட்டதே!"

"அப்படிச் சொல்லுங்க. உங்களுக்குப் பின்னாலே போகணுங்களா, உம் சட்டென்று ஒரு அரோகா போட்டலம் கொடுங்கள். அப்புறம் என் வண்டியுடன் பின்னாலே போக எதுவானாலும் போட்டி போட முடியுங்களா, பாருங்கள்!"



அடுத்த வீட்டுக்காரி :—என்ன மாமி இது? மாட்டுப் பெண் வீட்டுக்கு வந்த பிறகு கூட நீங்கள் சமையல் காரியங்களை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்கிறீர்களே! அவளைச் செய்யச் சொல்லக் கூடாதோ?

மாமி :—சமான்களின் விலைகளெல்லாம் இறங்கின பிறகுதான் அவளைச் சமைக்கச் சொல்லணும்!

இதற்கும் பொன்னுசாமிதான் சூத்திரதாரி. அவர் பணம்தான் வெள்ளையன், அவன் தெருவிலிருந்த மற்றவர்களின் பெயரால் தண்ணீர் பட்ட பாடாய்ச் செலவாகியது.

ராமசாமியும் சளைக்கவில்லை. அவரும் எதிர் வழக்காடினார். வெள்ளையன் கட்சிக்குச் செலவு ஒன்றானால், அவருக்கு ஒன்பது மடங்காகியது. ஆனால் வெற்றி அவருக்குக் கிட்டவில்லை. வெள்ளையன் கட்சிக்கு உரிமை கிடைத்தது.

ராமசாமி அத்துடன் நின்று விடவில்லை. ஹைகோர்ட்டில் அப்பீல் போட்டார். அங்கும் அவருக்கு நிறையச் செலவு. பலன்தான் பூஜ்யம். கீழ்க் கோர்ட்டின் தீர்ப்பே அங்கும் ஊர்ஜிதமாயிற்று.

* * *

ராமசாமி மனமுடைந்து போனார். வெளியே தெருவில் வரவே அவருக்கு வெட்கமாக யிருந்தது. இந்த அதிர்ச்சியை அவரால் தாள முடியவில்லை. கார் வாரி மூத்து சமயம் பார்த்து, கிடைத்த வரையில் ஆதாயம் என்று ஒதுங்கிக் கொண்டான்.

அப்பொழுதுதான் ராமசாமிக்குத் தம்முடைய தவறு புலப்பட்டது. தாம் மேற்கொண்டிருந்த வழிகள் நியாயமானதில்லை, அநியாயமானவை என்று பட்டது.

ஒவ்வொன்றையும் நினைக்க நினைக்க, அவர் மனம் வெந்து சாம்பராகியது. கவலை அவரை அழுத்திப் பிடித்தது. அவமானம் அவரைக் குன்றச் செய்தது.

நாளுக்கு நாள் அவர் மன நோயும், உடல் நோயும் அதிகரித்தது. அத்துடன் தள்ளாத வயசும் சேர்ந்திருந்தது. வைத்திய சிகிச்சையையும் மீறி விட்டதாகத் தோன்றியது அவருக்கு ஏற்பட்டிருந்த நோய். அவர் பிழைக்க மாட்டார் என்ற நிலைதான் வந்தது.

பொன்னுசாமி வைராக்கியம்! விரோதம் எல்லாம் மறந்து, பிணியால் வாடும் அண்ணனைப் பார்க்க வந்தார். அவருடன் நடராஜனும், மற்றவர்களும் வந்தார்கள்.

உள்ளே கூடத்தில், கட்டிலில் ராமசாமி படுத்திருந்தார். அவரைச் சுற்றி மரகதமும் ராஜமும் கண்ணீரும் கம்பலையுமாகக் கவலையோடு நின்று கொண்டிருந்தார்கள்.

“அண்ணா, உங்கள் உடம்புக்கு என்ன? இப்படியாகி விட்டீர்களே” என்று கவலை நிறைந்த குரலோடு பொன்னுசாமி பேசினார்.

ராமசாமி கண் விழித்தார். பொன்னுசாமியைத் திரும்பிப் பார்த்தார்.

“யார், பொன்னுசாமியா? வாடாப்பா. இப்படி வந்து உட்கார்” என்றார். அவர் கண்களில் கண்ணீர் தேங்கியது.

ஒரு நிமிஷம் அங்கே மௌனம் நிலவியது.

“பொன்னுசாமி! நான் முட்டாள். உன்னுடைய பரந்த நோக்கமும், விசால புத்தியும் எனக்கில்லை. உன்னைப் போலப் பிறருக்கு என்னால் நன்மை செய்ய முடியாமல் இருந்திருக்கலாம். தீமைகளின் பிம்பமாக இருந்து விட்டேன். எல்லாம் அந்தக் கார்வாரி மூத்து செய்த வேலை. அவன் பேச்சைக் கேட்டுக் கெட்டுப் போனேன். கெட்டவன் என்ற பெயர்தான் மிஞ்சியது. என்னை மன்னித்து விடப்பா!” என்றார் ராமசாமி பீறிக்கொண்டு வரும் அழுகையை அடக்க முடியாதவராய்.

“தம்பி! நான் பிழைக்க மாட்டேன். இது எனக்கு நன்றாகத் தெரிகிறது. ராஜத்துக்கும், நடராஜனுக்கும் கல்யாணத்தை முடித்து வைத்து விடு. எங்கே அவர்கள் இருவரையும் இப்படிக் கூப்பிடு” என்றார். அதற்கு மேல் அவரால் பேச முடியவில்லை.

ராஜமும், நடராஜனும் கிழவர் அருகில் போய் நின்றார்கள். அவர் ராஜத்தின் கையைப் பற்றி நடராஜன் கையில் வைத்தார்.

“இதுவே போதும். என் மனசு குளிர்ந்து போச்சு. கல்யாணம் ஆனது போலத்தான். அந்த ஏழை ஜனங்களுக்கு நான் செய்த கொடுமைகளுக்குப் பரிகாரமாக, குளத்தைச் சுற்றியுள்ள நிலத்தை அவர்களுக்கே பொதுச் சொத்தாக்கி விடு. நான் பாவி. அந்தப் பாட்டாளி மக்கள் செய்யும் நன்மைகளை மறந்து, அவர்கள் கண்களில் விரலை விட்டு ஆட்டிவிட்டேன். என்னை மன்னித்து விடச் சொல்லு......என் சொத்து எல்லாம் ராஜம், நடராஜன் மூலம், கிராமத்தின் நல்ல காரியங்களுக்குப் பயன் படட்டும்...” ராமசாமிக்குக் களைப்பு தட்டியது. அயர்வினால் படுக்கையில் சோர்ந்து போய்ச் சாய்ந்தார்.

“அண்ணா, நீங்கள் இப்படிச் சொல்லக் கூடாது. பிழைத்து எழுந்தான் போகிறீர்கள். ராஜம் கல்யாணத்தை நீங்கள் இருந்து நடத்தி வைக்கப் போகிறீர்கள். மற்ற மற்ற காரியங்களும் நீங்கள் பார்த்துச் செய்யத்தான் போகிறீர்கள்” என்றார் பொன்னுசாமி. அவர் இப்படி சொன்னாலும், ராமசாமி பிழைத்தெழுவார் என்ற நம்பிக்கை அவருக்கு ஏற்படவில்லை.

அதன் பிறகு பன்னிரண்டு மணி நேரம் தான் ராமசாமி உயிரோடிருந்தார்.

Edited, Printed and Published by R. Krishnamurthy at the “Kalki” Press
No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*